# வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம்

## 1 சோழர் காலம் (850–1300)



நொபொரு கராஷிமா

# வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம்

## 1 சோழர் காலம் (850 – 1300)

*நொபொரு கராஷிமா*

*தமிழகத் தொல்லியல் கழகம்*
*தஞ்சாவூர்*
*1995*

ஆசிரியர் : நொபொரு கராஷிமா, தகைமைப் பேராசிரியர், தோக்கியோ பல்கலைக் கழகம், தோக்கியோ, ஜப்பான்.
Noboru Karashima, Professor Emeritus, University of Tokyo, Tokyo, Japan.

**தமிழாக்கம் :**

**எ. சுப்பராயலு,** *தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.*

**ப. சண்முகம்,** *சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.*

**சு. இராஜகோபால்,** *தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.*

**ஆர். பூங்குன்றன்,** *தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, கரூர்.*

**இல. தியாகராஜன்,** *அரசினர் கலைக் கல்லூரி, அரியலூர்.*

**சு. இராஜவேலு,** *இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை, தென்மண்டலக் கல்வெட்டியல் பிரிவு, சென்னை.*

**மு. சிவானந்தம்,** C P A *கலைக் கல்லூரி, போடிநாயக்கனூர்.*

**விலை : ரூ. 100/-**

**நூலகப் பதிப்பு : ரூ. 150/-**

**வெளியீட்டாளர் :**
**தமிழகத் தொல்லியல் கழகம்,** மே / பா. கல்வெட்டியல் துறை,
*தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்* - 613 005.

**கணிப்பொறி மூலம் அச்சுக்கோர்த்தோர் :**
**கம்ப்யூபிரிண்ட்,** 51, *கிரி சாலை, சென்னை* - 600 017.
Ph : 827 5750 Fax : (91) (44) 826 4885

**அச்சிட்டோர் :**
**கிரியேடிவ் வொர்க்ஷாப்,** சென்னை - 600 086.

# பொருளடக்கம்

## பின்னிணைப்புகள்



## நிலப்படங்கள்

# முகவுரை

கடந்த முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தென்னிந்திய வரலாற்றாய்வில், சிறப்பாகத் தமிழக வரலாற்றாய்வில், மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தவன் என்ற வகையில், என்னுடைய கட்டுரைகள் சில தமிழாக்கம் செய்யப்பட்டு தமிழகத் தொல்லியல் கழகத்தின் சார்பில் நூலாக வெளிவருவது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது. இந்த நூலின் மையப் பிரச்சினை பண்டைய மற்றும் இடைக்காலத் தென்னகத்தில் ஏற்பட்ட சமூக, பொருளியல் வளர்ச்சியை அளந்தறிதல் ஆகும். ஐரோப்பியர் வருகை வரை ஆசிய மக்கள் வளர்ச்சியின்றி மிகத் தேக்க நிலையிலேயே இருந்தார்கள் என்று சிலரால் வற்புறுத்தப்பட்ட கருத்தில் எழுந்த ஐயப்பாடே என் ஆய்வுகளுக்கு உந்துதலாக அமைந்தது. நீலகண்ட சாஸ்திரியார் முதலிய அறிஞர்கள் தென்னிந்திய அரசியல் வரலாற்றைத் தெளிவாகவும் விரிவாகவும் எழுதியிருப்பினும் சமூக, பொருளியல் வளர்ச்சி பற்றிய அவர்களுடைய ஆய்வுகள் தேக்கநிலை ஆசியக் கொள்கையை மறுக்கப் போதுமானவையாக இல்லை.

இக்குறைபாட்டை நீக்க மூன்று நெறிகளைப் பின் பற்றியுள்ளேன். ஒன்று, மூலச்சான்றுகளுக்கு முதன்மையிடம் தரல். கல்வெட்டுச் சான்றுகளைக் கையாளுகையில் அவற்றின் மூல பாடங்களே பெரும்பாலும் பகுப்பாய்வுக்கு உட்படுத்தப் பட்டன. இரண்டாவது, இப்பகுப்பாய்வுக்கு ஓர் அறிவியல் வழி புறநோக்கு அணுகுமுறை தேவையென்ற நோக்கில் புள்ளியியல் முறை பயன்படுத்தப்பட்டது. மூன்று, குறுகிய நிலவட்டங்களையே (micro-regions) ஆய்வுக்கு அடிப்படை நில அலகுகளாகத் தேர்ந்து கொள்ளப்பட்டன. குறுநிலவட்ட அளவு ஆய்வில் தான் பிரச்சினைகளை ஆழமாகப் பார்த்து சமூக மாற்றங்களை நன்கு புரிந்துகொள்ள இயலும். இந்த அணுகு முறைகளைப் பின்பற்றியதன் விளைவாகச் சோழர் காலந்தொட்டு விஜயநகர ஆட்சிக் காலம் முடிய தென்னகத்தில் ஏற்பட்ட சமூக, பொருளியல் வளர்ச்சி பற்றி ஓரளவு தெளிவு ஏற்பட்டுள்ளது என்று இந்நூல் காட்டும்.

இவ்வாய்வுகளின் முடிவுகள் இந்திய சமூகத்தின் தனித்த வளர்ச்சியை விளக்குவதோடு “ஐரோப்பாதான் நாகரிகத்தின் மையம்” (Euro-centrism) என்ற கொள்கைப் பிடியிலிருந்து விடுபடவும் உதவும். ஆனால் அதே நேரத்தில் பழம் பெருமையைப் போற்றுவது நம் நோக்கம் அல்ல. புறநோக்கில், விருப்பு வெறுப்பின்றி வரலாற்றைப் புரிந்து கொள்வதே முதன்மை நோக்கமாகும். அண்மைக்காலத்தில் வரலாற்றாய்வில் வரலாற்று மானிடவியல், புதிய பண்பாட்டு வரலாறு என்று புதிய புலங்கள் நாடப்படுகின்றன. இருப்பினும் இந்தத் தமிழ் நூல் தமிழ்நாட்டு வரலாற்றாய்வுகளுக்கு மேலும் தெம்பையூட்டும் என்று நம்புகிறேன்.

என் ஆய்வுகளுக்கு இந்தியாவில் பல அறிஞர்களும் நண்பர்களும் உறுதுணையாக இருந்தார்கள். கல்வெட்டியல் ஆய்வாளர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். சிறப்பாக, என் கல்வெட்டியல் ஆசானாகப் போற்றும் திரு. K.G. கிருஷ்ணன், தங்கள் துறைக் கல்வெட்டியல் கருவூலங்களை ஆய்வுக்குத் தாராளமாகக் கொடுத்துதவிய திருவாளர்கள் G.S. கை, K.V. ரமேஷ், M.N. கட்டி முதலியோர், இணைந்து ஆய்வு மேற்கொண்ட திரு. சீதாராமன் என்று பலருக்கும் நான் நன்றி சொல்ல வேண்டும். முதன்முதலில் கல்வெட்டியல் துறைக்கு ஆற்றுப்படுத்தியவர் அமெரிக்கப் பேராசிரியர் பர்டன் ஸ்டெயின் என்பதையும் நன்றியுடன் நினைவு கூர்கிறேன். அடுத்து பேராசிரியர்கள் ரொமீலா தாபர், M.G.S. நாராயணன் முதலியோர் என் கட்டுரைகளைப் படித்தும், அறிவுறுத்தியும் பலவகையில் ஊக்குவித்தார்கள்.

இந்நூலில் உள்ள கட்டுரைகள் சில மித்சுபிஷி அறக்கட்டளை நல்கை உதவியுடன் நான் மேற்கொண்ட ஆய்வுத்திட்டங்களின் விளைவாகும். ஒரு திட்டத்துக்கு இந்திய வரலாற்று ஆய்வு நிறுவனம் நல்கை வழங்கியது. வேறு சில, பேராசிரியர்கள் அரா, யெனாகிஸவா ஆகியோர் ஜப்பானிய அரசு நல்கையுடன், மேற்கொண்ட திட்டங்களில் நான் பங்கேற்றதன் விளைவாகும்.

கள ஆய்வு மூலமும், கருத்துப் பரிமாற்றம் மூலமும் எனக்கு மிகவும் பழக்கப்பட்டவர்களும், என் ஆய்வுகளை நன்கு

அறிந்தவர்களும் ஆன வரலாற்றார்வலர் எழுவர் கூட்டாக இந்தத் தமிழாக்கத்தைச் செய்து அளித்துள்ளமை கண்டு மகிழ்கிறேன், நன்றி பாராட்டுகிறேன். இந்நூல் உருவாக முயற்சி எடுத்துக் கொண்ட திருவாளர்கள் எ. சுப்பராயலு, ப. சண்முகம் ஆகியோரும், நானும் கடந்த இருபது ஆண்டு களாக கூட்டாக பல ஆய்வுத் திட்டங்கள் மேற்கொண்டுள்ளோம். இக்கூட்டு முயற்சிகளில் நான் அறிந்து தெளிந்த உண்மைகள் பல. அவற்றில் சில இந்த நூல் வாயிலாக தமிழக இளைஞர்களையும் போயச் சேர்ந்தால் அது எனக்கு மிகவும் மனநிறைவைத் தரும். இந்நூலை வெளியிடும் தமிழகத் தொல்லியல் கழகத்துக்கு என் மனமார்ந்த நன்றி.

**கமகுரா நகரம், ஜப்பான்** **நொபொரு கராஷிமா**

**20.11.1994**

# மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

பேராசிரியர் நொபொரு கராஷிமா அவர்களின் வரலாற்றுப் படைப்புகளைத் தமிழில் அறிமுகப் படுத்துவதற்கு மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறோம். ஏறக்குறைய ஓர் ஆயிரம் ஆண்டுகள், அதாவது 9 ஆம் நூற்றாண்டு முதல் 18ஆம் நூற்றாண்டு வரை, தென்னகச் சமூகத்தில் ஏற்பட்ட வரலாற்று முறையான வளர்ச்சியைப் பற்றி இவர் கடந்த முப்பது ஆண்டுகளாக வெளியிட்ட கட்டுரைகளின் நூல்வடிவம் இது. இந்த நூல் இரு தொகுதிகளாக வருகின்றது. முதல் தொகுதி சோழர் காலத்தையும் இரண்டாம் தொகுதி விஜய நகர காலத்தையும் மையமாகக் கொண்டுள்ளன. ஏற்கெனவே ஆக்ஸ்ஃபோர்டு அச்சகத்தாரால் வெளியிடப்பட்ட ஆசிரியரின் இரு ஆங்கில நூல்கள் வரலாற்று மாணவருக்குப் பழக்கமானவையே. இருப்பினும் அவர் கட்டுரைகள் தமிழில் தரப்பட்டால் தமிழ் ஆர்வலர் பலருக்கும் பயன்படும் என்ற நோக்கத்தில் இந்தத் தமிழ்த் திரட்டு வெளியிடப்படுகிறது.

தமிழ்நாட்டு வரலாற்று வளர்ச்சியில் சில முக்கிய கட்டங்களை விளக்கும் இவை தமிழாக்கம் செய்யப்படுவதில் காலந்தாழ்ந்துவிட்டது என்றே சொல்ல வேண்டும் தமிழைப் பொறுத்தவரை இக்குறை பரவலாக உள்ளது. நாளுக்கு நாள் பல்கி வரும் உலக அறிவு தமிழுக்கு வந்து சேர மிகக் காலத்தாழ்வு ஏற்படுகிறது; அல்லது வருவதே இல்லை. மாணவர்கள் படிக்க விரும்பினாலும் தரமான. வரலாற்று நூல்கள் தமிழில் அதிகம் இல்லை. மேலும் பொதுவாக கல்விமுறையில் உள்ள குறைபாடுகளினால் அவர்கள் ஆங்கில அறிவும் குறைந்து வருகிறது. பிறமொழிகளைக் கற்கும் வாய்ப்பும் மிகவும் குறைவு. இந்த நிலையில் ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் உள்ள அறிவு வளர்ச்சியை தமிழுக்குக் கொண்டுவர வேண்டியது கல்வியாளரின் முக்கியமான கடமையாகும். அந்த வகையில் இத்தமிழாக்கம் ஒரு சிறு பங்கை அளிக்க முனைகிறது.

சோழர் காலத்தைப் பற்றியது இந்தத் தொகுதி. நுழைவாயிலில்' தெளிவாக்கியுள்ளபடி, பேராசிரியர் அவர்களின் ஆய்வுகள் பெரும்பாலும் சமூக, பொருளியல் வளர்ச்சியும் மாற்றமும் பற்றியே இருந்து வந்துள்ளன. பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் போன்ற முன்னோடி வரலாற்றறிஞர்கள் அரசியல் வரலாற்றை நன்கு ஆராய்ந்து தெளிவுபடுத்தியுள்ளார்கள். ஆனால் சமூக பொருளியல் வரலாற்றில் ஈடுபாடு அதிகம் காட்டவில்லை. ஆகவே முன்னோர் கருதிப் பார்க்காத அல்லது குறையாக விட்டுச் சென்ற ஆய்வுகளில் இவ்வாசிரியர் மிகுந்த அக்கறை செலுத்தி நிறைவான முடிவுகளைக் காண முயன்றுள்ளார். இந்நூலில் உள்ள கட்டுரைகள் பல நேரங்களில் வெளியிடப்பட்டிருந்தாலும் (சில முதலில் ஜப்பானிய மொழியிலும் வெளியிடப்பட்டவை) யாவற்றுள்ளும் ஒரு கருத்துத் தொடர்ச்சி இருந்தே வந்துள்ளது என்பதை மூல ஆங்கிலக் கட்டுரைகளின் முன்னுரை மற்றும் முடிப்புரைகளை நோக்கினால் தெரியும். பெரும்பாலும் ஒரு கட்டுரையின் முடிவு அடுத்த கட்டுரையின் தொடக்கமாக உள்ளதைக் காணலாம். அதாவது நீண்ட கால சமூக பொருளியல் மாற்றத்தினை அவர் எப்பொழுதும் முன்னிறுத்தியே ஆய்வைத் தொடர்ந்துள்ளார். ஆய்வுப் பொருளை சிறிய நிலவட்ட அளவுக்கு உள்பட்ட அல்லது சிறிய காலவரையறைக்கு உள்பட்ட நிகழ்வுகளாகப் பிரித்துப் பிரித்து ஆராய்ந்து வந்தார் என்றாலும் அதன் பேரெல்லைகளை அவர் எப்பொழுதும் மறக்கவில்லை. காட்டாக, 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஊர்ச் சமூகங்களைப் பார்த்த அந்த நேரம் 18ஆம் நூற்றாண்டு மிராசிதார்களைப் பற்றியும் நாட்டஞ் செலுத்தினார். குற்றெல்லை ஆய்வே (micro-level study) உண்மையான பேரெல்லை ஆய்வுக்கு (macro-level study) இட்டுச் செல்லும். மேலும் குற்றெல்லை ஆய்வு ஒப்பீட்டாய்வுக்கு மிகவும் துணைபுரியும் என்பதையும் இந்நூலில் காணலாம்.

இந்தியாவில் கல்வெட்டுச் செழிப்பு மிகுந்த பகுதி தென்னகம் ஆகும். அவற்றிலும் பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டிலேயே உள்ளன. இடைக்கால வரலாற்றுக்கு மிகுதியும் பயன்படும் இந்த ஏராளமான

கல்வெட்டுக்களை முழுமையாகப் பயன்படுத்த வழக்கமான ஆராய்ச்சி அணுகுமுறைகள் போதுவதில்லை. அந்த வகையில் ஆசிரியர் கையாண்டுள்ள புள்ளியல் முறை மிகவும் பயனுடையது. பல புதிய கருத்துவிளக்கங்கள் செய்ய இந்த முறை கைகொடுக்கிறது. பல ஆண்டுகளுக்கு முன் பேராசிரியர் சத்தியநாதையர் "தொண்டை மண்டலத்தில் மஹாசபைகள்" என்ற ஒரு சிறிய ஆனால் மிகப் புதுமையான ஆய்வில் புள்ளியல் முறையை முதன்முதலில் கையாண்டார் (*Studies in the Ancient History of Tondamandalam*). ஆனால் ஏனோ தொடர்ந்து அந்த முறையை அவரோ அல்லது மற்றவர்களோ பயன் படுத்தவில்லை. இப்பொழுது கராஷிமா அவர்கள் வழிகாட்டலின் பேரில் புள்ளியியல் முறை தமிழ்நாட்டு வரலாற்று ஆய்வாளர்களால் பரவலாகக் கையாளப்படுகிறது என்பதைக் குறிப்பிட வேண்டும். ஆயினும் இம் முறையைப் பயன்படுத்துவதிலும் சில இயக்க வரம்புகள் உண்டு. ஆய்வுப் பொருள் பற்றிய தரவுகள் குறைவாக இருந்தால் புள்ளியியல் முறை அவ்வளவாகப் பயன்படாது என்பதை ஆசிரியர் எச்சரித்துள்ளார்.

பழங்கால சமூக வளர்ச்சியின் ஒரு முக்கியக் கூறு நிலவுடைமை ஆகும். சோழர் ஆட்சியின் தொடக்க நிலையில் சமூக நிலவுடைமை நிலவியது. சோழர் காலத்தின் பிற்பாதியில்தான், அதாவது 12-13ஆம் நூற்றாண்டுகளில்தான், அதுவரை நிலவிய சமூகவுடைமை போய் தனியார் நிலவுடைமை முறை தெளிவாக வெளிப்படுகிறது என்பது கராஷிமா அவர்களுடைய முக்கிய கண்டுபிடிப்பாகும். அதற்குப்பின்பு தொடர்ந்து ஐந்து நூற்றாண்டுகள் நிலவுடைமையில் எப்படி படிப்படியாக மாற்றங்கள் நிகழ்ந்தன என்பதை இரண்டாம் தொகுதியில் தெளிவாக்கியுள்ளார்.

இம்முடிவுகள் குற்றெல்லை ஆய்வுகளின் அடிப்படையில் அமைந்தாலும் பெரும்பாலும் பொதுப்படையான முடிவுகளாகக் கொள்ளும் வகையில் உள்ளன. இவருடைய ஆய்வுகள் பெரும்பாலும் சோழமண்டலம், தொண்டைமண்டலம் ஆகிய நிலப்பகுதிக் கல்வெட்டுக்களின் அடிப்படையில் செய்தவை. இடைக்காலத் தமிழ்நாட்டு வரலாற்றில் இவ்விரு

மண்டலங்களும் முதன்மையான நிலப்பகுதிகளாக இருந்தமை இதற்கு முக்கிய காரணம். கல்வெட்டுச் சான்றுகளும் மற்ற பகுதிகளை விட இங்கு நிறையக் கிடைப்பது அடுத்த காரணம். இருப்பினும் பாண்டிமண்டலம், கொங்குமண்டலம் முதலிய பிறபகுதிக் கல்வெட்டுக்களையும் இம்முறையில் ஆராய்ந்து ஒப்பீட்டாய்வு செய்ய வேண்டிய கடப்பாடு இளந் தலைமுறையினருக்கு உண்டு. அதற்கு இந்த நூல் நிச்சயம் தூண்டுதலாக அமையும் என்று நம்புகிறோம்.

இந்தத் தொகுதியும் அடுத்த தொகுதியும் மேலே குறிப்பிட்ட இரு ஆங்கில நூல்களை ஓரளவு அடியொட்டிச் சென்றாலும், வேறுபாடுகள் பல உள்ளன. தெளிவு கருதி மூல ஆங்கிலக் கட்டுரைகளில் அடிக் குறிப்புகளில் உள்ள செய்திகள் சில இங்கு கட்டுரைப் பகுதியோடு சேர்க்கப்பட்டுள்ளன. மூலக் கட்டுரைகளின் மையக்கருத்து சிதையா வண்ணம் சில பகுதிகள் சுருக்கப்பட்டுள்ளன. சில அட்டவணைகள் வசதிக்காக பின்னிணைப்பாக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டுகள் கல்வெட்டுக்களில் பயின்றுள்ள சொல்தொடர்களிலேயே பெரும்பாலும் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆங்கில மூலத்தில் உள்ள சில கருத்துகளும், கோட்பாடுகளும் தமிழுக்குப் புதியவை. ஆகவே அவற்றைக் குறிக்க சில புதிய கலைச் சொற்கள் இந்நூலில் கையாளப் பட்டுள்ளன. (பார்க்க : பின்னிணைப்பு 8) நடைமுறையில் ஒரே பொருளைக் குறிக்க பல சொற்கள் இருந்தாலும் இங்கு சீர்மை கருதி ஒரே சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. காட்டாக, சமூகம், சமுதாயம் ஆகியவை ஒரே பொருளைக் குறித்தாலும் இந்நூலில் "சமூகம்" மட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளது. புதிய கருத்துகள் நிறைய தமிழில் வந்து பயிலப்பட்டால் தான் மொழியின் திறமும், வளமும் கூடும். வளர்ந்துள்ள உலக மொழிகளோடு ஒப்பிட்டால் தமிழில் உள்ள அகராதிகள் மிகக் குறைவு. மேலும் தமிழ் மொழியாக்கம் செய்வோருக்கு மிகவும் தேவையான ஒரு கருவி தமிழில் இல்லை; ஒரு நல்ல தமிழ் தெசாரஸ் (Thesaurus). இந்த நிலையில் இத் தமிழாகத்தில் உள்ள குறைகளைப் பாராட்டாது கருத்துப் பரிமாற்றத்தையே உளங்கொள்ள வேண்டும் என்று வேண்டுகிறோம்.

இந்நூலை வெளியிட இசைவளித்த பேராசிரியர் கராஷிமா அவர்களுக்கு நன்றிக்கடப்பாடுடையோம். இந்த நூலை ஏற்று வெளியிடஇசைந்த தமிழகத் தொல்லியல் கழகத்துக்கு நன்றி செலுத்துகிறோம். இந்த மொழியாக்கத்துக்கு எங்களுடன் இணைந்து முழு ஒத்துழைப்பு அளித்தவர்கள் திருவாளர்கள் சு. இராஜகோபால், ஆர். பூங்குன்றன், இல. தியாகராஜன், சு. இராஜவேலு, மு. சிவானந்தம் ஆகியோர். இந்நூலின் தட்டச்சுப் படியைப் படித்து மொழியாக்கத்துக்கு அறிவுரை நல்கினார் பேராசிரியர் இராம. சுந்தரம். நிலப் படங்கள் வரைந்துதவிய திரு. நா. அரங்கநாதனுக்கு நன்றி. கணிப்பொறி மூலம் அழகாகவும் நேர்த்தியாகவும் அச்சுக் கோர்த்த கம்ப்யூபிரிண்ட் நிறுவனத்தார்க்கும், விரைவாகவும் நன் முறையிலும் அச்சிட்டுதவிய கிரியேடிவ் வொர்க்ஷாப் அச்சகத்தார்க்கும் நன்றி.

எ. சுப்பராயலு

ப. சண்முகம்

# நன்றி

இந்நூலுக்கான மூல ஆங்கிலக் கட்டுரைகள் கீழ்க்குறிப்பிட்ட நூல்கள்/பருவ இதழ்களில் வெளியானவை. அவற்றைப் பயன் படுத்திக் கொள்ள அனுமதி நல்கிய உரிய பதிப்பாசிரியர், வெளியீட்டாளர் ஆகியோருக்கு நன்றி.

அதிகாரம் 1 : 'Allūr and Īsanamangalam : Two South Indian Villages of Chola Times,' *The Indian Economic and Social History Review*, III-2, 1966, and also *Proceedings of the First International Conference – Seminar of Tamil Studies – 1966*, Vol. I, Kuala Lumpur. 1968.

அதி 2 : 'The New Agrarian Order Appearing in the Lower Kaveri Valley Towards the Close of the Cola Rule', *Proceedings of the Fifth International Conference-Seminar of Tamil Studies*–1981, Vol. II, Madras, 1981.

அதி 3 : 'Land Transfer as seen in the Later Chola Inscriptions of Vedaranyam,' N. Jagadesan and S. Jeyapragasan (eds.) *Homage to a Historian: A Festschrift*, Madurai, 1976.

அதி 4 : 'The Prevalence of Private Landholding in the Lower Kaveri Valley, in the Late Cola Period and Its Historical Implications', *Studies in Socio-Cultural Change in Rural Villages in Tiruchirapalli District, Tamilnadu, India (SSCC)*, No.1, Institute for the Study of Languages and Cultures of Asia and Africa (ILCAA), Tokyo, 1980.

அதி 5 : 'The Power Structure of the Chola Rule', *Proceedings of the Second International Conference – Seminar. of Tamil Studies – 1968*, Vol. II, Madras, 1972.

அதி 6 : 'Village Community as seen in a Chola Inscription', Original Japanese Text in *Toyo-Bunka,*. Vol. 50/51, The Institute of Oriental Culture, Tokyo, 1971. Revised English version 'The Village Community in Chola Times: Myth or Reality', *Journal of the Epigraphical Society of India,* Vol. VIII, 1981.

அதி 7 : 'A Statistical Study of Personal Names in Tamil Inscriptions–Interim Report II', (co-authored by Y. Subbarayalu), *Computational Anaylses of Asian and African Languages,* No.3, ILCAA, Tokyo, 1976.

அதி 8 : Revenue Terms in Chola Inscriptions' (co-authored by B.Sitaraman), *Journal of Asian and African Studies,* No.5, ILCAA, Tokyo, 1972.

அதி 9 : 'Land Revenue Assessment in Chola Times as seen in the Inscriptions of the Thanjavur and Gangaikondacholapuram Temples', *SSCC,* No.1, ILCAA, Tokyo, 1980.

அதி 10 : 'The Pandyan Revenue Terms in the Inscriptions of Tiruchirapalli District and the Former Pudukkottai State', (co-authored by Y. Subbarayalu and P. Shanmugam), *SSCC,* No.1, ILCAA, Tokyo, 1980.

அதி 11 : 'Socio-and Agro-Economic Terms in the Inscriptions of Thanjavur District' (co-authored by B. Sitaraman), *Studies on Agrarian Societies in South Asia,* No.1, ILCAA, Tokyo, 1977.

# சோழர் ஆட்சியின் காலப்பகுப்பு முறை

| காலகட்டம் | ஆண்ட அரசர் | கிருத்துவ ஆண்டு |
|---|---|---|
| 1. | விஜயாலயன் முதல் உத்தமசோழன் முடிய | 846 – 985 |
| 2. | முதல் ராஜராஜன் முதல் அதிராஜேந்திரன் முடிய | 985 – 1070 |
| 3. | முதல் குலோத்துங்கன் முதல் 2ஆம் ராஜாதிராஜன் முடிய | 1070 – 1179 |
| 4. | மூன்றாம் குலோத்துங்கன் முதல் 3ஆம் ராஜேந்திரன் முடிய | 1179 – 1279 |

# சொற் குறுக்கங்கள்

அ.ஆ : அரச ஆணை

அகு : அடிக்குறிப்பு

இக : இந்தியக்கல்வெட்டு ஆண்டறிக்கை *(Annual Report on Indian Epigraphy)*

இகூ : இரண்டின் கூடுதல்

எஇ : எபிகிராஃபியா இண்டிகா *(Epigraphia Indica)*

தெக : தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் *(South India Inscriptions)*

மொ : மொத்தம்

யா : யாண்டு

தொ : தொகுத்தோர்

அரசர் பெயர், மாவட்டப் பெயர் ஆகியவற்றின் குறுக்கங்களுக்கு பார்க்க : பின்னிணைப்பு 3, பக். 164.


76°
78°
16°
18°
14°
12°
10°
80°
பூனெ
மஹாராஷ்டிரம்
வாரங்கல்
சோலாப்பூர்
கல்யாணி
ஹைதராபாத்
கோதாவரி
பீஜாப்பூர்
ஆந்திரப்
ஏலூரு
(வேங்கி)
வாதாபி
கிருஷ்ணா
குண்டூர்
மசூலிப்பட்டினம்
பனாஜி
பிரதேசம்
துங்கபத்திரை
ஹம்பி
(விஜயநகர்)
பெண்ணாறு
நெல்லூர்
கருநாடகம்
பெனுகொண்டை
திருப்பதி
சந்திரகிரி
சித்தூர்
ஹளேபீடு
(துவார சமுத்திரம்)
பெங்களூர்
சென்னை
மங்களூர்
காஞ்சிபுரம்
செங்கல்பட்டு
காவேரி
மைசூர்
பாண்டிச்சேரி
திருக்கோயிலூர்
சேலம்
சிதம்பரம்
கள்ளிக்கோட்டை
தமிழ்
நாடு
கோயம்புத்தூர்
லால்குடி
திருச்சிராப்பள்ளி
தஞ்சாவூர்
புதுக்கோட்டை
வேதாரண்யம்
கொச்சி
மதுரை
யாழ்ப்பாணம்
மாநிலத் தலைநகரங்கள்
பிற ஊர்கள்
மாநில எல்லைக் கோடு
200மீ. க்கு உட்பட்ட பகுதி
0 50 100 150
கிலோ மீட்டர்கள்
கொல்லம்
ராமேஸ்வரம்
ஸ்ரீலங்கா
திருநெல்வேலி
திருவனந்தபுரம்
அனுராதபுரம்
பொலன்னறுவை
கன்னியாகுமரி

*1 தென் இந்தியா*

# நுழைவாயில்

## குறிக்கோளும் அணுகுமுறையும்

இந்த நூலின் முக்கிய நோக்கம் தென்னிந்தியச் சமூகத்தில் ஏற்பட்ட வரலாற்று வளர்ச்சி அல்லது மாற்றத்தை ஆய்ந்தறிதல் ஆகும். சென்ற நூற்றாண்டில் என்றி மெயின், காரல் மார்க்சு போன்ற ஐரோப்பிய அறிஞர்கள், பண்டைய இந்தியச் சமூகம் தன்னிறைவுக் கிராம சமூகத்தை அடிப்படையாகக் கொண்டிருந்ததால் தேக்க நிலையிலேயே இருந்தது; மேற்கத்திய நாடுகள் போல் வரலாற்றியல் வளர்ச்சியை இந்தியாவில் காணல் அரிது என்று விவாதித்துச் சென்றனர். அவர்கள், பெரும்பாலும் காலத்தால் பிந்திய ஆங்கிலேய கிழக்கிந்தியக் கம்பெனியின் அலுவலர் உண்டாக்கிய ஆவணங்களை அடிப்படைச் சான்றுகளாகக் கொண்டனர். மாறாக, என் ஆய்வுகளில் சமகால ஆவணங்களான கல்வெட்டுக்கள் தரும் சான்றுகளின் அடிப்படையில் தேக்க நிலைச் சமூகம் பற்றிய கொள்கையை மறு ஆய்வு செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன்.

ஏற்கனவே தேக்கநிலைச் சமூகக் கோட்பாடு பற்றிப் பலர், குறிப்பாக மார்க்சிய வரலாற்றாசிரியரே, பலவாறு திறனாய்வு செய்துள்ளார்கள் என்பதை இங்கே குறிப்பிட வேண்டும். S.A. டாங்கே, பண்டைய வடஇந்தியாவில் அடிமை முறை இருந்தது என்று நிறுவ முற்பட்டு மனித இனத்தின் முரண்பாட்டு இயல் வளர்ச்சி பற்றிய மார்க்சியக் கோட்பாடு இந்தியாவுக்கும் பொருந்தும் என்று வாதிட்டார். ஆனால், இன்னொரு மார்க்சிய வரலாற்றாசிரியரான D.D. கோசாம்பி, மார்க்சியக் கோட்பாட்டைக் கண்மூடித்தனமாக இந்திய வரலாற்றுக்கும் பொருத்துதலைக் கண்டித்தார். அவர் "மேலிருந்து வரும் நிலமானிய முறை", "கீழேயிருந்து வளரும் நிலமானிய முறை" என்ற இரு புதிய கருத்துக்களை அடிப்படையாக வைத்து இந்திய வரலாற்றில் நிலமானிய முறை வளர்ச்சியை விளக்கினார். R.S. சர்மா, குப்த அரசர்கள் காலத்தில்

அதிகரித்த நிலக்கொடைகள் எப்படி நிலமானிய முறைக்கு இட்டுச் சென்றது என்று நிறுவ முற்பட்டார். முகலாயர் காலச் சமூகத்தைப் பற்றிச் சிறப்பாக ஆய்வு செய்த இர்ஃபான் அபீபு இந்திய வரலாற்றுக்கு மார்க்சின் ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாட்டின் தேவையும் பொருத்தமும் பற்றி கேள்வி யெழுப்பினார்.

வடஇந்திய வரலாற்றாய்வுகளில் ஊடாடிய மேற்சொன்ன விவாதங்கள் 1960களில்தான் தென்னிந்திய வரலாற்றைத் தாக்கின. அதற்கு முன் கிருஷ்ணசுவாமி அய்யங்கார், நீலகண்ட சாஸ்திரியார், முதலிய முன்னோடி வரலாற்றாசிரியர்கள், சோழர் முதலிய தென்னக குல மரபு ஆட்சிகளைப் பற்றி ஆய்ந்து எழுதியபோது சமூக, பொருளியல் நிலைமைகளைப் பற்றியும் ஓரளவு அக்கறை செலுத்தினார்கள். இருப்பினும் சமூக பொருளியல் மாற்றம் அல்லது வளர்ச்சி பற்றிய ஆய்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வில்லை. இந்த நிலையை மாற்றுவதைக் குறிக்கோளாகக் கொண்டு, சோழர்காலக் கல்வெட்டுக்களை ஆய்ந்து, இரு பிரச்சினைகளைத் தெளிவாக்க முயன்றுள்ளேன்.

உழவர்களின் நிலவுடைமை பற்றியது முதல் பிரச்சினை. ஆங்கிலேய அரசு ஆவணங்கள் தென்னிந்தியக் கிராமங்களில் சமூகவுடைமை நிலவியதாகக் குறிப்பிடுகின்றன. 18, 19 - ஆம் நூற்றாண்டுகளில் இருந்த இந்த நிலவுடைமை முறை சோழர் காலத்திலும் இருந்ததா என்ற கேள்வியெழுவல் இயல்பு. எனினும் இந்த இரு வேறு காலகட்டங்களில் நிலவிய சமூகவுடைமை முறைகள் ஒரே தன்மையுடையனவாக இருக்க முடியுமா? அண்மைக் காலம் வரை சமூகப் பெருக்கத்துக்கான உற்பத்தி முறை நிலவுடைமையை மையமாக வைத்தே இருந்தது. ஆகவே நிலவுடைமை முறையில் ஏற்பட்ட வளர்ச்சி அல்லது மாற்றங்களை ஆய்வதின் மூலம் சமூக வளர்ச்சி பற்றித் தெரிந்து கொள்ளலாம்.

ஆயினும், நிலவுடைமை முறையின் தன்மை ஒன்றே சமூகத்தின் தன்மை அல்லது அதன் வளர்ச்சியை நிர்ணயித்தது என்பது வெகுளித்தனமான கருத்தாகும். சமூகத்தைப் பற்றி முழுமையாகப் புரிந்து கொள்ளச் சமூக ஒருங்கிணைப்பு பற்றிப் புரிந்துகொள்ள வேண்டும். அரசு அதிகார அமைப்பு எப்படியிருந்தது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும். வேறு வகையாகச் சொன்னால், ஆளும் வர்க்கம் உழவர் மற்றும் பிற உற்பத்தி செய்வாரிடமிருந்து கூடுதல் உற்பத்தியைக் கறக்க எப்படிப்பட்ட அதிகார பலத்தைப் பயன்படுத்தியது என்பதை ஆராய வேண்டும். இது இந்த நூலில் எடுத்துக் கொண்ட இரண்டாவது பிரச்சினையாகும்.

இந்த நூலில் முதல் பகுதியில் முதல் பிரச்சினையான நிலவுடைமை முறை பற்றியும், இரண்டாம் பகுதியில் சமூக ஒருங்கிணைப்பு மற்றும் அரசின் அதிகார அமைப்புப் பற்றியும், மூன்றாம் பகுதியில் அரசு வருவாய் பற்றியும் கருதப்படுகின்றது. 7ஆம் நூற்றாண்டு முதல் 17ஆம் நூற்றாண்டு முடிய தென்னிந்தியச் சமூக வரலாற்றுக்கு உதவும் அடிப்படைச் சான்றுகள் அக்காலக் கல்வெட்டுக்களாகும். இவற்றில் ஏறக்குறைய 40 விழுக்காடு நிலக்கொடை அல்லது விற்பனை பற்றியவை; நிலத்திலிருந்து அரசு பெற்ற வருவாய் பற்றியும் இக்கல்வெட்டுக்கள் செய்திகளைத் தருகின்றன. வருவாய் வசூலிப்பு அரசின் முக்கிய செயற்பாடுகளில் ஒன்றாக இருந்தது. மேலும் கல்வெட்டுக்கள் குறிப்பிடும் வருவாய், நிலத்தோடு மட்டும் தொடர்புடையதாக அல்லாமல் அதைச் செலுத்திய நிலவுடைமையாளரையும், பெற்ற அதிகாரிகளையும் தொடர்புபடுத்தியதால், அரசு வருவாய் பற்றி ஆய்தல் மேற்குறிப்பிட்ட இரு பிரச்சினைகளையும் தெளிவுபடுத்தத் துணைபுரியும்.

நிலவுடைமை பற்றிய பிரச்சினையை அணுகுமுன் இரு கருத்துக்களை மனங்கொள்ளல் நலம். ஒன்று, சோழர் காலம் பற்றி மேற்கொண்ட முந்தைய ஆய்வுகளில் பிராமணர் அல்லாதாரின் ஊர்கள் அதாவது வெள்ளான் ஊர்களுக்கு முக்கியத்துவம் அளிக்காமை. பிராமணர்களுக்கு தானம் வழங்கப்பட்ட பிரமதேயங்கள் சோழநாட்டில் பரவலாக இருந்தன. இந்த ஊர்களில் நிர்வாக அமைப்புக்களாக விளங்கிய சபைகளின் நடவடிக்கைகள் பற்றிய கல்வெட்டுக்கள் பல இவ்வூர்களில் கிடைத்துள்ளன. ஆகவே, இயல்பாகவே சோழர்கால பிரமதேய ஊர்களைப் பற்றியும் அவ்வூர்ச் சபைகளின் நடவடிக்கை பற்றியும் மிகுந்த நாட்டம் செலுத்தப்பட்டது. 1930களில் கிருஷ்ணசுவாமி அய்யங்கார், நீலகண்ட சாஸ்திரியார் முதலிய பல சிறந்த ஆய்வாளர்கள் இவைகளைப் பற்றி விரிவான ஆய்வுகள் செய்தார்கள்.[1] இந்திய விடுதலைப் போராட்டம் உச்ச நிலையிலிருந்த காலத்தில் மேற்கொள்ளப்பட்டமையால் இவற்றில் பொதுவாகவே அளவுக்கதிகமாகப் பழமையைப் போற்றும் போக்கு இருந்தது என்பதைக் குறிப்பிட வேண்டும். காட்டாக, சபைகளின் தேர்தல் முறை குடியரசுத்தன்மை கொண்டிருந்தது என்ற செய்தி நடுநாயகமாக இருந்தது. இருப்பினும், அவ்வூர்களில் நிலவிய நிலவுடைமை முறை, வேளாண்மை வாடிக்கைகள் ஆகியன பற்றிய அறிவும் ஓரளவு வளர்ந்தது.

இந்த நூலில் மேற்கொண்ட பகுப்பாய்வைப் பொறுத்தவரை வெள்ளான் ஊர்களில் நிலவிய நிலவுடைமை கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில் பல்லவர், சோழர்

காலத்திலேயே பெரும்பான்மை பிரமதேயங்கள் ஏற்படுத்தப் பட்டமையால் அவை வெள்ளான் ஊர்களோடு ஒப்பிடுகையில் அவ்வளவு பழமையானவை அல்ல. ஆகவே நிலவுடைமையில் ஏற்பட்ட வரலாற்றியல் வளர்ச்சியைக் கண்டறிய மிகப் பழமை வாய்ந்த வெள்ளான் ஊர்களைப் பற்றி ஆய்வது மிக இன்றியமையாதது. மேலும், வெள்ளான் ஊர்கள் நாட்டில் பெரும்பான்மையாக இருந்தனவாதலால் இவ்வூர்களில் நிலவிய உற்பத்தி உறவுகள் அக்காலச், சமூக உறவுகளை நிர்ணயிப்பதில் அடிப்படையாக அமைந்தன எனக் கருத வேண்டும். எனினும் ஆங்கிலேயர் கால மிராசுதார் ஊர்களின் முன்னோடியாக பிரமதேய ஊர்கள் இருந்தன என்ற வகையில் அவைகளுக்கும் ஒரு தனி முக்கியத்துவம் உண்டு.

இரண்டாம் கருத்து, இவ்வாய்வு ஒரு குறுகிய கால வட்டத்தையும் ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பையும் மையமாகக் கொண்டு செய்யப்படுகிறது என்பதாகும். கல்வெட்டுக்களைப் பயன்படுத்தி மேற்கொண்ட முந்தைய ஆய்வுகளில் ஒரு முக்கிய குறைபாடு ஒரு சில கல்வெட்டுக்களை மட்டும் அடிப்படையாக வைத்து பரந்த, பொது முடிவுகளைச் சொல்லும் போக்கு ஆகும். காட்டாக, இடைக்காலத் தென்னிந்தியப் பொருளாதார நிலைமைகளைப் பற்றிய தன் ஆய்வில் அப்பாதுரை சோழர் கால பிரமதேய ஊருக்கு ஆங்கிலேயர்காலக் கணபோக ஊரைத் தொடர்புபடுத்தியும், வெள்ளான் ஊருக்கு ஆங்கிலேயர் கால ரயத்துவாரி ஊரைத் தொடர்புபடுத்தியும் கருத்துத் தெரிவித்தார். இதற்கு அவர் பயன்படுத்திய சான்றுகள் நான்கே நான்கு கல்வெட்டுக்கள்தான். அவையும் கருநாடக மாநிலத்தைச் சேர்ந்தவை.[2] ஆனால், காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்ப சமூகச் சூழ்நிலையும் மாறும் என்பது இயல்பாகக் கொள்ள வேண்டிய ஒரு கருத்தாகும். ஆகவே, கல்வெட்டுச் சான்றுகளைப் பயன்படுத்தும்போது மிகுந்த எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இந்த வகையில் முதலதிகாரத்தில் ஒரே காலச் சூழலிலிருந்த ஒரு பிரமதேய ஊரும் ஒரு வெள்ளான் ஊரும் நுணுக்கமாக ஒப்பீட்டாய்வு செய்யப்படுகின்றன. முற்சோழர் காலத்தைச் சேர்ந்த இவ்வூர்களின் நிலவுடைமை முறைகளில் தெளிவான வேறுபாடு இருந்தது; அதாவது, பிரமதேய ஊரில் தனியார் உடைமையும், வெள்ளான் ஊரில் சமூக உடைமையும் இருந்தன. இந்த ஆய்வின் முடிவைப் பொதுமையான முடிவாக உறுதிப்படுத்த இன்னும் பல மேலாய்வுகள் செய்ய வேண்டும். ஆயினும், இந்த ஆய்வை ஒட்டி நான் செய்த வேறிரு ஆய்வுகளும், சுப்பராயலு செய்த ஓர் ஆய்வும் மேற்சொன்ன முடிவைப் பெரும்பாலும் உறுதி செய்கின்றன என்பதைக் குறிப்பிடவேண்டும். தொடர்ந்து மூன்று அதிகாரங்களில் கீழ்க் காவேரிப் பள்ளத்தாக்கிலிருந்த பிற்சோழர் கால ஊர்களில்

நிலைவுடைமை பற்றி ஆயப்படுகின்றது. மேலே சொன்ன இரு ஊர்களும் இதே வட்டாரத்துக்குள் அடங்கியவையாதலால் முற்சோழர் கால நிலைமையோடு பிற்சோழர்கால நிலைமையை ஒப்பீடு செய்யலாம். முற்சோழர் காலத்தில் வெள்ளான் ஊர்கள் சமூக உடைமையைக் கொண்டிருக்க பிற்சோழர் காலத்தில் அதே ஊர்கள் தனியார் உடைமையைக் கொண்டனவாக மாறிவிட்டன என்று இந்த ஒப்பீடு காட்டுகிறது. அதுமட்டுமல்ல, பிற்காலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட ஊர்களில் நிலச் சொத்துக்கள் படைத்த பெரும் நிலப்பிரபுக்கள் ஆங்காங்குத் தோன்றிவிட்டார்கள் என்பதும் தெரியவருகிறது.

இரண்டாம் பகுதியில் (அதிகாரம் 5 - 7) சமூக ஒருங் கிணைப்பு அல்லது அரசின் அதிகார அமைப்பு என்ற பொருள் ஆயப்படுகிறது. இந்தப் பிரச்சினைக்கு அரசு அலுவலர் மற்றும் நிர்வாகம் பற்றிய ஆய்வு முக்கியமாக மேற்கொள்ளப்பட வேண்டும். சோழர்கால அரசு அலுவலர் பற்றிய சான்றுகள் குறைவாகவே கிடைக்கின்றன. இதை வைத்து பர்டன் ஸ்டெயின் சோழராட்சியில் அரசு அலுவலரமைப்பே இல்லை என்று முடிவு செய்வார். அது பின்னால் விவாதிக்கப்படும்.[3]

அதிகாரம் 5இல் வேறு கோணத்தில் பிரச்சினை ஆயப்படு கிறது. அதாவது சோழ அரசு நிர்வாகத்தில் பிரமதேய ஊர்கள் வகித்த இடம் பற்றிய ஆய்வாகும். இதில் மூன்று உண்மைகள் தெளிவாக்கப்படுகின்றன.

(1) சமூக முன்னோடிகள் நிலையிலிருந்த பிராமணர்கள் வாழ்ந்த பிரமதேயங்களின் சிறப்புத் தன்மை; (2) அவை சோழ அரசர்களோடு கொண்டிருந்த நெருங்கிய உறவு; (3) சோழ நாட்டின் மையப் பகுதிகளான சோழ மண்டலத்திலும், ஜெயங்கொண்ட சோழமண்டலத்திலும் இந்த நாடுகள் ஒவ்வொன்றிலும் ஒன்றுக்கு மேற்பட்ட பிரமதேயங்கள் இருந்தமை. இவற்றிலிருந்து அரசின் உள்ளாட்சியில் பிரமதேயங்கள் முக்கிய பங்காற்றி, சமூக ஒருங்கிணைப்புக்கு ஒரு கருவியாக இயங்கின என்று முடிவு செய்யப்படுகிறது. பிரமதேயங்கள் சடங்குபூர்வமாகச் சமூக ஒருங்கிணைப்புக்கு வழிவகுத்தன என்று கருத்து வெளியிட்ட பர்டன் ஸ்டெயினுக்கு மேற்சொன்ன முடிவு ஓரளவு உடன்பாடாகலாம்.[4] ஆனால், சோழ அரசுக்கு அலுவலர் இல்லாத குறையைத் தீர்க்கும் வகையில் இவை அலுவலர் பணியை ஆற்றின என்பார் கேத்தலின் கோ.[5]

அதிகாரம் 6இல் கிராம சமூகம் பற்றிய பிரச்சினை ஆயப்படுகிறது. எல்லா வாழ்க்கை வசதிகளையும் தன்னுள்ளேயே கொடுக்கும் அளவுக்கு கிராமம் தன்னிறைவு பெற்ற ஓரிடமாக இருந்ததா என்பது கேள்வி. மெட்காவு

(Metcalfe) இந்திய கிராம சமூகத்தைப் பற்றி இப்படி ஒரு கருத்தை முதலில் வெளியிட மார்க்சு அக்கருத்தை மேலும் அழுத்தமாக்கினார்.[6] மார்க்சு கருத்துப்படி உழவுத்தொழிலும், கைவினைத் தொழிலும் பின்னிப்பிணைந்த ஓர் அமைப்பாக கிராமம் விளங்கியது. ஆயினும், சோழர் கல்வெட்டுக்கள் கிராமங்களைப் பற்றி வேறு வகையான தோற்றத்தைக் கொடுக்கின்றன. மக்களின் அன்றாட வாழ்க்கை கிராமங்களுக்குள் முடங்கியிருக்கவில்லை; கிராமங்களுக்கும் மேலான ஒரு பெரிய நிலப்பரப்பே சமூகத்தின் அடிப்படை நில அலகாக இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணர வைக்கின்றன.

நானும் சுப்பராயலுவும் கூட்டாக மேற்கொண்ட சோழர் கல்வெட்டுக்களில் காணப்படும் ஆட்பெயராய்வுத் திட்டத்தை அடிப்படையாக வைத்து அதிகாரம் 7 எழுதப்பட்டது. புள்ளியியல் வழியில் சோழ அரசு அலுவலர் தன்மையைக் கண்டறிவதே இத்திட்டத்தின் ஒரு முக்கிய நோக்கம். அத்திட்டத்தில் எல்லா ஆட்பெயர்களையும் அவை தொடர்பான பட்டப் பெயர்களையும் பதவிகளையும் தொகுத்து பகுப்பாய்வு செய்யப்பட்டது. இதன் மூலம் புரவுவரித்திணைக்களம் போன்ற அரசு அலுவலர் கட்டமைப்பு பற்றிய பல செய்திகள் வெளிப்பட்டன. இவற்றில் சில இந்த அதிகாரத்தில் காட்டப்படுகின்றன. கல்வெட்டுக்களில் பல பட்டப்பெயர்கள் உள்ளன. இப்பட்டப் பெயருக்குரியோர் நாட்டில் செல்வாக்காக இருந்த முக்கிய புள்ளிகள் என்று ஊகிக்கலாம். கிடைத்துள்ள ஏறக்குறைய எழுபது வகையான பட்டப் பெயர்களில் நான்கு அரசனால் அரசாங்க உயர் அலுவலருக்குச் சிறப்பாக வழங்கிய பட்டங்களாக இனங்காணப்பட்டன. ஏனெனில் இப்பெயர்களோடு தொடர்புடைய பதவிகள் அதிகாரி, புரவுவரி, ஓலை போன்ற பெரிய பதவிகளாக உள்ளன. இவையெல்லாம் மைய அரசால் நியமிக்கப்பட்ட அரசு அலுவலர் இருந்தனர். அதாவது ஒரு நிர்வாக இயந்திரம் இருந்தது என்பதன் அறிகுறி. பட்டப் பெயர்களிலிருந்து பெறப்பட்ட இன்னொரு உண்மை சோழராட்சியின் பிற்பகுதியில் கீழ்க்காவேரிப் பள்ளத்தாக்கில் பெரும் நிலப்பிரபுக்கள் தோன்றினார்கள் என்பது. இது முதல் பகுதியில் விவாதிக்கப்பட்ட முடிவுக்கு உரமூட்டுகிறது.

மூன்றாம் பகுதி (அதிகாரம் 8 - 11) முழுவதிலும் அரசு வருவாய் முறை பற்றிய பிரச்சினைகள் அலசப்படுகின்றன. மூன்று அதிகாரங்களில் சோழர் மற்றும் பாண்டியர் கால வருவாய்த் துறைச் சொற்கள் புள்ளியியல் முறையில் காலவாரியாகவும், இடவாரியாகவும் பகுப்பாய்வு செய்யப்படுகின்றன. அரசு வருவாய்க் கொள்கை பற்றி முந்தைய ஆய்வுகளில் ஒரு நெறிசாராப் போக்கு உள்ளதை இங்குக் குறிப்பிட வேண்டும்.[7] கல்வெட்டுக்களில் வருவாய்த் துறைச் சொற்கள்

ஏராளமாக உள்ளன; இவற்றில் ஏதாவது சிலவற்றை மட்டும் இங்கொன்றும் அங்கொன்றுமாக எடுத்து கொண்டு வருவாய்க் கொள்கையைப் பற்றி பொதுப்பட விவாதிக்க முடியாது. அதனால்தான், இங்கு புள்ளியியல் வழியில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இருப்பினும், வரிவிதிப்புப் பற்றி மேலும் தெளிவு பெற இப்புள்ளியியல் ஆய்வோடு வரி விதிப்புச் சூழல் (அதாவது வரி செலுத்தியோர், வசூலித்தோர், வரி விழுக்காடு முதலியன) பற்றியும் ஆழ்ந்து பார்க்க வேண்டும்.

அதிகாரம் 8இல் கண்டறிந்த ஓர் உண்மை சோழராட்சிப் பகுதியைச் சேர்ந்த இரு மைய மண்டலங்களுக்கிடையே வருவாய்த்துறை நடவடிக்கையில் காணப்பட்ட வேறுபாடு. இந்த வேறுபாட்டை பர்டன் ஸ்டெயின் தன்கூறாக்க அரசுக் கோட்பாட்டுக்கு வலுவூட்டுவதாகக் கொள்வார்.[8] ஆனால், மாறாக, அதனை மைய அரசு நிர்வாகம் நன்கு செயற்பட்டது என்பவர்களின் கொள்கைக்கு உரமூட்டுவதாகவும் கொள்ள முடியும். ஏழு வரிகளுக்கான சொற்கள் பரவலாக இரண்டு மண் டலங்களிலும் சோழராட்சி முழுவதும் வழக்கில் இருந்தன என் பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

அதிகாரம் 9இல் தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம் கோயில்களுக்குக் கொடை செய்யப்பட்ட ஊர்களில் விதிக்கப் பட்ட நிலவரி பற்றி ஓர் ஒப்பீட்டாய்வு செய்யப்படுகிறது. இதன் மூலம் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி ஆகிய இரு மாவட்டங்களைச் சேர்ந்த ஊர்களில் நில விளைச்சல்திறன் பற்றிய சில அரிய செய்திகள் பெறுகிறோம்.

மேலே குறிப்பிட்டதைப்போல, 1960கள் வரை தென்னிந்தியச் சமூகத்தில் வளர்ச்சி அல்லது மாற்றம் பற்றிய ஆய்வு பெரும்பாலும் இல்லை. ஆனால், அண்மைக் காலத்தில் அந்த நோக்கில் சில ஆய்வுகள் வெளியாகியுள்ளன. அவற்றில் பர்டன் ஸ்டெயின் மற்றும் கேத்தலின் கோ நீண்டகால நோக்கில் சமூக மாற்றங்கள் பற்றி எழுதியவையும், M.G.S. நாராயணன், சுப்பராயலு, சம்பகலக்ஷ்மி, D.N. ஜா, இந்திரபாலா, கென்னத் ஹால், ஜார்ஜ் ஸ்பென்சர், A.L. அலயேவ் முதலியோர் குறுகிய கால கட்டங்களை அல்லது தனித்தனி பிரச்சினைகளை மையமாக வைத்து எழுதியுள்ளமையும் அடங்கும். இங்கு ஸ்டெயின், கோ ஆகியோரின் ஆய்வுப்படைப்புகள் திறனாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

அறுபதுகளிலும் எழுபதுகளிலும் தன் கருத்துக்களை சில கட்டுரைகளில் வெளிப்படுத்திய ஸ்டெயின், 1980இல் இடைக் காலத் தென்னிந்தியாவில் உழவர் அரசும் சமூகமும் என்ற தன் நூலில் விரிவாக வெளியிட்டார். கோ 1950களில் தஞ்சாவூர் மற்றும் கேரளக் கிராமங்களில் தான் மேற்கொண்ட கள ஆய்வு பற்றிய சில அறிக்கைகளை வெளியிட்டார். ஆயினும்

தென்னிந்தியச் சமூகத்தின் வரலாற்றியல் வளர்ச்சி பற்றிய தன் கருத்தை முதலில், 1981இல் 'தென்னிந்தியாவில் உற்பத்தி முறைகள்' என்ற கட்டுரை வாயிலாக வெளியிட்டார்.[9]

ஸ்டெயின் தன் நூலில் சோழர்காலப் பிரச்சினைகளை முதன்மையாகவும் விஜயநகர காலத்தைப் பற்றி ஓரளவும் ஆராய்ந்துள்ளார். அவர் நூலின் நடுநாயகக் கோட்பாடு 'கூறாக்க நிலை அரசு' (segmentary state) ஆகும். கிழக்கு ஆஃப்பிரிக்கச் சமூகத்தை ஆய்ந்த சவுதால் என்ற மானிடவியல் அறிஞரின் நூலிலிருந்து இக்கோட்பாட்டை எடுத்து தென்னிந்தியாவுக்கு பொருத்திப் பார்த்தார். இக்கோட்பாட்டின்படி, சோழர் காலத் தென்னிந்திய சமூகம் சடங்கு நிலையிலேயே அரசு என்ற உருவைப் பெற்றது. அரசியல் நோக்கில் பார்த்தால் அச்சமூகம் நன்கு வரையறுக்கப்பெற்ற நீடித்த இனமரபு வட்டாரங்களாலான பல தனித்தனிக் கூறுகளைக் கொண்டதாக விளங்கியது. சோழர் கல்வெட்டுக்களில் இனமரபு வட்டாரங்கள், நாடு என்று வழங்கப்பட்டன. இக்கூறுகளின் எல்லைக்குள் இருந்த குடிகள் அரசின் ஆதிக்கத்துக்கு உட்படவில்லை. அதாவது, சோழ அரசில் அரசு நிர்வாகம் அல்லது அரசு அலுவலர் தொகுதி இருந்தது என்பதை ஸ்டெயின் ஏற்கவில்லை. நீலகண்ட சாஸ்திரியார் ராஜராஜனின் ஆட்சியை வைசாந்திய அரசுக்கு (Byzantine royalty) ஒப்பிடுவதை ஸ்டெயின் கடுமையாக மறுக்கிறார்.[10]

இடைக்காலத் தென்னிந்திய அரசுகள் கூறாக்க நிலை அரசுகள் என்பதை நிறுவ ஸ்டெயின் தன்காலம் வரை வெளியான தென்னிந்திய வரலாற்று நூல்கள் யாவற்றையும் அலசிப் பார்த்துள்ளார். தொடர்புடைய கல்வெட்டுச் சான்றுகள் யாவற்றையும் ஆண்டறிக்கைகள் மூலம் பார்த்துள்ளார். பிரமதேயங்களின் பரவல் தன்மையையும், தென்னிந்தியக் கோயில்களின் வகைப்பாடுகள் பற்றியும் இடங்கை வலங்கைச் சமூகப்பூசல் பற்றியும் மிகுந்த கவனம் செலுத்தியுள்ளார். ஆகவே, ஸ்டெயினின் படைப்பை நீலகண்ட சாஸ்திரியாரின் சோழர் மற்றும் தென்னிந்திய வரலாறு ஆகிய இரு நூல்களுக்குப் பின் வந்த சிறந்த நூல்களில் ஒன்று என்று கருத வேண்டும். இருந்தபோதிலும், அவர் நூலைப் படிக்கையில் அவருடைய விளக்கங்கள் பல வெறும் ஊகமாகத் தென்படுகின்றன. ஒரு வேளை தென்னிந்தியச் சமூகத்தைப் புரிந்து கொள்ள, கொள்கைச் சட்டம் ஒன்றைக் கொடுத்தல் அந்த நூலின் நோக்கம் ஆனமை இந்த ஊக உணர்வை ஏற்படுத்தியுள்ளது எனலாம். மாறாக, இந்த நூல் சில குறிப்பிட்ட பிரச்சினைகளைத் தெளிவுபடுத்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளது; ஒரு கொள்கைச் சட்டத்தை அளிப்பது நோக்கமில்லை. இருப்பினும் கூட, ஸ்டெயின் கருத்துக்களின்

மீதான என் திறனாய்வு இந்நூலைப் படிப்போருக்குப் பயன் படும் என்று நம்புகிறேன்.

தென்னிந்தியச் சமூகத்தைப் பற்றிய விளக்கத்தைப் பொறுத்து ஸ்டெயினுக்கும் எனக்கும் ஒரு முக்கிய கருத்து வேறுபாடுண்டு. அது நாடுகளுக்கு அழுத்தமான முக்கியத்துவம் கொடுப்பதும் அதே நேரத்தில் சோழ அரசில் அலுவலர் அமைப்பு இல்லை என்று மறுப்பதும் பற்றியது. உண்மையில் நாடு அரசு நிர்வாகத் தொடர்பான ஒரு முக்கியமான இயற்கை நில அலகு என்ற வகையில் அதன் முக்கியத்துவத்தை மறுப்பதற்கில்லை. அதிகாரம் 6 கிராமம் தன்னிறைவு அலகாக இல்லை என்றும், ஊரைக் காட்டிலும் பெரிய நாடு போன்ற ஒரு நில அலகு அக்கால சமூகப் பெருக்கமுறைக்கு அடிப்படையாக இருந்திருக்க வேண்டும் என்றும் தெளிவுபடுத்துகிறது. எனினும், சோழராட்சியின் இடைப்பகுதியில் அதாவது முதல் ராஜராஜன், முதல் ராஜேந்திரன், முதல் குலோத்துங்கன் ஆகியோர் ஆண்ட காலத்தில் மையப்படுத்தப்பட்ட அதிகாரப் பின்னல் ஒன்றை உருவாக்கி அவற்றின் மூலம், நாடுகளைப் பிரித்த தடைகளை உடைத்து அரசியல் ஒருங்கிணைப்பை ஏற்படுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இதற்குப் பல சான்றுகள் உள்ளன. அரசு நிர்வாகத்தில் முக்கிய பங்கு வகித்தவர்கள் என்று கருதப்படும் அதிகாரி, புரவுவரி போன்ற அலுவலர் பெயர்கள் கல்வெட்டுக்களில் அடிக்கடி காணப் படுவது; அவர்களுக்கு அரசனால் அளிக்கப்பட்ட மூவேந்த வேளான், பிரமராயன், பல்லவரையன், விழுப்பரையன் போன்ற பட்டங்களும் அடிக்கடி கல்வெட்டுக்களில் காணப்படல்; நாடுகளை நிர்வகிக்கும் அலுவலருக்கும் இத்தகைய அரசப் பட்டங்கள் வழங்கப்படல்; ஆகியனவற்றைக் குறிப்பிடலாம். மேலும், நாட்டுமன்ற உறுப்பினர்களான நாட்டாரின் பல்வேறு நடவடிக்கைகள், சோழருக்குப் பின்பு வந்த பாண்டியராட்சியிலும், விஜயநகர ஆட்சியிலுமே பெருகக் காணப்பட்டன. அதாவது, சோழராட்சியில் அவர்கள் நடவடிக்கைகள் குறைவாக இருந்தன எனல் வேண்டும்.[11] முதல் ராஜராஜன் காலத்து, சோழ மண்டலத்தில் நாடுகள் பலவற்றை உள்ளடக்கிய வளநாடுகள் புதிதாக உண் டாக்கப்பட்டன;[12] ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் கோட்டங் கள் வளநாடுகளாக மாற்றப்பட்டன.[13] முதல் ராஜராஜன், முதல் குலோத்துங்கன் ஆகியோர் காலத்தில் நாடு முழுவதும் நில அளவை செய்யப்பட்டது முதலியனவெல்லாம் அரசர்களின் அதிகார மையப்படுத்தல் முயற்சிக்குச் சான்றுகளாகும். ஆகவே இடைப்பகுதியில் மையப்படுத்தப்பட்ட அரசு நிர்வாகம் இருந்தது என்பது உறுதி. அப்படியில்லையென்றால் முதல் ராஜராஜன் எப்படி தான் எழுப்பிய தஞ்சாவூர்ப் பெரிய கோயிலுக்கு தன் ஆட்சிப்பரப்பில் பல பகுதிகளிலும், ஏன்

இலங்கையிலும் கூட, பல ஊர்களின் அரசு வருவாயை கொடையாகக் கொடுக்க முடியும்? எப்படி ஒவ்வொரு ஊரிலும் இவ்வளவு அரசு வருவாய் என்று துல்லியமாகக் கணக்கிட முடியும்?

நாடுகளின் முக்கியத்துவத்தை மறுப்பதற்கில்லையென் றாலும் ஒரேயடியாக அரசு நிர்வாகத்தை மறுக்கும் ஸ்டெயின் கருத்தை ஏற்பது கடினம். இதைப் பற்றி மேலும் தெளிவு பெற நாட்டார் தத்தம் நாடுகளை எப்படி நிர்வகித்தனர்; நாட்டாருக்கும் அரசனுக்கும் எத்தகைய உறவு இருந்தது போன்ற கேள்விகளுக்கு விடைகாண வேண்டும். ஸ்டெயின் பலவாறு இவை பற்றி விவாதித்தாலும் திட்டவட்டமான சான்றுகளின் அடிப்படையில் அவை செய்யப்படாமையால் தெளிவில்லாமல் உள்ளது.

ஸ்டெயின் நூலில் உள்ள இன்னொரு உடன்பாடற்ற கருத்து விஜயநகர அரசு பற்றிய அவரது விளக்கம். விஜயநகர அரசும், சமூகமும் சோழர் காலத்து நிலையில் இருந்து மாறுபட்ட தன்மைகளைக் கொண்டிருந்தன என்று வற்புறுத்தும் அதே நேரத்தில் அவர் இரண்டு சமூகங்களுக்கும் இடையில் ஒரு தொடர்ச்சி இருந்தது என்கிறார். இரண்டும் கூறாக்கத் தன்மை கொண்டவை என்கிறார். உண்மையில் இரண்டு காலங்களுக்கும் இடையில் உள்ள வேறுபாடுகளைப் பற்றிய அவர் வாதம் ஏற்கப்படக் கூடியது. குறிப்பாக, நிலவுடைமை பற்றியும், வட்டாரத் தலைவர் பற்றியும் அவர் வெளியிட்ட கருத்து எளிதில் நம்பத்தக்கது. அப்படியிருக்க விஜயநகர சமூகம் கூறாக்கத் தன்மை கொண்டது என்பதும், விஜயநகர அரசு கூறாக்க நிலை அரசு என்று திரும்பத் திரும்பச் சொல்வதும் முன்னுக்குப் பின் முரணாகத் தோன்றுகின்றன.

ஸ்டெயினைப் போலவே கேத்தலின் கோவும், தென்னிந்தியச் சமூக வளர்ச்சியைப் பகுப்பாய்வு செய்யும் பொருட்டு அரசு பற்றிய சில கோட்பாடுகளை வகையுருக்களாகக் கையாண்டுள் ளார். கோ ஒரு மார்க்சியவாதி என்றாலும் சமூக வளர்ச்சி பற்றிய வழக்கமான மார்க்சிய வரையறையான அடிமை முறை, நிலமானிய முறை, முதலாளித்துவ முறை என்ற மூன்று வரலாற்றுக் கட்டங்களைப் பயன்படுத்தவில்லை. அதற்கு மாறாக டார்சி ரிபெயிரோ என்ற மார்க்சியவாதி வெளியிட்ட கொள்கையைப் பயன்படுத்துகிறார்.[14] இக் கொள்கைப் படி அரசு தொடக்க நிலையில் உள்ள காலத்தில் சமூக உருவாக்கத்தில் பல வகையுருக்கள் காணப்படலாம். அவர் தஞ்சாவூர் மாவட்டத்தை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு அங்கு சோழர் காலம் முதல் பதினெட்டாம் நூற்றாண்டு முடிய உள்ள சமூக வளர்ச்சியைக் கூறுகிறார். ரிபெயிரோவின் வகைப்பாட்டில் மிகத் தொடக்க நிலை அரசின் முதற் சமூக உருவாக்கமான 'சமயக்குரவர் ஆதிக்கத்தில் உள்ள பாசன

அரசு' என்ற நிலையோடு சோழ அரசை ஒப்பிடுகிறார். சோழ அரசில் கிராமங்களில் நிலத்தைச் சமூக உடைமையாக அனுபவித்த உழவர்களால் உற்பத்தி நடந்தது. நீர்ப்பாசனம் போன்ற உற்பத்திக் கருவிகளை தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்த அரசனால் உழவர்கள் அரசின் அடிமைகளாக இயக்கப்பட்டனர். இக்காலத்திலிருந்த உற்பத்தி முறையை மார்க்சின் ஆசிய உற்பத்தி முறை என்று கொள்வார். எனினும் ஆசிய உற்பத்தி முறை வரையறையில் சிறிது மாற்றஞ்செய்து கொள்கிறார். விஜயநகர ஆட்சிக் காலத்தில் அரசனிடம் நிறைய மானியம் பெற்ற பெரிய கோயில்களும், நிலப் பிரபுக்களும் பெருகவே பண்ணைக் குடிமையோடு கூடிய நிலமானிய உற்பத்தி முறை எழுந்தது. அக்காலச் சமூக உருவாக்கத்தை ரிபெயிரோவின் "வல்லாண்மைச் சமயத்தூதர் பேரரசு" என்ற நிலையோடு ஒப்பிடுகிறார்.

சோழராட்சி தொடங்கி காலந்தோறும் உற்பத்தி முறையில் அல்லது சமூக உருவாக்கத்தில் மாற்றங்களை இனங்காணும் வகையில் கோ விவாதிப்பதை மேலோட்டமாக ஏற்றுக் கொண் டாலும் பல கருத்துக்களில் நான் மாறுபடுகிறேன். முதலில் உற்பத்தி முறை பற்றிய அவர் கருத்து. ஆசிய உற்பத்தி முறை மாறி நிலமானிய முறை உருவானது என்று கொள்ளும் கோ விஜயநகர ஆட்சிக் காலத்தில் செய்யப்பட்ட நிலக்கொடைகள் அம்மாற்றத்தை உண்டாக்கியது என்கிறார். அத்துடன் பதினெட்டாம் நூற்றாண்டில் நிகழ்ந்த வணிகப் பெருக்கமும் அதற்கு ஒரு காரணம் என்கிறார். பெரும்பாலும் 17 – 18 ஆம் நூற்றாண்டுகளில் இந்த மாற்றம் ஏற்பட்டது என அவர் கருதுவார் போல் தெரிகிறது.[15] ஆனால் என் கருத்துப்படி சமூகவுடைமை போய், தனியுடைமை எழுந்த காலமான பதின் மூன்றாம் நூற்றாண்டிலேயே கோ குறிப்பிடும் மாற்றம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

இரண்டாவது, அவர் ஒரு சிறிய நிலப்பகுதியை அதாவது, தஞ்சாவூரை மட்டும் ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறார். சோழர் ஆட்சிக் காலத்திலும் மராட்டியர் காலத்திலும் தஞ்சாவூர்ப் பகுதி முக்கிய அதிகார மையமாக இருந்தாலும் சோழ அரசு, விஜய நகர அரசு போன்ற பெரும் அரசுகளின் இயல்புகளைக் கூறும் பொழுது அல்லது அவ்வரசுகளின் உற்பத்தி முறைகளைக் கருதும் பொழுது தஞ்சாவூர்ப் பகுதி ஒரு குறுகிய நிலப்பரப் பாகும். கோ பெரிய நிலப்பகுதியைத் தேர்ந்தெடுத்திருக்கலாம். காட்டாக, ஆற்றுப்பாசன வசதியற்ற ஜெயங்கொண்ட சோழ மண்டலத்தையும், அந்த வசதி உள்ள சோழமண்டலத்தையும் ஒருசேரக் கருதியிருந்தால் ஒப்பீட்டாய்வு செய்திருக்க முடியும்.

இறுதியாக, சோழர் காலத்தில் நிலவியதாகக் கருதப்படும் ஆசிய உற்பத்தி முறையில் வெள்ளான் உழவர்கள் அரசின்

பொது அடிமைகளாக இருந்தார்கள் என்று தெரிவிக்கும் கோ வெள்ளாள் உழவர்களின் கட்டுப்பாட்டில் நன்செய் நிலங்களைப் பயிரிட்ட பறை அடிமைகளும் இருந்தார்கள் என்கிறார். இந்த இருவகை அடிமைகளுக்கு இடையே உள்ள உறவு சரியாக விவாதிக்கப்படவில்லை. ஆகவே, இவர்களில் யார் சோழர் காலச் சமூகத்தில் அடிப்படை உற்பத்தியாளர்கள் என்று அவர் கருதினார் என்பது புரியவில்லை.

இந்தக் கருத்துவேறுபாடு இருப்பினும் தென்னிந்திய சமூக வளர்ச்சியைப் புரிந்து கொள்ளப் பல பயனுள்ள அறிவுறுத்தல்களை அக்கட்டுரை ஏந்தியுள்ளது என்ற வகையில் ஸ்டெயின் நூலைப் போலவே கோவின் கட்டுரையும் மதிக்கப்பட வேண்டிய படைப்பாகும்.

இந்த நூலில் ஒரு கொள்கைச் சட்டத்தின் வழி நின்று சமூக வளர்ச்சி பற்றி ஒரு வரையறையைக் கொடுக்க முற்படவில்லை. எனினும், அவ்வளர்ச்சியைப் பற்றி மேலும் ஆராய்வோருக்குப் பயன்படும் என்ற நோக்கில் கீழ்வரும் கருத்துக் குறிப்புகள் தரப்படுகின்றன.

ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாட்டை வெளியிட்ட மார்க்சு அதைத் தெளிவாக வரையறுக்கவில்லை. எனவே, அதை விளக்குவதிலும் பயன்படுத்துவதிலும் பல கடுமையான விவாதங்கள் எழுந்துள்ளன.[16] கீழ்த்திசை வல்லாட்சி (Oriental Despotism) என்ற கொள்கையோடும், தேக்க நிலைச் சமூகக் கோட்பாட்டோடும் ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாடு தொடர்பு படுத்தப் படுவதால் இந்திய வரலாற்றாசிரியர் அதனை இந்திய வரலாற்றுக்குப் பொருத்திப் பார்க்கத் தயக்கங்காட்டி வருகின்றனர்.[17] ஆனால், வெளிநாட்டாசிரியர் பலர் அதனை இன்னொரு உற்பத்தி முறைக்கு இட்டுச் செல்லும் ஒரு கட்டம் என்று கருதுவர்.[18] இன்றுள்ள ஆய்வு நிலையில் பண்டை இந்தியாவிலும், இடைக்கால இந்தியாவிலும் ஆசிய உற்பத்தி முறை இருந்தது என்ற கோவின் கருத்தை அப்படியே ஒத்துக் கொள்ள முடியாவிட்டாலும் அக்கருத்தை மேலாய்வுக்குப் பயன் படுத்திப் பார்க்கலாம். ஆசிய உற்பத்தி முறையிலிருந்து நிலமானிய முறை தோன்றக் கூடும் என்ற கருதுகோளின் திறத்தை நல்ல சான்றுகள் அடிப்படையிலும் கூர்மையான கொள்கையடிப்படையிலும் புதிய ஆய்வுகள் செய்து பார்க்க லாம். இந்த வகையில் சங்க இலக்கியச் சான்றுகளையும், பக்தி இலக்கியச் சான்றுகயையும் துருவிப் பார்க்க வேண்டும். ரொமீலா தாப்பரின் அரசுருவாக்கக் கோட்பாடு,[19] ஸ்டெயினின் கூறாக்க அரசுக் கோட்டுபாடு போன்ற கோட்பாடுகளைப் பல்லவர் காலம் முதல் முற்சோழர் காலம் வரை உள்ள அரசியல் நிலைக்குப் பொருத்திப் பார்க்கலாம். நிலமானிய முறைக் கோட்பாட்டினை கோசாம்பி, R.S. சர்மா போன்ற பலர்

கையாண்டுள்ளனர். ஆனால், அக்கோட்பாட்டை இந்தியச் சூழ்நிலைக்குக் காரண காரியப் பொருத்தமில்லாமல் கையாளுவதைக் கண்டித்துள்ளனர். இக்கோட்பாட்டை இந்திய வரலாற்றுக்குப் பயன்படுத்துவது குறித்து D.N. ஜா சில கருதுகோள்களை வெளியிட்டார்.[20] அதாவது வட இந்தியாவில் குப்தர் காலத்தின் இறுதிக் கட்டந்தொடங்கி சுமார் கி.பி. 1000 வரை ஐரோப்பிய நிலமானிய முறையை ஒத்த ஒரு உற்பத்தி முறை நிலவியது; அதன்பின் அவ்வுற்பத்தி முறையில் ஒரு நெருக்கடி நிலை ஏற்பட்டது; இருப்பினும், அந்த உற்பத்தி முறை ஏதோ ஒரு வகையில் தொடர்ந்தது; வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும் தென்னிந்தியாவில் 13 ஆம் நூற்றாண்டுக்கு முன் நிலமானிய முறை நிலவியதாகவும் அந்த நூற்றாண்டில் அம்முறையில் நெருக்கடி நிலை ஏற்பட்டது என்றும் அவர் கருதினார் போலத் தெரிகிறது. ஆனால், இந்த நூலில் விவாதித்தபடி, சோழர் ஆட்சியில் ஒரு வகையான அதிகார மையப்படுத்தப்பட்ட அரசு உருவாக்கப்பட்டது. எனவே நிலமானிய உற்பத்தி முறை அதற்குப் பின்பே வழக்குக்கு வந்திருக்க வேண்டும். அதாவது 13 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட திருப்புமையமான நெருக்கடி நிலை நிலமானிய முறையில் ஏற்பட்ட நெருக்கடி நிலை அல்ல; மாறாக அதை இரு உற்பத்தி முறைகள் அல்லது சமூக உருவாக்கங்களுக்கு இடையில் நிகழ்ந்த முரண்பாடாகக் கருத வேண்டும். அவர் குறிப்பிட்ட நிலமானிய முறையில் நெருக்கடி உள்ளபடியே 15 ஆம் நூற்றாண்டில்தான் ஏற்பட்டது.[21]

நிலமானிய முறைத் தோற்றத்துக்கும் அதன் மறைவுக்கும் ஆன காரணிகளை உள்நாட்டுச் சமூகப் பொருளியல் நிலைமைகளிலேயே கண்டறிய வேண்டும்; வெளிநாட்டு வணிகத் தொடர்பை ஒரு காரணியாகக் கொள்ளக்கூடாது என்பார் ஜா. கோவும் கூட, சோழர் காலத்தில் பல நகர மையங்களும், வணிகக் குழுக்களும் இருப்பதினால் மார்க்சின் ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாட்டை அப்படியே அக்காலச் சமூகத்துக்குப் பொருத்திப் பார்க்கத் தயங்குவார். ஆனால், ஆசிய உற்பத்தி முறை மற்றும் நிலமானிய உற்பத்தி முறை நிலைகளிலும் வணிக வளர்ச்சி இருக்கக் கூடும்[22] என்ற கொள்கையை ஏற்கவில்லையென்றால் இவ்வுற்பத்தி முறைகளை இந்திய வரலாற்றுக்குப் பொருத்துவதில் எப்படியும் சிக்கல்கள் எழத்தான் செய்யும். சென்ற இருபது ஆண்டுகளில் இந்த உற்பத்தி முறை பற்றிய கோட்பாடுகளில் கொள்கை வழியிலும் சான்றுவழி ஆய்விலும் நிறைய மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன என்பதை இங்கே கருத்தில் கொள்ள வேண்டும்.[23]

அடுத்து கோ, ஜா இருவருமே அரசர், பிராமணர், கோயில், மற்றும் அலுவலர்க்கு வழங்கிய நிலக்கொடைகளை இந்திய

நிலமானிய முறை எழுச்சிக்கு உரிய காரணியாக விவாதிப்பர். இந்த விவாதத்தைப் பொறுத்து சில உண்மைகளை மனத்திலிருத்த வேண்டும். அரச நிலக் கொடைகளில் இரண்டு வகையுண்டு: ஒன்று, காணியாட்சி உரிமையோடு கொடுக்கப் படும் நிலம். இதில் கொடை பெற்றவர்கள் நிலத்துக்கு முழுச் சொந்தக்காரர்கள் ஆகிறார்கள். சோழர் காலத்தில் வழங்கப் பட்ட பிரமதேயங்கள் இத்தகையனவே. இரண்டு, நில வருவாயின் ஒரு பகுதியை மட்டுமே கொடை செய்வது. கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட பெரும்பாலான தேவதானங்கள் இப்படிப்பட்டவை. இந்த இரண்டில் எந்த வகையைக் கருதினாலும், சோழர் காலத்தில் பிராமணர், கோயில்கள் மற்றும் பிறருக்கு கொடுக்கப்பட்ட கிராமங்கள் எண்ணிக்கையில் சிறுபான்மையே. கொடை செய்யப்படாத பிற பெரும்பான்மைக் கிராமங்களை ஆராயாத வரை கிராம நிலக் கொடைகள் நிலமானிய உற்பத்தி முறைக்கு இட்டுச் சென்றது என்பது தீர்ந்த முடிவாகாது. விஜயநகர ஆட்சியில் முதல்வகைக் கொடைகள் ஏறக்குறைய சோழர் காலத்தில் செய்யப்பட்ட அதே அளவுக்குக் கொடுக்கப்பட்டன; அல்லது கொஞ்சம் குறைந்தன எனலாம். மாறாக, இரண்டாவது வகைக் கொடைகள் (அதாவது அரசு வருவாயைக் கொடை செய்வது) மிகவும் பெருகின. ஏனெனில், இக்காலத்தில் விஜயநகர அரசர்கள் தம் கன்னட, தெலுங்குப் படைத்தலைவர்களுக்கு வழங்கிய அமர கிராமங்கள் ஏராளம்.

ஆக, நாம் மேலும் மேற்கொள்ள வேண்டிய ஆய்வுகளில் ஒன்று சோழர் காலத்தில் கீழ்க் காவேரிப் பள்ளத்தாக்கில் நிலப் பிரபுக்களுடைய கிராமங்கள் பெருகி வளர்ந்த நடைமுறை பற்றியது. முதற்பகுதியில் ஆராயப்படும் உலகியல் சார்பான நிலவிலைப் பரிவர்த்தனைகள் இந்த நடைமுறையில் ஒரு கூறே. 15 ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த சமூக நெருக்கடி ஒரு வகையில் விஜயநகரப் படைத்தலைவர்கள் உதவியுடன் தம்மை நெருக்கிய காணியாளர் அல்லது நிலப்பிரபுக்கள் ஆன பிராமணர் மற்றும் வெள்ளாளருக்கு எதிராக உழுகுடிகளும், கைவினைத் தொழிலாளிகளும் நடத்திய கிளர்ச்சியாகும். ஆக, விஜயநகர காலத்தில் இந்த நிலப்பிரபுக்களுடைய ஊர்கள் எப்படிப் பரவியிருந்தன; அவற்றில் நிலப்பிரபுக்கள் உழுகுடிகளையும், கைவினைத் தொழிலாளிகளையும், எப்படி ஆதிக்கம் செய்தார்கள் என்பதையும் படிக்க வேண்டும். இரண்டாவதாக, விஜயநகர அரசர்கள் கன்னடிய தெலுங்கு நாயக்கர்கள் பொருட்டு உண்டாக்கிய அமர கிராமங்கள் பற்றிய ஆய்வு. அவற்றை வேறு கட்டுரைகளில் தெளிவாக்கியுள்ளேன்.[24]

## சுட்டு நூல்களும் குறிப்புக்களும்


1. S.Krishnaswamy Aiyangar, *Hindu Administrative Institutions*, 1930; K.A. Nilakanta Sastri, *Studies in Cola History and Administration*, 1932.
2. A. Appadorai, *Economic Conditions of Southern India (1000 – 1500 A.D.)* Madras, 1934, pp. 122 - 23, 154.
3. Burton Stein, *Peasant State and Society in Medieval South India*, Delhi, 1980, p. 257.
4. மேலது, ch. IV.
5. Kathleen Gough, 'Modes of Production in Southern India', *Economic and Political Weekly*, Annual No., Feb. 1980, pp. 337 – 64, note 45.
6. Marx and Engels, *On Colonialism*, n.d. p. 36; Marx, *Capital*, I, Moscow, 1961, p. 357; *Pre-Capitalistic Economic Formations*, ed. E. Hobsbaum, London, 1964, p. 33.
7. முன்னோர் ஆய்வுகளில் உள்ள இக்குறைகளை ஸ்டெயினும் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார். *Peasant State* ..., pp. 258 – 59.
8. மேலது, pp. 260 – 63.
9. பார்க்க, மேலே. அகு. 5. இந்த விவாதத்தின் பெரும்பகுதியை அவர் பின் வெளியிட்ட நூலிலும் பார்க்கலாம். *Rural Society in Southeast India*, Cambridge, 1981.
10. *Peasant State*..., p. 256.
11. N. Karashima, *Towards a New Formation: South Indian Society under Vijayanagar Rule*, 1992, pp. 43 – 63. இதற்கு மாறாக சோழர் காலத்துக்குப்பின் நாட்டார் வட்டார ஆதிக்கத்தில் செல்வாக்கு இழந்தனர் என்பார் ஸ்டெயின் (*Peasant State* ... p. 408).
12. Y. Subbarayalu, *The Political Geography of the Chola Country*, Madras, 1973, pp. 56 – 71.
13. N. Karashima, 'A Study of Brahmadeyas under the Chola Dynasty', M. Litt. thesis (in Japanese), University of Tokyo, 1960.
14. Darcy Rebeiro, *The Civilizational Process* (Tr. Betty Meggers), Herper Torchbooks, 1968.
15. கோ இங்கு ஆசிய உற்பத்தி முறைக்கும் முதலாளித்துவ உற்பத்தி முறைக்கும் முரண்பாட்டியல் தொடர்புள்ளதாக நம்பும் கிரேடர் கருத்தை அடியொட்டிச் செல்வதாகத் தெரிகிறது. Lawrence Krader, *The Asiatic Mode of Production*, 1975, pp. 293 – 94.
16. ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாட்டை ஏற்பவர்: Lawrence Krader, *The Asiatic Mode of Production;* Ferenc Tokei, *Essays on the Asiatic Mode of Production*, Budapest, 1979.

    அதனை மறுப்பவர்:

    Perry Anderson, *Lineages of the Absolutist State*, London, 1974; B. Hindess and P.Q. Hirst, *Pre-Capitalist Mode of Production*, London, 1975; R.A.L.H. Gunawardana, 'The Analysis of Pre-Colonial Social Formation in Asia in the Writings of Karl Marx', *The Indian Historical Review*, II-2, 1976.

17. Irfan Habib, 'Problems of Marxist Historical Analysis', *Enquiry*, New Series, III, no. 2, 1969; Romila Thapar, *The Past and Prejudice*, New Delhi, 1975.

18. ஆசிய உற்பத்தி முறைக் கோட்பாட்டை பண்டை ஜப்பானிய சமூகத்துக்குப் பொருத்திப் பார்த்த சில ஜப்பானிய அறிஞர்கள் ஆசிய உற்பத்தி முறைக் கட்டத்திலிருந்து 'இனத் தலைவர் கீழ் அடிமை முறை' (Patriarchal Slavery) என்ற கட்டம் எழுந்தது என்று கருதுகிறார்கள். அரா (H. Hara), ஷிபஹாரா (Shibahara) போன்ற வேறு சில ஆசிரியர்கள் மார்க்சு கூறிய பொது அடிமை முறை (General Slavery) என்பதை ஒத்த 'அரசு அடிமை முறை' (State Slavery) பண்டை ஜப்பானிய சமூகத்திலிருந்தது எனவும் அதிலிருந்து நிலமானிய சமூக உருவாக்கம் வளர்ந்தது எனவும் கருதுகிறார்கள்.

19. *From Lineage to State*, Delhi, 1984.

20. D.N. Jha, 'Early Indian Feudalism: A Historiographical Critique', Presidential Address to Sec. I, Indian History Congress, XL Session, 1979.

21. N. Karashima and Y. Subbarayalu, 'Valangai, Idangai, Irajagarattar: Social Conflicts in Tamilnadu in the 15th Century', in N. Karashima (ed.), *Socio-Cultural Change in Villages in Tiruchirapalli District, Tamilnadu, India, Part I, Pre-Modern Period*, Tokyo, 1983, pp. 133 – 59; Also N. Karashima, *Towards a New Formation ; South Indian Society Under Vijayanagar Rule*, 1992, pp. 141 - 158.

22. அண்மை ஆண்டுகளில் சோழர் காலத்தில் ஏற்பட்ட வணிக வளர்ச்சி குறித்து கென்னத் ஹால், சம்பகலக்ஷ்மி, இந்திரபாலா ஆகியோர் ஆராய்ந்து எழுதியுள்ளார்கள். பார்க்க: நோக்குநூற்பட்டியல்.

23. பார்க்க, மேலே அகு. 16, 20 மற்றும் Harbans Mukhia, 'Was There Feudalism in Indian History ?', *The Journal of Peasant Studies*, vol. 8, no. 3, 1981; D.N. Jha (ed.), *Feudal Social Formation in Early India*, Delhi, 1987.

24. பார்க்க : காரஷிமா, *வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம் 2 : விஜயநகர அரசுக்காலம்*, 1995 மற்றும் *Towards a New Formation ; South Indian Society under Vijayanagar Rule, 1992.*

# அதிகாரம் 1

## அல்லூரும் ஈசானமங்கலமும் : முற்சோழர் கால ஊர்களில் நிலவுடைமை

சோழர்காலத் தமிழ்நாட்டில் பிராமணர்களுக்குக் கொடையாக அளிக்கப்பட்ட ஊர்கள் பல இருந்தன. பிரமதேயம் என அவ்வூர்கள் வழங்கப்பட்டன. பிராமணர்கள் மேலாதிக்கம் பெற்று இருந்த இவ்வூர்களில் "சபை" எனப்பட்ட ஊராட்சி மன்றம் இருந்தது. பிரமதேயம் சோழ நாட்டு உள்ளூராட்சியில் ஒரு முக்கிய பங்கு வகித்தது. ஆகவே, சோழராட்சியின் அதிகாரக் கட்டமைப்பைப் புரிந்து கொள்வதற்கு இந்த ஊர்களைப் பற்றிய ஆய்வு இன்றியமையாத ஒன்று. ஆயினும், நாட்டில் பெரும்பான்மையான ஊர்கள் பிராமணர் அல்லாதார் வாழ்ந்த சாதாரண ஊர்களாகும். அந்த ஊர்களில் ஊராட்சி மன்றம் "ஊர்" என்றே அழைக்கப்பட்டது. பெரும்பான்மை எண்ணிக்கையில் இருந்த இந்த பிராமணர் அல்லாதார் அல்லது வெள்ளான் வகை ஊர்கள் (வெள்ளான் ஊர்கள்) இயல்பாகவே அக்காலச் சமூகத்தின் அடிப்படைக் கீழ்க்கட்டுமானங்களில் ஒன்றாக அமைந்தன. அதனால் பிரமதேயங்களைப் போன்றே வெள்ளான் வகை ஊர்களும் ஆராயப்பட வேண்டியவையாக உள்ளன. மேலும், பிரமதேயங்களைக் காட்டிலும் பழமை வாய்ந்த இவற்றை ஆய்வது தென்னகக் கிராம சமூகங்களின் வரலாற்று முறையான வளர்ச்சியை விளக்க மிக இன்றியமையாததாகிறது.

சோழர்கால ஊர்களைப் படித்தறிய உதவும் மூலச்சான்று கள் கல்வெட்டுக்களே ஆகும். பெரும்பாலும் கோயில் நிலக் கொடைகளைப் பற்றியவை இவை. ஆயினும், பிரம தேயங்களோடு பெரிதும் தொடர்புடைய இக்கல்வெட்டுக்கள் வெள்ளான் ஊர்களைப் பற்றி குறைந்த செய்திகளையே தருகின்றன. அதன் காரணமாக, பிரமதேயங்கள் பற்றிச் சில ஆய்வுகள் செய்யப்பட்ட பிறகும் வெள்ளான் ஊர்கள் பற்றிய ஆய்வுக்கு இதுவரை எந்த வித முயற்சியும் செய்யப்பட வில்லை.[1]

இங்கு ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த ஈசான மங்கலம் என்ற ஒரு பிராமண ஊரும், அல்லூர் என்ற ஒரு வெள்ளான் ஊரும் ஒப்பீட்டு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இந்த இரண்டு ஊர்களை மட்டும் ஆய்வுக்குத் தேர்வு செய்யப்பட்டுள்ளதன் நோக்கம், இன்றைய ஆய்வுள்ள நிலையில் பிராமண மற்றும் வெள்ளான் ஊர்கள் யாவற்றையும் பொதுப்பட படித்தறிவது எளிதல்ல. இந்த இரு ஊர்களையும் வகையுருக்களாகக் கருத்தில் கொண்டால் இருவேறு ஊர் வகைகளைப் பொதுப்படப் புரிதலுக்கு வழிகோலும். நிலக்கிழமை முறை (tenure), சமூகப் படிநிலை யாக்கம் ஆகிய இரு கருத்துக்கள் இந்த அதிகாரத்தில் ஆழ்ந்து சிந்திக்கப்படும்.

இவ்வாய்விற்கு உதவுபவை முப்பது கல்வெட்டுக்கள். கோயில்களுக்கு நிலக்கொடை அல்லது நிலங்களுக்கு வரி விலக்கு ஆகியவை தொடர்பான கல்வெட்டுக்கள் அவை. இவற்றில் இருபத்தொரு கல்வெட்டுக்கள் முற்சோழர் காலத்தைச் சேர்ந்த ஈசானமங்கலம் பற்றியன. இவை திருச்சிராப்பள்ளி வட்டம் திருசெந்துறை சந்திரசேகரர் கோயிலில் உள்ளன. மற்ற ஒன்பது அதே காலத்தைச் சேர்ந்தவை; அதே வட்டத்தில் உள்ள அல்லூர் பசுபதீசுவரர் கோயிலில் உள்ளன.

இரு ஊர்களும் காவேரி ஆற்றின் தென்கரையில் ஒரே சூழலில் இருந்தவை. முப்பதில் ஒன்று தவிர பிற கல்வெட்டுக்கள் தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் (இனிமேல் தெக) தொகுதி VIII இல் வெளியிடப்பட்டுள்ளன. ஒரு கல்வெட்டு மட்டும் தொகுதி III இல் வெளியிடப்பட்டுள்ளது. இதன் தொடர் எண் தொகுதி VIII இலும் உள்ளது. அக்கல்வெட்டுக்களில் உள்ள ஆட்சியாளர், விபரமும் செய்திச் சுருக்கமும் கீழ் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.[2]

## அட்டவணை 1

### ஈசானமங்கலம் தொடர்பான 21 கல்வெட்டுக்கள்

| எண் | அரசன் | யாண்டு | செய்திச் சுருக்கம் |
|---|---|---|---|
| 600 | பராந்தகன்-1 | 12 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 601 | பரகேசரி | 20 | நிலவரி விலக்கு |
| 602 | பரகேசரி | 16 | நிலக்கொடை |
| 604 | பரகேசரி | 14 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 605 | பரகேசரி | 9 | நிலவிற்பனை |
| 607 | பராந்தகன்-1 | 20 | நிலக்கொடை |
| 608 | பரகேசரி | 8 | நிலக்கொடை |
| 609 | பராந்தகன்-1 | 16 | நிலக்கொடை |
| 611 | ராஜகேசரி | 2 | நிலக்கொடை |
| 612 | ராஜகேசரி | 6 | நிலக்கொடை |
| 616 | பரகேசரி | 23 | நிலவரி விலக்கு |
| 617 | பரகேசரி | 3 | நிலக்கொடை |
| 618 | பரகேசரி | 10 | நிலவிற்பனை |
| 619 | பரகேசரி | 2 | 5 நிலத்துண்டங்கள் (அ–உ) கொடை |
| 620 | பரகேசரி | 10 | நிலவரி விலக்கு |
| 621 | பரகேசரி | 4 | நிலவரி விலக்கு |
| 623 | பரகேசரி | 10 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) மீது வரிவிலக்கு |
| 626 | ..... | | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 628 | பரகேசரி | 2 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 629 | ராஜகேசரி | 23 | நிலக்கொடை |
| 630 | பரகேசரி | 3 | நிலக்கொடை |

### அல்லூரின் 9 கல்வெட்டுக்கள்

| | | | |
|---|---|---|---|
| 687 | பரகேசரி | 4 | நிலக்கொடை |
| 688 | பரகேசரி | 12 | நிலவிற்பனை |
| 689 | பராந்தகன்-1 | 37 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 692 | பரகேசரி | 4 | வரிவிலக்கு |
| 694 | ராஜகேசரி | 3 | நிலக்கொடை |
| 695 | பராந்தகன்-1 | 17 | நிலக்கொடை |
| 696 | பராந்தகன்-1 | 18 | நிலக்கொடை |
| 698 | பராந்தகன்-1 | 40 | இரு நிலத்துண்டங்கள் (அ, ஆ) கொடை |
| 699 | பராந்தகன்-1 | 46 | மூன்று நிலத்துண்டங்கள் (அ–இ) கொடை |

**நிலக்கொடையாளிகள் / நிலவிற்பனையாளர்கள்**

ஊரில் நிலம் யாரால் எப்படிச் சொந்தம் கொண்டாடப் பட்டது என்பதையறிய நிலக்கொடையாளி அல்லது விற்பனை யாளர்[3] பற்றித் தெளிவாகச் செய்தி தரும் கல்வெட்டுக்களை ஊன்றிப் பார்க்க வேண்டும். அதற்கு முன்பு சபை, பருடை, ஊர் போன்ற ஊராட்சி மன்றங்களைப் பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள வேண்டும்.[4]

பிரமதேய ஊர்களில் அமைந்த மன்றம் சபை. அதில் அவ்வூரில் ஓரளவு நிலம் உடைய பிராமணர் மட்டும் உறுப்பினராக இருந்தனர். ஒரு நிர்வாக அமைப்பாக செயலாற்றிய இது ஊர் நிர்வாகத்தில் வேறு வேறு செயற்பாடுகளுக்காக பல வாரியங்களைக் (குழுக்களைக்) கொண்டிருந்தது. பருடை கோயில் நிர்வாகப் பொறுப்புகளை மேற்கொண்ட ஒரு அமைப்பு போலத் தெரிகிறது. சபையின் மேலாண்மையின் கீழ் செயலாற்றியதாகவும் தெரிகிறது. வெள்ளான் ஊர்களில் வழக்கமாக நிர்வாக மன்றமாக விளங்கியது ஊர்.

இனி, கல்வெட்டுக்களைப் பார்ப்போம். அல்லூரில் பதினொரு நிலத்துண்டங்களைக் கொடையாக வழங்கியவர்கள் அல்லது விற்றவர்கள் பற்றிய செய்திகள் கீழ்க்கண்டவாறு அறியப்படுகின்றன.

| கொடையாளி / விற்றவர் | கொடை நிலம்/விற்பனை நிலம் எண்ணிக்கை |
|---|---|
| ஊரார் (ஊர் மன்றத்தினர்) | 7 (688, 694, 695, 696, 698 அ, 699 அ, ஆ) |
| தலைவாச் சான்றார் | 2 (689 அ, ஆ) |
| கோயில் | 1 (698 ஆ) |
| கோயிலார் | 1 (699 இ) |

தலைவாச் சான்றார் ஆற்றிலிருந்து நீர் வெளிப்படும் முக்கிய மதகுகளான தலைவாய்களைப் பராமரித்து நீர்ப்பாசனத்திற்குப் பொறுப்பாக இருந்தவர்களாகச் சொல்லக்கூடும். கல்வெட்டு எண் 570 இல் தலைவாய்ச் சான்றோம் என்ற சொல் வருகிறது. எண் 698 ஆ, பாழான திடல் நிலத்தை ஒருவர் கோயிலிடமிருந்து வாங்கி அதைப் பண்படுத்தி மீண்டும் கோயிலுக்கே தானம் செய்தார் என்கிறது. எண் 699 இ கோயிலாரைக் குறிப்பிடு கிறது. கோயிலார் அதாவது கோயில் பூசாரிகள், தம் பணிக்கு ஊதியமாக நிலத்தைப் பெற்றிருந்தார்கள் எனத் தெரிகிறது. பதினொரு துண்டங்களில் ஏழு, ஊருக்குச் சொந்தமாக இருந்தன. இரண்டு, தலைவாச் சான்றார் பெற்றிருந்தனர்.

தனியாரொழிந்த நிலக்கிழமைகள் வழங்கின என்பதை இந்தச் செய்திகள் தெளிவாகச் சொல்லுகின்றன எனலாம். அதாவது அல்லூரில் நிலத்துக்கும் தனியாளுக்கும் இடையில் இருந்த தொடர்பு மிகக் குறைந்தே இருந்தது.

ஈசானமங்கலத்தில் கிடைக்கும் 23 நிலத்துண்டங்களுக்கான கொடையாளி அல்லது விற்பனையாளர்கள் வகைப்பாடு வருமாறு:

| கொடையாளி / விற்றவர் | நிலத்துண்டங்கள் |
|---|---|
| சபை | 3 (607, 609, 626 ஆ) |
| பருடை | 4 (605, 618, 629, 630) |
| கிழவர் (பிரமதேயக்கிழவர்) | 1 (623 அ) |
| தனியாள் | 13 (600அ, ஆ, 602, 604 அ, 608, 612, 617, 619 அ, ஈ, உ, 626அ, 628 அ, ஆ) |
| குழுவினர் | 2 (619 ஆ, இ) |

கிழவர் என்பதை ஊர்த்தலைவர் எனக் கொள்வது வழக்கமாக உள்ளது. இங்கு வரும் கிழவர் ஒருவேளை குடும்பங்களின் தலைவர்களாக இருக்கலாம். சபையின் முக்கிய நிர்வாகக் குழுவாக அவர்கள் இருந்திருக்கலாம். குழுவினர் "... உள்ளிட்டார்" என்று குறிக்கப்பட்டவராகும்.[5] அல்லூருக்கும் ஈசானமங்கலத்துக்குமிடையே அழுத்தமான வேறுபாடு இருந்தது கண்கூடு. ஈசானமங்கலத்தில் அரைப்பகுதிக்கு மேற்பட்ட நிலத்துண்டங்கள் தனியாருக்கு உரியனவாக இருந்தன. ஆக, ஈசானமங்கலத்தில் நிலத்துக்கும் தனியாருக்கும் இடையே இருந்த உறவு நெருக்கமாக உள்ளது தெளிவு. அதாவது ஊர்நிலம் துண்டு துண்டாகப் பிரிக்கப்பட்டு அவற்றைத் தனியார் தம் உடைமையாகப் பெற்றிருந்தார்கள். அப்படிப்பட்டவர்கள் பெரும்பாலும் சபையுறுப்பினராக இருந்தார்கள்.[6] இருப்பினும் சில நிலங்கள் சபை அல்லது பருடை உறுப்பினர்களால் பொதுக்கிழமையாக துய்க்கப்பட்டன.

**கொடைநிலத்தை அண்டிய நிலங்கள் எத்தகையன ?**

கல்வெட்டுக்கள், கொடை நிலங்களுக்கு எல்லைகள் சுட்டும் பொழுது அவற்றை ஒட்டிய நிலங்கள் பற்றியும் அடிக்கடி குறிப்பிடுகின்றன; அந்நிலங்களுக்கு உடையார் பற்றியும் சில தடயங்கள் கொடுக்கின்றன. அல்லூர்க் கல்வெட்டுக்களில் 44 அண்டை நிலத்துண்டுகள் காணப்படுகின்றன. அவற்றை இரு வகையாகப் பிரிக்கலாம். முதல் வகையில் அடங்கும் நிலத்துண்டங்களாவன: பெயரால் குறிப்பிடப்படுவன அல்லது இன்னின்னவாறு பயன்படுகின்றன எனப்படுவன அல்லது அதன் பரப்பு

இவ்வளவு என சுட்டப்படுவன ஆகியனவாகும். எடுத்துக்காட்டு : சிறுக்களஞ்சேரி (699 இ: வடக்கு); சந்திரமங்கலத்து நீர்நிலம் (699 அ: வடக்கு); அறுமா (688: வ). இப்படி 23 துண்டுகள் உள்ளன. இரண்டாவது வகையில் ஏதாவது ஒரு ஆளோடு தொடர்புடையன அல்லது தெய்வத்தோடு தொடர்புடையன அடங்கும். அவ்வகையில் 21 துண்டங்கள் உள்ளன. தெய்வத்தோடு தொடர்புடைய எட்டுத் துண்டங்கள் நீக்கி மற்றவை இங்கு விரிவாக ஆராயப்படுகின்றன.

1. 688 : கிழக்கு எல்லை: அழிஞ்சிகை விளை. விளை பயிரிடப்படும் அல்லது பயிரிடப்படக்கூடிய நிலமாகும். அழிஞ்சிகை என்பது ஒரு புல் வகையாகலாம் அல்லது ஒரு ஆளின் பெயர் ஆகலாம். ஆனால் அழிஞ்சிகை விளை நிலத்துக்கு ஒரு இயல்பான பெயராகவும் இருக்கலாம்.

2. 689 அ: மேற்கு: "கணியார் செய்". பஞ்சாங்கம் பார்ப்பவர்களின் நிலம்.

3. 689 ஆ: தெற்கு: "நகரத்தார் தோட்டச்சுவர்". 692, 681 ஆகிய கல்வெட்டுக்களில் சுட்டப்படும் அல்லூர் நகரமே இங்கு குறிப்பிடப்படும் நகரமாகலாம்.[7]

4. 694: தெ: "சங்கரப்பாடியார் தோட்டத்து மதிள்". சங்கரப் பாடியார் அல்லூர் நகரத்தின் வணிகர்களாகலாம்.[8]

5. 695: தெ (1): "புளியன் பரசுராமன் வடவை". வடவையை நிலம் என்று பொருள் கொண்டால் இது புளியன் பரசுராமன் நிலம் என்று பொருள் தரும்.

6. 695: தெ (2): "சிறியான் குணமந்தரன் வடவை". மேலது போன்றது.

7. 695: மே: "எட்டன் கண்டனும் சிங்க நீலனும் நாட்டியத்தார் நிலம்". நாட்டியத்தார் நடனமாடுபவர். இந்த நிலம் இரு நடனக் கலைஞர்களுக்குச் சொந்தம் ஆகலாம்.

8. 695 : வடக்கு: "எட்டன்நிலம்". இந்த எட்டன் முன்னதில் சுட்டப்படும் எட்டன் கண்டனின் தந்தை ஆகக் கொள்ளலாம்.

9. 696: மே (1) : "சிறியான் புல்லன் அம்பலச் செய்'.: அம்பலப் பராமரிப்புக்காகச் சிறியான் புல்லன் கொடுத்த நிலம்.

10. 696: மே (2) : "சாத்தன் வயக்கல்". சாத்தனால் பண் படுத்தப்பட்ட நிலம்.

11. 698 ஆ: மே (1) : "அல்லூர் எட்டிகள் நிலம்". எட்டி ஒரு சாதியாகலாம். 644 இல் எட்டி என்பவர் உவச்சனாகத் (இசைக் கலைஞன்) தெரிகிறது. ஆகவே, இந்த நிலம் கோயில் இசைக்கலைஞர் ஒருவருக்குச் சொந்தமானது எனலாம்.

12. 698 ஆ: மே (2) : "அல்லூர் நாட்டியத்தார் நிலம்". மேலே 695 இல் இருப்பது போன்றதாகும்.

13. 698 ஆ: வ : "அல்லூர் மத்தியஸ்தன் நானூற்றுவந் தெற்றி செய்". மத்தியஸ்தனுக்கு கொடுக்கப்பட்ட நிலம்.

இந்த பதின்மூன்று நிலத்துண்டங்களில் 689 ஆ: தெ, 694: தெ, இரண்டும் பக்கத்து ஊரினைச் சேர்ந்தனவாகத் தெரிவதால் அவற்றை ஒதுக்கிவிட வேண்டும். 688 : கி–எயையும் ஒதுக்கி விடலாம். அழிஞ்சிகை விளை : அழிஞ்சிகை என்பவரின் நிலமா என்பது ஐயத்திற்குரியது. 696: மே (1) சிறியான் புல்லன் அம்பலச் செய், சிறியான் புல்லனின் நிலம் அல்ல என்ற ஊகத்தில் தள்ளி விடலாம். எஞ்சிய ஒன்பது துண்டங்களில் மூன்று நிச்சயமாகத் தனியாட்கள் கையில் இல்லை எனலாம். 695 : தெ (1), 695 : தெ (2) வடவை தெளிவாக இல்லை. அதே போல் "சாத்தன் வயக்கல்" சாத்தனின் நிலமாக இருக்கக்கூடும். ஆனால் உறுதியில்லை. மற்ற ஆறு துண்டங்களும் கணி, நாட்டியக் கலைஞர், இசைக்கலைஞர், சபையின் செயலரான மத்தியஸ்தன் போன்ற தனியாரின் உடைமையாகக் காணப்படுகின்றன.

இவ்வுண்மைகளை மொத்தமாகக் கருதிப் பார்க்க வேண்டும். எல்லையோர நிலத்துண்டங்கள் நாற்பத்து நான்கனுள் ஆறு அல்லது ஒன்பது மட்டும் தனியாட்கள் பற்றியுள்ளார்கள். பிறவற்றில் சிலவும் தனியார் தொடர்பு கொண்டிருந்தாலும் அவை அவர்களால் பற்றப்பட்டுள்ளனவா என உறுதியாகச் சொல்ல முடியாது. எஞ்சிய துண்டங்கள் பெரும்பாலும் அவற்றின் பெயர் அல்லது பயன்பாடு அல்லது பரப்பளவு ஆகிய குறிப்புக்களாலேயே சுட்டப்படுகின்றன. இந்தச் செய்தியெல்லாம் அல்லூரில் நிலத்துக்கும் தனியாளுக்கும் உள்ள பிணைப்பு குறைவாகவே இருந்தது என்பதையே சொல்லும். முந்திய பகுதியில் கண்ட முடிவோடு இது பொருந்தி வருகிறது. அல்லூரில் நிலம் பற்றியிருந்த தனியாட்கள் கணி, நடனக்கலைஞர், இசைக்கலைஞர், மத்தியஸ்தன் போன்ற சிறப்பு ஊழியர்கள் என்பதைப் பார்க்கும்போது அவர்களின் ஊழியத்துக்கு ஊதியமாக சிறிது நிலம் தனியாகப் பெற்றிருந்தார்கள் என்று ஊகிக்கலாம்.

ஈசானமங்கலக் கல்வெட்டுக்களில் 21 துண்டங்கள் அண்டை நிலமாகக் காணப்படுகின்றன. இவற்றில் 619 : வ–இல் வரும் கரிகாலக்கரை வெறுமனே நிலத்தின் பெயராகலாம். 612 : மே. பருடையின் நிலமாகவும், 617 : கி. தேவதான நிலமாகவும் உள்ளன. ஆனால், எஞ்சிய துண்டங்கள் யாவும் தனியாட்களோடு தொடர்பு உடையனவாக உள்ளன.[9] அத்தனியாட்கள் அவற்றை உடைமையாகப் பெற்றிருந்தார்கள்

எனலாம். 617 : மே. சுட்டும் ஒன்றைத்தவிர பிற எதிலும் ஊதிய நிலம் என்ற கருத்து இல்லை.[10] ஆகவே ஈசானமங்கலத்தில் நிலம் தனியார் உடைமையாகத் துய்க்கப்பட்டு வந்தது; இத்தனியார் சபை உறுப்பினராகப் பெரும்பாலும் இருக்கலாம்; சிறிது நிலம் மட்டும் சபை அல்லது பருடையின் பொதுவுடைமையாக இருந்தது என்பதில் தவறில்லை. இதுவும் முந்திய பகுதி முடிவோடு ஒத்து வருகிறது. அல்லூர் நிலைக்கு இது மிக மாறுபட்ட ஒன்றாக உள்ளது.

### விளைச்சலில் நில உடைமையாளர் பங்கு

நிலவுடைமையாளர், அரசு, பயிரிடுவோர் ஆகியோருக்குள் எப்படி நில விளைச்சல் பங்கீடு செய்யப்பட்டது என்ற அறிவு சமூகக் கட்டமைப்பைப் பற்றி அறிய உதவும். ஈசானமங்கலம் கல்வெட்டு ஒன்றில் (612) தானம் பெற்ற கோயிலின் பங்கு ஸ்வாமி போகம் எனப்படுகிறது. பயிரிட்டோர் பங்கு பற்றிய சொல் இக்கல்வெட்டில் இல்லை என்றாலும் ஸ்வாமி போகம் குடிபோகத்துக்கு எதிரிடைச் சொல்லாகும். பயிரிடல் பற்றி இந்த ஒரு குறிப்பே இருப்பினும் ஈசானமங்கலத்தில் உடைமையாளர் வேறாகவும், பயிரிடுவோர் வேறாகவும் இருந்தனர் என ஊகிப்பதில் தவறிருக்காது. இந்த ஊரில் பெரும்பாலும் பிராமணரே நிலக்கிழாராக இருந்தனர் என்பது இவ்வூகத்தை உறுதிப்படுத்தும். ஏனெனில், பிராமணர் இயல்பாகத் தாமே பயிரிடும் தொழிலைச் செய்வதில்லை. பிரமதேயமான ஈசானமங்கலத்தின் விளைச்சலில் ஒரு பங்கை அரசு பெற்றதா? ஏழு கல்வெட்டுக்களில் “இறைகாவலாக”, “இறை காத்து” என்ற தொடர்கள் வருகின்றன. இத்தொடர்கள் இரண்டும் “இறை அல்லது வரியிலிருந்து காப்பாற்றப்பட்டு” என்று நேர்பொருள் தரும். அதாவது சபையோ பருடையோ வரி செலுத்தாமல் காப்பாற்றப்பட்டன என்று பொருள். இந்த வரி பெரும்பாலும் அரசு கேட்கும் வரியாகவே கொள்ள வேண்டும். இந்த ஊகம் பிற இடங்களில் உள்ள வேறுவேறு ஆண்டைச் சேர்ந்த வேறு பல கல்வெட்டுக்களாலும் உறுதிப்படுகிறது.[11] எனினும் ஈசான மங்கலத்தில் உள்ள இரு கல்வெட்டுச் செய்திகளே (601, 616) இதனை ஆதரிக்கின்றன. அவற்றில் வரும் இறையிலி என்ற சொல் வரி நீக்கப்பட்டது என்று பொருள் தரும். இந்த இரு கல்வெட்டுக்களிலும் வரி நீக்கம் செய்தவர்கள் சபையோ, பருடையோ அல்ல, கொடும்பாளூர்க் குரிசில்களாகும். இரண்டிலும் வரி நீக்கம் பெற்ற நிலம் கோயிலுக்குச் சொந்தமானவை. ஆகவே நீக்கப்பட்ட வரிகள் கோயிலுக்குக் கொடையாகத் தரப்பட்டன எனல் வேண்டும். இந்த வரிகள் கொடும்பாளூர்க் குரிசில்களால் வசூலிக்கப்பட்டு வந்தன என்பதை “நானுடைய பரிசே” (601), “நாமுடைய பரிசே” (616)

"நம் (வரிக்கணக்குப்) பொத்தகத்தும் இழித்து, (601)" போன்ற கல்வெட்டுத் தொடர்களால் அறியலாம்.

கொடும்பாளூர்க் குரிசில்கள், சோழராட்சியின் தொடக்கக் காலகட்டத்தில் திருச்சிராப்பள்ளி வட்டாரத்தில் நிறையச் செல்வாக்குப் பெற்றவர்களாக இருந்தார்கள்.[12] உள்ளபடியே ஊர்களுக்கு அனுப்பப்பட்ட அவர்கள் ஆணைகள், அரச ஆணைகள் போன்றே, ஈசானமங்கலத்திலும், அல்லூரிலும் மிக மரியாதையோடு ஏற்கப்பட்டன. சோழ அரசு, கொடும்பாளூர்க் குரிசில் ஆகிய இருவருமே இந்த ஊர்களின் விளைச்சலில் பங்கு பெற்றார்கள் என்பது சரியாகாது.[13] ஆயினும், கொடும்பாளூர்க் குரிசில்கள் சோழ அரசின் பிரதிநிதிகளாக இருந்தார்கள் எனக் கருதலாம். ஊர் மக்களைப் பொறுத்த வரையில் அவர்களே அரசு. அப்படி வாதிட்டால் ஈசான மங்கலத்தின் விளைச்சலிலிருந்து அரசு ஒரு பங்கை உரிமை கொண்டாடியது எனலாம். எனவே, நில விளைச்சல் அரசின் பங்கு, நிலத்துக்காரர் பங்கு, பயிரிட்டோர் பங்கு என்று மூன்று கூறாக்கப்பட்டிருக்க வேண்டும்.

அல்லூர்க் கல்வெட்டுக்களில் "இறைகாவலாக", "இறைகாத்து", "இறையிலி" என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இறையிலிக் கல்வெட்டில் (692) கொடும்பாளூர்க் குரிசிலால் வரி நீக்கம் செய்யப்பட்டது சுட்டப்படுகிறது. அதனால் அல்லூரிலும் நில விளைச்சலில் ஒரு பங்கை அரசு உரிமை கொண்டாடியது என்பது பொருத்தமே. அல்லூரில் அரசு வரி நீக்கம் செய்ய எந்தத் தனிக் காரணமும் இல்லை.

பயிரிடும் குடிகள் பற்றி ஒரு கல்வெட்டு விவரம் தருகிறது. சற்று முன் குறிப்பிட்ட வரிநீக்கம் பற்றிய கல்வெட்டில்(692) வரும் "குடிநீக்கா" என்ற தொடர், பழைய குடிகள் நீக்கப்படவில்லை என்ற பொருள் தரும். அதே சமயம் இக்கல்வெட்டில் "ஊரே உழுதுகொண்டு" என்ற தொடர் வருகிறது. இந்த இரு தொடர்களிலிருந்தும் ஊராரே (ஊர் மன்றத்தின் உறுப்பினரே) தங்கள் நிலத்தை உழுது பயிரிட்டார்கள் என்று கொள்ளலாம். அதாவது பெரும்பாலான நிலத்துக்கு உரியவராக இருந்த ஊராரே உழு குடிகளாகவும் இருந்தார்கள். வேறு வகையாகச் சொன்னால், அல்லூர்ச் சமூகத்தில் ஓர் அடுக்கே இருந்தது. பயிரிடல் பற்றி மேலும் இரு சான்றுகள் உள்ளன. கல்வெட்டு எண் 694, திருத்தப்பட்ட நிலம் கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்டதைப் பற்றியது. வரி பற்றி எந்தத் தொடரும் இல்லை. வரிவிலக்கு செய்யப்பட்டதா என்று ஊகிப்பது கடினம். எப்படியும் நிலமே கொடுக்கப்பட்ட பொருளாகும். இக்கல்வெட்டில் "இ ஸ்ரீ கோயில் பட்டுடையார் களேய் உழுதுகொண்டு" என்ற தொடர் வருகிறது. அதாவது கோயில் பூசாரிகள் தாங்களே உழுது பயிரிட்டனர் என்ற

பொருள் தரும். ஆனால், வழக்கப்படி, கோயில் பூசாரிகள் அப்படிச் செய்வதில்லை. அதனால் கோயிலைச் சேர்ந்த கீழ்ப்பணிமக்கள் அவ்வேலையைச் செய்திருக்க வேண்டும் அல்லது வேறு விவசாயக் கூலிகளைக் கொண்டு பயிரிடப்பட்டிருக்க வேண்டும். நிச்சயமாக ஊர் மன்ற உறுப்பினர்கள் இங்கு பயிரிட்டிருக்க முடியாது. "ஊரே உழுது கொண்டு" என்ற தொடர் இங்கு வராதது குறிப்பிடத்தக்கது. எண் 687இல் கொடும்பாளூர் குரிசில் ஒருவரால் கோயிலுக்கு நிலம் கொடை செய்யப்பட்டது சொல்லப்படுகிறது. இதில் "குடிநீக்கி" என்ற தொடர் வருவதால் பழைய குடிகள் விலக்கப்பட்ட பிறகு கொடை செய்யப்பட்டதாகக் கொள்ளலாம். இந்தக் கொடை நிலம் ஊராரிடமிருந்தும் விலைக்கு வாங்கப்பட்டதால், நீக்கப்பட்ட குடிகள் ஊரார் ஆக இருக்க வேண்டும். இந்த இரு குறிப்புக்களிலிருந்து கோயிலின் தான நிலங்கள் ஊராரால் பயிரிடப்படவில்லை என்றாகிறது. அதே போல் ஊழியர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஊதிய நிலம் கூட அப்படியே ஊரார் தவிர்த்த பிறரால் பயிரிடப் பட்டிருக்கலாம். இந்த உண்மைகளிலிருந்து ஊர் மன்ற உறுப்பினர் அல்லாத வேறு விவசாயத் தொழிலாளர்கள் இருந்திருக்க வாய்ப்புண்டு என்று ஊகிக்க வேண்டும். இந்தத் தொழிலாளர்கள் பெரிய எண்ணிக்கையில் இல்லாவிடினும் அவர்கள் இருந்தார்கள் என் பதே அல்லூரிலும் ஊர்ச் சமூகத்தில் படி நிலையாக்கம் தலைதூக்கத் தொடங்கிவிட்டது என்பதன் அறிகுறியாகும்.

கீழ்வருமாறு தொகுத்துச் சொல்லலாம் : அல்லூரில் நிலம் ஊரால் சமூக உடைமையாகப் பற்றப்பட்டு ஊரார் அதாவது ஊர்மன்ற உறுப்பினராலேயே பயிரிடப்பட்டது; கணி, நடனக் கலைஞர் முதலிய ஊழியஞ் செய்வோரின் ஊதிய நிலம் ஊரார் தவிர்த்த விவசாயத் தொழிலாளிகள் போன்றோரால் பயிரிடப்பட்டிருக்கலாம். ஊராரின் நில விளைச்சல் அரசுக் கூறு, நில உடைமையாளர் கூறு என்று இரு கூறாக்கப்பட்டது. கோயில் நிலம் மற்றும் கணி போன்ற ஊழியர் ஆகியோர் நிலத்தின் விளைச்சல் அரசுக்கூறு, நிலவுடைமையாளர் கூறு, பயிரிடுவோர் கூறு என்று மூன்றாகப் பகுக்கப்பட்டிருக்க வேண்டும்.

## முடிவு

வெள்ளான் ஊர்களில் 'ஊர்', ஊர் நிர்வாக மன்றமாக இருந்தது என்ற கொள்கை மேற்கண்ட விவாதத்தினால் பாதிக்கப்படவில்லை. அல்லூரில் பெரும்பகுதி நிலம் 'ஊராரால்' பொதுவாகப் பற்றி அனுபவிக்கப்பட்டது. சிறிது நிலம் மட்டும் சில தனியாட்களால் தங்கள் ஊழியத்துக்காக ஊதியம் என்ற வகையில் தனித்தனியாகப் பற்றி ஆளப்பட்டு

வந்தது. நில உரிமையாளராக இருந்த ஊராரே உழுது பயிரிட்டு வந்ததால் அல்லூர் ஊர்ச்சமூகம் அடிப்படையில் படிநிலைச் சமூகமாக ஆகவில்லை. ஊராரிலிருந்தும் வேறான விவசாயத் தொழிலாளிகள் என்று ஒரு சிலர் இருந்தார்கள் என்ற வகையில் படிநிலை உருவாக்கம் முளைவிட்டிருந்தது என்று சொல்லலாம்.

பிரமதேய ஊரில் பிராமண நிலக்கிழார் கொண்ட அமைப்பான சபை, ஊர் நிர்வாக மன்றமாக விளங்கியது என்ற கொள்கை ஈசானமங்கலக் கல்வெட்டுக்களாலும் உறுதிப்படுகிறது. இந்த ஊரில் பெரும்பாலான நிலம் தனித்தனியாகப் பற்றப்பட்டிருந்தது. சில பகுதி மட்டும் சபை அல்லது பருடை உறுப்பினர்களால் பொதுவாக ஆளப்பட்டு வந்தது. தனி உடைமை இங்கு நிலவியது. நிலத்துக்காரர் வேறு, பயிரிடுவோர் வேறாக இருந்தார்கள் என்பது கண்கூடு; அதாவது இந்த ஊரில் சமூகம் இரு படிநிலைகளைப் பெற்றிருந்தது.

ஈசானமங்கலமும் அல்லூரும் ஒரே வட்டாரத்தில் ஒரே காலத்தில் இருந்தும் அவற்றின் சமூகக் கட்டமைப்புத் தன்மைகள் பல வகையில் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருந்தன. இந்த இரண்டு ஊர்களில் ஒன்று வெள்ளான் ஊராகவும் இன்னொன்று பிராமண ஊராகவும் இருந்தன என்று பார்க்கையில் மேற்கண்ட முடிவு மிக முக்கியத்துவம் பெறுகிறது. இந்த ஊர்களை வகையுருக்கள் (types) என்று பார்க்கக்கூடிய அளவுக்கு இந்த ஆய்வு வகையுருப்பாட்டு (typological) ஆய்வாகப் பயன்படும். அதோடு இந்த ஆய்விலிருந்து சோழர் அதிகாரக் கட்டமைப்பைப் (power structure) பற்றியும் இந்திய கிராமச் சமூக வரலாற்று வளர்ச்சி பற்றியும் பல கருதுகோள்களை முன்வைக்கலாம். ஆயினும், இந்த முடிவுகளை அவசரப்பட்டு பொதுமைப்படுத்தக்கூடாது. வகைக்கு ஒவ்வோர் ஊரே ஆராயப்பட்டதால் இதனை ஒரு முன்னாய்வு என்றே கருதிப்பார்க்க வேண்டும்.

**கூடுதல் ஆய்வுகள்**

எனினும், நான் மேற்கொண்ட வேறிரு ஆய்வுகளும், சுப்பராயலு மேற்கொண்ட ஒரு ஆய்வும் மேற்கண்ட முடிவுகளைப் பொதுமைப்படுத்த உதவலாம். முதலில் நான் மேற்கொண்ட "இடைக்காலத் தென்னிந்தியாவில் கோயில்களுக்கு நிலக்கொடை" என்ற ஆய்வைக் குறிப்பிடலாம்.[14] இவ்வாய்வில் சோழர்காலத்தின் முன் பாதியில் நிகழ்ந்த 155 நிலக்கொடைகள் தொடர்பான கொடையாளிகள் மற்றும் நில விற்பனையாளர்களைக் கீழ்வருமாறு வகைப்படுத்த முடிந்தது.

| நிலம் அளித்தவர்கள் | எண்ணிக்கை |
|---|---|
| சபை, ஊர், பருடை முதலிய சமூக அமைப்புக்கள் | 73 |
| தனியாட்கள் | 34 |
| கோயில் | 21 |
| வகைப்படுத்தப்படாதவை | 27 |

இதில் வகைப்படுத்தப்பட்டவைகளில் 57 விழுக்காடு சமூக அமைப்புக்களுக்கும் 27 விழுக்காடு தனியாட்களுக்கும் சேரும். சமூக அமைப்புக்களுக்குள் 73 விழுக்காடு நிகழ்வுகள் பிரமதேய ஊர்களைச் சேர்ந்த சபையின் தொடர்பானவை. தனியாட்கள் 34 பேரை மேலும் உள்வகைப்படுத்தலாம்.

| தனியாள் வகை | எண்ணிக்கை |
|---|---|
| படைத்தலைவர் | 1 |
| கிழவன் | 3 |
| பிராமணர் | 23 |
| கோயில் பணியாள் | 1 |
| வகையிலி | 6 |

தனியாட்களில் பிராமணர் எண்ணிக்கை 82 விழுக்காடு ஆகும். இது தனித்தன்மையானது என்பது தெளிவு.

வட்டார வாரியாகப் பார்த்தால் நிலக்கொடை தொடர்பான கல்வெட்டுக்களில் 40 விழுக்காடு திருச்சிராப்பள்ளி மாவட்டத்தையும், எஞ்சியது தஞ்சாவூர், தென் ஆர்க்காடு, வட ஆர்க்காடு, செங்கற்பட்டு மற்றும் பிறமாவட்டங்களையும் சேரும். இது சோழநாட்டின் தன்மைகளைப் பிரதிபலிக்கிறது எனலாம்.

இந்தச் செய்திகளிலிருந்து தெரிவது: பேறுகள் பெற்ற சிலரே அதுவும் பெரும்பான்மையும் பிராமணரே, தனிப்பட்ட முறையில் நிலங்களைப் பரிவர்த்தனை செய்ய முடிந்தது. வேறு விதமாகச் சொன்னால் வெள்ளான் ஊர்களில் சமூகவுடைமையே இருந்தது.

அடுத்து சுப்பராயலு மேற்கொண்ட சோழர் கால நிலவிலை ஆவணக் கல்வெட்டுக்களின் பகுப்பாய்வு ஆகும்.[15]

இந்நிலவிற்பனைக் கல்வெட்டுக்களிலிருந்து கிடைக்கும். விற்பனையாளரைக் காலமுறைப்படி வகைப்படுத்தினால் கீழுள்ள அட்டவணை கிடைக்கிறது.

## அட்டவணை 2

| கால கட்டம் | மொத்தம் | பிராமண சபைகள் | பிராமண தனியாட்கள் | வெள்ளான் ஊர் அவை | வணிக ஊர் அவை | கோயில் | பிராமணர் அல்லா தனியாட்கள் | பிற |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 133 | 72 | 37 | 16 | 2 | – | 2 | 4 |
| 875-985 | | 54.1% | 27.8% | 12% | 1.5% | | 1.5% | 3% |
| II | 48 | 18 | 5 | 14 | 4 | 4 | 2 | 1 |
| 986-1070 | | 37.5% | 10.4% | 29.2% | 8.3% | 8.3% | 4.2% | 2.2% |
| III | 52 | 25 | 6 | 9 | 4 | 2 | 4 | 2 |
| 1071-1178 | | 48.1% | 11.5% | 17.3% | 7.7% | 3.8% | 7.7% | 3.8% |
| IV | 27 | 7 | 1 | 3 | 3 | 1 | 10 | 2 |
| 1179-1279 | | 25.9% | 3.7% | 11.1% | 11.1% | 3.7% | 37% | 7.4% |

இந்த அட்டவணைப்படி வெள்ளான் ஊர்களில் பிராமணரல்லா தனியாட்கள் விற்பனை முதலில் அருகியே இருந்தது. பிற்பாதியிலேயே அது அதிகமாகியது என்பது தெளிவு.

மூன்றாவதாக குமாரவயலூர் பற்றிய என் ஆய்வு. இவ்வூர் காவேரி ஆற்றின் கரையில் இருந்த ஒரு வெள்ளான் ஊர் இந்த ஊரில் கிடைக்கும் சோழரின் தொடக்ககாலக் கல்வெட்டுக்களில் சொல்லப்படும் 11 நிலப் பரிவர்த்தனைகளில் ஒரு 10, ஊரார் கூட்டாகச் செய்தவை.[16] இந் நிலப் பரிவர்த்தனைகளில் விற்பனை செய்யப்பட்ட நிலம் யாவும் கோயிலுக்கு அல்லது பொதுக் காரியத்துக்குக் கொடுக்கப்பட்டது. எதுவும் தனியாரின் பயன்பாட்டுக்காகக் கொடுக்கப்படவில்லை. இந்த பரிவர்த்தனைகளை வைத்து குமாரவயலூர் நிலம் முழுவதும் ஊர் மன்ற உறுப்பினர்களால் சமூகவுடைமையாகப் பற்றப் பட்டிருந்தது எனக் கொள்ள வேண்டியதில்லை. இருப்பினும் தனியார் உரிமைகள் மிகக் குறைந்தே இருந்தன என்பதில் தவறில்லை.

# அதிகாரம் 2

# புதிய நிலவுடைமை முறையை நோக்கி

*இங்கு, பிற்சோழர் காலப்பகுதியில் நிலவுடைமை முறையின் தன்மைகளை ஆராய முற்படலாம். இதற்கு இக்காலப் பகுதியைச் சேர்ந்த காவேரி ஆற்றின் வடகரையில் அமைந்த ஏழு வெள்ளான் ஊர்களில் நிகழ்ந்த நிலச் சொத்துப் பரிவர்த்தனைகள் பகுப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படு கின்றன. திருவானைக்காக் கோயிலிலுள்ள பதினாறு கல்வெட்டுக்கள் இப்பரிவர்த்தனைகளைப் பற்றிய செய்திகளைக் கொடுக்கின்றன. பிற்சோழர் காலப்பகுதி நிலவுடைமை முறையின் தன்மைகளைத் தெளிவு படுத்துவதோடு முற்சோழர் காலப்பகுதி முறையோடு ஒப்பிட்டு பிற்பகுதியில் ஏற்பட்ட சமூக மாற்றங்களைக் கண்டறியவும் இப்பகுப்பாய்வு வழிவகுக்கும்.*

*குறிப்பிட்ட பதினாறு கல்வெட்டுக்களும்*[17] *மூன்றாம் ராஜராஜன் மற்றும் மூன்றாம் ராஜேந்திரன் ஆட்சி ஆண்டு களுக்குள் அடங்கும். அதாவது, கி.பி.* 1231-1249*க்கு இடைப்பட்ட குறுகிய காலத்தைச் சேர்ந்தவை. இவை திருவானைக்காக் கோயிலுக்கு ஏழு ஊர்களில் செய்யப்பட்ட சொத்து மாற்றங்களைப் பற்றிச் செய்தி தருகின்றன. அவற்றின் சுருக்கம் கீழ்வருமாறு :*

1. **இசணைக்குறை** : *மூன்று கல்வெட்டுக்கள் (தெக.*VIII, *எண்* 339/ *இக.*1964-65, *எண்* : 501, 505, 506) *இந்த ஊரின் காணி உடையார் மூவர் திருவானைக்காக் கோயிலுக்கு நில விற்பனை செய்ததைப் பற்றித் தெரிவிக்கின்றன. இன்னொரு கல்வெட்டு (தெக.* VIII, 338/*இக.*1964-65 : 502) *அதே ஊரின் ஊரார் அதே கோயிலுக்கு நிலவிற்பனை செய்ததைப்பற்றிச் சொல்லுகிறது. இக்கல்வெட்டுக்களின்படி மொத்தம் ஏழு துண்டங்கள்*

விற்கப்பட்டன. அவற்றில் ஆறு புன்செய் நிலம். விலையைப் பார்த்தால் ஏழாவதும் புன்செய் ஆகலாம்.[18]

2. **காரிசாத்தன்குறை** : மூன்று கல்வெட்டுக்கள் (தெக.VIII, 336, 340 இக, 1964-65: 499) இவ்வூரில் காணி உடைய 16 பேர் தம் நிலப்பங்குகளை திருவானைக்காக் கோயிலுக்கு விற்பனை செய்ததைத் தெரிவிக்கின்றன. இவற்றில் முதல் பரிவர்த்தனையில் மூன்று பேர் 4 பங்கும், இரண்டாவதில் 6 பேர் 4 பங்கும், மூன்றாவதில் 7 பேர் 4 பங்கும் கொடுத்தார்கள். ஊர் முழுவதும் சேர்ந்து 12 பங்குகளைக் கொண்டிருந்தது என்று தெரிவதால் மேற்கண்ட மூன்று பரிவர்த்தனைகளிலும் ஊர் முழுவதும் சேர்ந்து கோயிலுக்கு விற்கப்பட்டுவிட்டது எனலாம்.

3. **ராஜராஜ கூற்றங்குடி** : ஒரே தேதியைச் சேர்ந்த 5 கல்வெட்டுக்கள் (இக.1937-38 : 32-36) திருவானைக்காக் கோயிலுக்கு 39 பேர் செய்த நிலவிற்பனையைக் குறிக்கின்றன. இவை ஐந்து தடவை முறையே 8, 2, 1, 14, மற்றும் 14 பேரால் செய்யப்பட்டவை. மொத்த நிலம் சுமார் 21 வேலியாகும். இது, ஊர் நிலத்தில், ஊர்க்கோயில் நிலம், ஊர்க்கணக்கன் நிலம் ஆகியவற்றைத் தவிர மற்ற எல்லா நிலமும் ஆகும். ஊரிருக்கைப் பகுதியையும் உள்ளடக்கிய இந்த 21 வேலி முதலில் இரு சகோதரர்களுக்குக் காணியாக இருந்தது. அவர்களிடமிருந்து மேலே உள்ள 39 பேரும் விலைக்கு வாங்கி வைத்திருந்தார்கள்.

4. **செம்பியன்கூற்றூர்** : (தெக. IV, 424) திருவானைக்காக் கோயிலுக்கு ஒருவர் விலைக்குக் கொடுத்த நிலத்தைப் பற்றிய ஒரு கல்வெட்டு. விற்றவர், இந்த நிலத்தை ஏற்கெனவே அதேவூரைச் சேர்ந்த ஏழு பேரிடமிருந்து விலைக்குப் பெற்றிருந்தார் என்கிறது. உடன் பிறந்த அந்த ஏழுபேரில் நால்வர் கிழவன் தகுதி பெற்றவர்கள். சுமார் 33 வேலி பரப்புக் கொண்ட இந்த நிலம் ஊர் மொத்த நிலத்தில் ஊர்க் கோயில் நிலத்தைத் தவிர்த்து எஞ்சிய பகுதியாகும்.

5. **செம்பியநல்லூர்** : ஒருவர் திருவானைக்காக் கோயிலுக்கு நிலம் விற்ற செய்தியைத் தருகிறது ஒரு கல்வெட்டு (இக. 1937-38 : 31). விற்றவரால் இந்த நிலம் (சுமார் 14 வேலி) ஏற்கெனவே அக் கோயிலுக்கு ஒற்றியாக வைக்கப்பட்டிருந்தது. ஒற்றிப்பணம் இப்பொழுது பெறும் விலையில் பாதியாகும். நிலம் ஊரில் உள்ள மொத்த நிலத்தில் ஊரிருக்கைப்பகுதி மற்றும் உழைப்பூதியமாக விடப்பட்ட நிலம் ஆகியன நீக்கியது போக எஞ்சிய பகுதியாகும். விற்ற நிலம் முன்னோர் ஒருவருடையதாக இருந்து அவர் இறந்த பிறகு இப்போது விற்றவர் அனுபவித்து வந்ததாகவும், அந்த மூதாதை தம் நிலத்தை ராஜராஜப்

பெருவிலையில், அதாவது அரசு ஏலத்தில் வாங்கி வைத்திருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

6. **தத்தநல்லூர்** : மேலே குறிப்பிட்ட அதே விற்பனையாளர் இந்த ஊரிலும் நிலத்தை விற்றார். (இக. 1937-38 : 29) இப்பொழுது விற்ற 3 வேலி நிலத்தையும் கோயிலுக்கு ஒற்றி வைத்திருந்தார். இதுவும் ஒரு முன்னோரிடம் இருந்து அவர் காலத்துக்குப் பின்பு இவருக்கு உரிமையாகி வந்தது. முன்னோர் பலபேரிடம் அந்த நிலத்தை விலைக்குப் பெற்றிருந்தார் எனவும் தெரிகிறது.

7. **நண்டங்குறை** : அதே ஆள் இந்த ஊரிலும் புன்செய் நிலம் 7 வேலியை விற்றார் (தெக. VIII, 337 / இக.1964-65 : 500). இரு துண்டங்களாக இருந்த இந்நிலம், விற்றவரும் அவர் தாயும் முன்னோர் ஒருவரின் இறப்புக்குப் பின் வாரிசாகப் பெற்றுனுபவித்து வந்தது. முன்னோர் அதை மூன்று பேரிடமிருந்து விலைக்குப் பெற்றிருந்ததாகக் குறிக்கப் பட்டுள்ளது.

மேற்கொடுக்கப்பட்டுள்ள தரவுகளிலிருந்து இந்த ஏழு ஊர்களிலும் பல நிலப் பரிவர்த்தனைகள் நடந்தன என்பதனை அறிகிறோம். இப்போது நடந்த இப்பதினாறு பரிவர்த்தனை களில் ஊர் நிலத்தின் ஒரு பகுதியோ அல்லது முழுவதுமோ தனியாட்களால் கோயிலுக்கு மாற்றப்பட்டதாக அறிகிறோம். அதற்கு முன்பும் பத்துக்கு மேலான பரிவர்த்தனைகள் தனியாட்களுக்குள் நடந்திருந்தன. மாறாக ஒரே ஒரு பரிவர்த்தனையில் மட்டும் ஊரார் அல்லது ஊர் நிர்வாக மன்றம் நிலத்தைக் கொடுத்ததாக உள்ளது. இந்த நிலத்தை மட்டும் பொதுவுடைமை நிலமாகக் கருதவேண்டும்.[19]

மேற்சென்ற பகுப்பாய்விலிருந்து கீழ்க் காவேரிப் பள்ளத் தாக்கில் பிற்சோழர் காலத்தில் தனியாருக்கு இடையில் நிலப் பரிவர்த்தனைகள் வழக்கிலிருந்தன எனலாம். இனி, இந்த நிலப் பரிவர்த்தனைகளில் மாற்றப்பட்ட உரிமைகள் எத்தகையன என்பது கண்டறியப்பட வேண்டும். அதாவது, நிலம் விற்றவர் அல்லது கொடை வழங்கியவர் பரிவர்த்தனைக்கு முன் தம் நிலத்தின் மீது எந்தெந்த உரிமைகளைப் பெற்றிருந்தார் ?

இசணைக்குறையில் நிலம் விற்றவர்கள் (ஒருவர் தவிர) காணியுரிமை பெற்றிருந்தார்கள் என்று கல்வெட்டுக் கூறுகிறது. இக்குறிப்பு இல்லாத ஒருவர் விற்றவரின் தம்பியாகக் காணப்படுகிறார். காரிசாத்தன்குறையில் பங்கு விற்றவர்களும் காணி உடையார்களே. ராஜராஜ கூற்றங்குடியில் விற்ற 39 பேரில் எவருக்கும் இந்த அடை இல்லை, எனினும் அந்த 39 பேருக்கு முதலில் விற்ற இருவர் காணி உடையார் என்று

குறிக்கப்படுகிறார்கள். செம்பியன்கூற்றூரில் ஏழுபேரில் நால்வர் 'கிழவன்' எனப்படுகிறார்கள். மற்ற மூவர் இவர்களுக்குத் தம்பிமார். செம்பியநல்லூர், தத்த நல்லூர், தண்டங்குறை ஆகிய மூன்றிலும் நிலம் விற்ற ஒருவர் முன்னோர் ஒருவரிடமிருந்து வாரிசுரிமை பெற்ற நிலமாகும். அதை 'என்னுடைய' என்று உரிமையோடு கூறுகிறார். அந்த முன்னோர் அந்த நிலத்தைப் பிறரிடம் வாங்கியிருந்தார் எனப்படுகிறது.

தமிழ்ப் பேரகராதியின் படி காணி என்ற சொல் 'பரம்பரை கிழமையுரிமை' என்ற பொருள் தரும்; கல்வெட்டுக்களிலும் இதே பொருளில் வழங்கப்பட்டுள்ளது என்பதில் சந்தேகமில்லை. (பின்னால் ஆங்கிலேய அரசாங்கத்தின் ஆவணங்களில் இந்தச் சொல்லுக்கு மாற்றுச் சொல்லாக 'மிராசு' என்ற சொல் வழங்கப் பட்டதாகத் தெரிகிறது). செம்பியன்கூற்றூரில் சுட்டப்படும் கிழவன் என்ற சொல் 'கிழமை' என்பதிலிருந்து பிறந்த சொல்; ஆகவே கிழவன் நிலத்தை உடையவர் அல்லது பற்றியிருப்பவர் என்று கொள்ளலாம். செம்பியநல்லூர் முதலிய மூன்று ஊர்களில் வரும் ஒரு விற்பனையாளர் வழங்கும் 'என்னுடைய' என்ற தொடர் அவர் அவ்வூரில் நிலத்தைச் சொந்தமாக வைத்திருந்தார் என்று பொருள்படும். அதனால் மேல் குறிப்பிடப்பட்ட நில விற்பனையாளர்கள் தாங்கள் விற்ற நிலத்தை உடைமையாக வைத்திருந்தார்கள் என்று சொல்லலாம். நிச்சயமாக, அவர்களுடைய உரிமை வெறும் பயிரிடும் உரிமை மட்டும் அல்ல, அதற்கும் மேலானதாக இருந்தது.

இங்கு, இன்னோர் உண்மையைச் சுட்டிக்காட்ட வேண்டும். அதாவது, செம்பியன் கூற்றூரில் ஒருசமயம் ஊர் நில முழுவதும் ஒருவருக்கே சொந்தமாக இருந்தது என்பது. மேலும் ஒரே ஆள் செம்பியநல்லூர், தத்தநல்லூர், தண்டங்குறை ஆகிய மூன்று ஊர்களிலும் பெருமளவு நிலத்தை வைத்திருந்தார் என்பதையும் பார்க்க வேண்டும். அதனால் மேலே குறிப்பிட்ட விற்பனையாளர்களில் சிலர் தங்கள் குடும்பங்களைக் காப்பாற்றும் அளவுக்கு மட்டும் நிலம் வைத்திருக்கவில்லை எனவும் பல ஊர்களிலும் நிலம் படைத்த பெரும் நிலப்பிரபுக்களாகவும் இருந்தார்கள். மேலும் அவர்கள் தங்கள் ஊர் வட்டாரங்களில் பெரும் செல்வாக்குப் பெற்றவர்களாகவும் இருந்திருக்க வேண்டும்.

எனினும், இந் நிலக்கிழார்கள் தங்கள் நிலத்தின் மீது வரி செலுத்தக் கடமைப் பட்டிருந்தார்கள். செம்பியநல்லூரும் தத்தநல்லூரும் திருவானைக்காக் கோயிலின் தேவதான ஊர்களாகச் சொல்லப்படுகின்றன. அதாவது இந்த ஊர்களின் விளைச்சலில் ஒரு பங்கு கோயிலுக்குச் செலுத்தப்பட்டது.[20] நிலக்கிழார்கள் நில வரி செலுத்தினார்கள் என்பதற்கு

வேதாரண்யம் கல்வெட்டுக்களும் சான்று தருகின்றன என்பதை அடுத்துவரும் அதிகாரத்தில் காணலாம்.

இங்கு ஆய்ந்த கல்வெட்டுக்களில் விற்பனையாளர்கள், அவர்களுக்கு முன்பு விற்றவர்கள், அண்டை நிலத்துக்காரர்கள் ஆகிய யாவரையும் சேர்த்து மொத்தம் 77 நிலக்கிழார்கள் பெயர்கள் கிடைக்கின்றன. இவர்கள் பெயர்களில் உடையான், கிழவன், அரையன், வேளான், ஆள்வான் என்று பலவாறான பட்டங்கள் காணப்படுகின்றன. ஐம்பத்தைவர் பெயர்களில் 'உடையான்' என்று சொல் வருகிறது; அவர்களுள் நாற்பத்தெழுவர் யாதோ ஓர் ஊருடையான் ஆக உள்ளார்கள் இந்த 'ஊருடையான்' என்ற பட்டத்திற்குரியவர் குறிப்பிட் ஊரில் நிலக் காணி உடையவராக இருந்தார் என்று கரு இடமுண்டு. தண்டங்குறையில் முன்பு நிலம் விற்ற மூவரில இருவர் தங்கள் பெயர்களில் தண்டங்குறை உடையான் என்ற சிறப்புப் பெயரை முன்னொட்டாகக் கொண்டிருந்தார்கள் என் பதைக் கவனிக்கவேண்டும்.

முன்பே குறிப்பிட்டபடி செம்பியன்கூற்றூரில் நால்வர் 'கிழவன்' பட்டம் பூண்டவர்கள். ராஜராஜ கூற்றங்குடியில் மேலும் இரு கிழவன் பட்டம் பூண்டவர்கள் இருந்தார்கள். கிழவன், உடையான் ஆகியன ஒரே பொருள் தரும் சொற்கள்.

பத்தொன்பது பேர் அரையன் (அரயன், அதரையன் அதாவது அதியரையன், பேரரையன் முதலிய) பட்டம் பெற்றவர்கள். பல பேர்களில் இந்தப் பட்டப்பேர் அரசப் பட்டத்தோடு இணைந்து காணப்படுகிறது. காட்டு: நிறையுடையச் சோழப் பேரயன், சோழபாண்டிய ராஜன். ஆகவே இப்பட்டப்பேர் கொண்டவர்கள் அரசனோடு நெருங்கிய தொடர்புடையவர்கள்; அல்லது இவர்கள் செல்வாக்குப் பெற்ற குடும்பத்தினராக இருந்தார்கள் என்றுணரலாம். சிலர் அரசாங்க அலுவலர்களாக இருந்ததன் காரணமாக 'அரயன்' பட்டம் பெற்றார்கள்; விழுப்பரையன் என்ற பட்டமும் இத்தகையதே.[21]

பதினொரு பேர் 'வேளான்' பட்டம் பெற்றவர்கள்; அவர்களுள் மூவர் அரசு அலுவலர்களோடு தொடர்புடைய மூவேந்தவேளான்களாவார்கள்.[22] எட்டுப் பேர் நாட்டு வேளான் அல்லது நாட்டு மூவேந்தவேளான் எனப்படுவதிலிருந்து அவர்கள் நாட்டு நிர்வாகத்தில் ஏதோ முக்கியப் பங்கு பெற்றவர்கள் ஆதல் கூடும்.

நாடாழ்வான் பட்டம் பெற்றவர்கள் அறுவர். 'நாட்டை ஆள்பவன்' என்ற பொருள் தரும் இப்பட்டம் இவர்கள் நாட்டு நிர்வாகத்தில் வகித்த முக்கிய பொறுப்பைக் குறிப்பதாகக் கருதலாம்.

அரையன், வேளான் மற்றும் ஆழ்வான் பட்டத்துக்காரர் பலர் ஊர் உடையார்களாகவும் உள்ளார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

விற்றவர்கள் போலவே விலையாவணங்களில் சாட்சிகளாக கையொப்பமிட்டவர்களும் (சுமார் 100 பேர்) மேற்குறிப்பிட்ட பட்டங்களைப் பெற்றிருந்தார்கள்.[23] இருசாராரும் ஒரே சமூக வர்க்கத்தினர் என்ற வகையில் இந்தச் செய்தி நம் முடிவுகளுக்கு உரம் கூட்டும்.[24] அதாவது பிற்சோழர் காலத்தில் கீழ்க்காவேரிப் பள்ளத்தாக்கில் வெள்ளான் ஊர்களில் செல்வாக்கும் பட்டங்களும் பெற்ற பல நிலக்கிழார்கள் நிறைய நிலச் சொத்துக்களைப் பெற்றிருந்ததோடு அரசாங்கத்திலும் முக்கிய பதவிகளை வகித்தார்கள் என்று முடிவு கட்டலாம். இந்த நிலைமை முற்சோழர் காலத்திலிருந்த நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்டது; என்பதைக் கவனிக்க வேண்டும்.

நிலவுடைமை முறையில் இந்த மாற்றம் எதனால் ஏற்பட்டது? இரண்டு பொருளியல் காரணங்களைக் கூறலாம் : ஒன்று, முதல் ராஜராஜன், முதல் ராஜேந்திரன் ஆகியோர் ஆட்சிக்காலத்தில் சோழராதிக்கம் பேரரசாகப் பரவியதை ஒட்டி எதிரி நாடுகளிடமிருந்து கொணர்ந்து குவிக்கப்பட்ட செல்வம் சோழநாட்டின் மையப்பகுதி மக்களிடையே பகிர்ந்தளிக்க பட்டமை.[25] இரண்டு, அணைகள், ஏரிகள் முதலிய புதிய நீர்ப்பாசன வசதிகள் பெருகியதன் காரணமாகப் பயிர் விளைச்சல் பெருகியமை.[26] கீழ்க்காவேரிப் பள்ளத்தாக்கில் அமைக்கப்பட்ட ஏராளமான பிரமதேய ஊர்கள் நீர்ப்பாசன வசதிப் பெருக்கத்துக்கு ஒரு தூண்டுகோலாக அமைந்தன எனலாம்.[27] மூன்றாவதாக ஒரு நிர்வாகத் தொடர்பான காரணத்தையும் குறிப்பிடலாம். அதாவது முற்சோழர் காலத்தில் பிரமதேய ஊர்கள் நிறைய ஏற்படுத்தப்பட்டதைத் தொடர்ந்து நிலச்சொத்துரிமை மாற்றங்கள் எளிதானமையால், முதல் ராஜராஜன் காலந் தொடங்கி, பெருகி வந்த அரசு அலுவலர் தொகுதிக்கு உடையவர்களிடமிருந்து நிலங்களை எடுத்து வழங்குவது எளிதாயிற்று. இந்த எல்லாக் காரணங் களும் சேர்ந்து காணியுடமை தனியுடைமை ஆன வளர்ச்சியை ஏற்படுத்தின.

# அதிகாரம் 3

# வேதாரண்யத்தில் நிலப் பரிவர்த்தனைகள்

மேற்கண்ட உண்மைகள் சோழ நாட்டில் பரவலாகக் காணப்பட்டனவா என்றறிய மேலும் பல இடங்களிலுள்ள கல்வெட்டுச் சான்றுகளை ஆராய்வது நல்லது. அந்த வகையில் தஞ்சை மாவட்டத்தின் (இப்போது நாகபட்டினம் காயிதே மில்லத் மாவட்டம்) தென் கீழ்ப் பகுதியிலுள்ள வேதாரண்யத்தில் பிற்சோழர் (இரண்டாம் ராஜாதிராஜன், மூன்றாம் ராஜராஜன் மற்றும் மூன்றாம் ராஜேந்திரன்) கல்வெட்டுக்களைப் பார்க்கலாம்.[28] இவை தென்னிந்தியக் கல்வெட்டுக்கள் தொகுதி XVII இல் வெளியிடப்பட்டுள்ளன. இவை யாவும் வேதாரண்யக் கோயிலுக்குக் கொடுத்த நிலக்கொடைகள் பற்றியன.

448 : ஒரு பிராமணர் 9 மா நிலம் கொடை செய்தார். நிலம் அநபாயச் சதுர்வேதிமங்கலத்தில் ஒரு கிழவன் பட்டம் பூண்டவரிடமிருந்து விலைக்கு வாங்கியது.

454 : ஒரு பெண் செய்த 5 மா நிலம் கொடை பற்றியது. இவரும் அநபாயச் சதுர்வேதிமங்கலத்தில் அந்த நிலத்தை வாங்கினார்.

460 : பெரிஞூரில் வாழ்ந்த ஒரு நெசவாளி அநபாயச் சதுர் வேதிமங்கலத்தில் சில பிராமணரிடம் நிலத்தை வாங்கி (6, 1/2 மா) கொடை செய்தார்.

463 : ராஜேந்திரசிங்கபுரம் நகரத்தாரிடமிருந்து தான் விலைக்கு வாங்கிய 35 வேலி நிலத்தை ஒரு நாட்டியக்காரி கொடை செய்தார். நகரத்தார் அந்நிலத்தின் மீதான சில வரிகளைக் கோயிலின் பொருட்டு நீக்கம் செய்தனர்.

491 : ஒருவர் தன் காணி நிலத்தை (24 வேலி 6 மா சில்லறை) கொடை செய்தார், நிலம் இருந்த ஊரின் பெயர் சிதைந்து விட்டது.

536 : வாயலூர்ப் பள்ளியில் காணியுடைய ஒரு கொடும்பாளூர்க் கிழவன் பிறரிடமிருந்து தான் வாங்கிய இரு நிலத்துண்டங்களைக் கொடுத்தார். ஒரு துண்டம் (1, 3/4 வேலி) பல்லவதரையன் என்பவரிடமிருந்து கானத்தூர் என்ற ஊரில் விலைக்கு வாங்கியது. இரண்டாவது (3/4 வேலி) அநபாயச் ச்துர்வேதி மங்கலத்தில் ஒருவரிடமிருந்து வாங்கியது.

537 : அக்களூரில் காணி உடைய ஒரு கானத்தூர் கிழவன் தான் கடம்பூரில் ஒரு பிராமணப் பெண்ணிடம் இருந்து விலைக்கு வாங்கிய நிலத்தை (6 மா சில்லறை) கொடை செய்தது.

540 : கிளியூரில் காணியுடைய ஒரு மூவேந்த வேளான் அந்த ஊரில் கொடை செய்யப்பட்ட ஆறு நிலத்துண்டங்கள் (மொத்தம் 1, 1/2 வேலி சில்லறை) மீது வரிவிலக்குக்கு வகை செய்தமை பற்றியது. நிலத்துண்டங்கள் ஆறில் நான்கு அந்த மூவேந்த வேளானாலும் இரண்டு ஒரு நாட்டியக்காரியாலும் கொடையாகக் கொடுக்கப்பட்டவை. பின்னவர் தான் கொடுத்த நிலத்தை மூவேந்த வேளானிடமிருந்து விலைக்கு வாங்கினார்.

542 : ஓர் ‘உடையான்’ குலோத்துங்க சோழ நல்லூரில் 2 வேலி நிலம் வாங்கி வரிவிலக்குப் பெற்று அதைக் கொடை செய்தார்.

மேற்கண்ட கல்வெட்டுக்களிலிருந்து காவேரிக் கழிமுகப் பகுதியில் தென்கிழக்குக் கோடியிலும் பல நிலப் பரிவர்த்தனை கள் நிகழ்ந்தன என்பது தெளிவு. இப்பரிவர்த்தனைகள் கோயில் கொடைகளுக்காக நிகழ்ந்தனவாதலால் இவை வெறும் சமயச் சார்பானவை மட்டுமா அல்லது பரவலாக உலகியல் சார்பானவையாகவும் இருந்தனவா என்பதைக் கருதிப் பார்க்க வேண்டும்.[29] அதாவது இந்தப் பரிவர்த்தனைகள் எந்த எந்தச் சூழ்நிலைகளில் நிகழ்ந்தன என்பதை பகுப்பாய்வு செய்ய வேண்டும்.

எண் 536 இன்படி கொடையாளி விலைக்குப் பெற்று தானே (என்னுதாய்) அனுபவித்து சிலகால இடைவெளிக்குப் பின்பே கொடை செய்ததாகத் தென்படுகிறது.[30] அதாவது, சமயச் சார்பான கொடைக்கும் விலைப் பரிவர்த்தனைக்கும் தொடர் பில்லை. எண் : 536, 537 இல் கொடையாளிகள் சில ஊர்களின் கிழவன்களாக உள்ளார்கள். அத்துடன் வேற்றூர்களிலும் காணிகள் பெற்றிருந்தார்கள். எண்கள் : 448, 454, 460, 536 இவற்றில் சொல்லப்பட்ட நிலங்கள் அநபாயச் சதுர்வேதி மங்கலம் என்ற பிரமதேயத்திலிருந்து வாங்கியவை. 463 இல் சொல்லப்படுவது ராஜேந்திரசிங்கபுரம் நகரத்தாரிடமிருந்து

பெறப்பட்டது. 536, 537, 540, 542 இல் உள்ள நிலங்கள் வெள்ளான் ஊர்களில் வாங்கப்பட்டவை. இவையெல்லாம் அறிவுறுத்துவது, உலகியல் சார்பான நிலப் பரிவர்த்தனைகள் பரவலாக நடந்தன என்பதே. பிராமண ஊர்கள், வெள்ளான் ஊர்கள், நகரங்கள் ஆகிய எல்லா ஊர்களிலுமே நிலம் விற்பனைக்கு வந்தது. அதாவது, ஊர்களின் சமூகத்தன்மைக்கு ஏற்ப நிலப் பரிவர்த்தனைகள் மாறவில்லை. காவேரிக்கு வடகரையில் லால்குடிப் பகுதியில் உள்ளது போலவே வேதாரண்யத்திலும் நிலப் பரிவர்த்தனைகள் செய்த காணி உடையவர்கள் (சில பிராமணரைத் தவிர பிறர்) உடையான், கிழவன், அரையன், மூவேந்த வேளான் போன்ற பட்டங்கள் பூண்டவர்களாக இருந்தார்கள் என்பதும் கவனிக்கத் தக்கது. இன்னொரு உண்மையையும் குறிப்பிட வேண்டும். அதாவது காணி உடையார்கள் அரசுக்கு வரி செலுத்தக் கடமைப் பட்டு இருந்தார்கள் என்பது. ‘கடமை இறுத்து இறைமிகுதி கொண்டு’ என்ற சொற்றொடர் பல கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. கடமை அல்லது அரசாங்கவரியைச் செலுத்திய பிறகு எஞ்சிய விளைச்சலையே (இறைமிகுதி) அவர்கள் அனுபவிக்கலாம். 540 இல் கொடை செய்யப்பட்ட நிலத்தின் மீதான வரி செலுத்தும் பொறுப்பை கோயிலுக்குக் கொடுக்காமல் கொடையாளி தானே தன் உடைமையான பிற நிலங்கள் மீது ஏற்றிச் செலுத்துவதாக ஏற்பாடு செய்கிறார்.

# அதிகாரம் 4

# கீழக்காவேரிப் பள்ளத்தாக்கில் தனியார் நிலவுடைமை

மேலே விவாதித்தபடி, பிற்சோழர் காலத்தில் வெள்ளான் ஊர்களில் இரு படி நிலைகள் கொண்ட சமூகம் உருவாகி விட்டது என்பது தெளிவு. பரந்த நிலப்பகுதிகளை உடைமையாகப் பெற்ற நிலப்பிரபுக்கள் ஒரு படியாகவும் நிலமில்லாமல் பயிரிடுவோர் ஒரு படியாகவும் இருந்தார்கள். இது ஒரு புதிய சமூக உருவாக்கத்தின் அறிகுறியாகும். இந்தக் கருத்தானது திருச்சி மாவட்டக் கல்வெட்டுக்களைப் பரவலாக ஆய்வதன் மூலம் மேலும் உறுதி பெறுகிறது.

முதலில், ஊட்டத்தூர் சிவன் கோயிலில் உள்ள ஏழு கல்வெட்டுக்களைப் பார்க்கலாம். இவை மூன்றாம் ராஜராஜனின் ஆட்சியாண்டு 16, 17, 18இல் பொறிக்கப் பட்டவை. 1912 ஆம் ஆண்டு இந்தியக் கல்வெட்டியல் ஆண்டறிக்கையில் இவை பதியப்பட்டுள்ளன. கல்வெட்டு எண்கள் அறிக்கையில் உள்ளபடி கொடுக்கப்படுகின்றன.

500 (யா : 15 + 1) : பாடாவூரில்[31] காணி உடைய ஒரு சுருதிமானும்[32] அவர் அண்ணன் மகன் ஒருவரும் தம் காணி நிலத்தை (நன்செய் 2, 3/4 வேலி[33] ; புன்செய் 40, 3/4 வேலி) நெற்குளத்தில் காணி உடைய நாயன் சோறன் ஆன இருங்கோளன் என்பவருக்கு விற்றனர்.

493 (யா : 16 + 1) : பிரமாதராய முத்தரையன் என்பவர் நெற்குளத்தில் தன் காணியான நிலத்தை (நன்செய் 1, 1/2 வேலி, புன்செய் சிறிதளவு) சோறன் கண்டன் ஆன இலங்கேசுரதேவர் என்பவருக்கு விற்ற செய்தி பற்றியது. சுருதிமானான பின்னவர் முன்னவரின் அடியான் எனச் சுட்டப்படுகிறார். இவருக்கு நெற்குளத்தில் காணியிருந்தது.

497 (யா : 16 + 1) : தென்பாடாவூரில் அவ்வூர் உடையார் களான[34] நான்கு சுருதிமான்கள் மேலே 500 இல் உள்ள நாயன் சோறன் ஆன இருங்கோளனுக்கு ஒரு மனையும் புன்செய் நிலமும் விற்றனர். நால்வரில் ஒருவர் பேரையன் பட்டமும் ஒருவர் நாடாழ்வான் பட்டமும்[35] பெற்றிருந்தனர்.

499 (யா : 16 + 1) : ஊற்றத்தூர் நாடுடையான[36] மல்லன் சீயன் ஆன பிரமாதராய முத்தரையன் (493 இல் குறிப்பிடப்பட்டவரே) ஊற்றத்தூரில் தன் காணி நிலத்தை (நன்செய் 2/20 வேலி) தன் அகம்படியாரில்[37] ஒருவரும் சுருதிமானும் ஆன நாயன் சோறன் ஆன இருங்கோளனுக்கு விற்றார். வாங்கியவர் நெற்குளத்தில் காணி உடையவர்.

501 (யா : 16 + 1) அதே பிரமாதராய முத்தரையன் அதே நாயன் சோறன் ஆன இருங்கோளனுக்கு பாடாவூரில் இருந்த தன் காணி நிலம் விற்றல். விற்ற நிலம் நன்செய் 1, 3/4 வேலி புன்செய் 15, 1/2 வேலி மற்றும் தோட்ட நிலம் முதலியன.

495 (யா : 18) : அதே பிரமாதராய முத்தரையன் நக்கம்பாடி என்ற ஊரில் பாதியை (நன்செய், புன்செய், ஊர்நத்தம் உள்பட) நெற்குளத்தில் உள்ள தன் அகம்படியாரில் ஒருவருக்கு விற்றார்.

496 (யா : 18) : நெற்குளத்தில் இருந்த ஒரு சுருதிமான் அவ்வூரில் தன் நன்செய் நிலம் 6/20 வேலியை அதே ஊரில் காணி பெற்றிருந்த சோறன் கண்டன் ஆன இலங்கேசுவர தேவருக்கு விற்றல். நிலத்தை விற்றவர் அதை ஏற்கனவே பிரமாதராய முத்தரையனிடமிருந்து விலைக்குப் பெற்று உடைமையாகப் பெற்றிருந்ததாகும்.

இக்கோயிலிலேயே உள்ள ஒரு பாண்டியன் (சடையவர்மன் சுந்தர பாண்டியன்) கல்வெட்டு (எண் : 498) ஒரு பெரிய நில விற்பனையைக் குறிக்கிறது. அதாவது நெற்குளம் முதலிய பல ஊர்களைப் பெற்று இருந்த ஒரு சுருதிமான் நெற்குளத்தின் கால் பகுதியை திருவெள்ளறையின்[38] பிடாகை ஒன்றில் வாழ்ந்து வந்த இன்னொரு சுருதிமானுக்கு விற்றார்.

பெரிய குருக்கையில் மூன்றாம் ராஜராஜன் காலத்தைச் சேர்ந்த இரு கல்வெட்டுக்களில் நிலக்கொடையாளிகள் எப்படி நிலத்தைப் பற்றியிருந்தார்கள் என்ற செய்தியுள்ளது.

*இக.* 1926 : 265 (யா : 26) : குறுக்கை உடையான் சொக்கன் மறைகலந்தான் தென்னவரையன், குறுக்கை (இப்போதைய பெரிய குருக்கை) சிவன் கோயிலுக்கு தத்தன்குறிச்சி[39] என்ற ஊரைத் தானம் செய்தார். இந்தத் தத்தன்குறிச்சியை கொடையாளி அரசு ஏலத்தில் (இராராப் பெருவிலையில்) வாங்கி வைத்திருந்ததோடு ஏற்கனவே ஊரில் கால்பகுதியை கோயிலுக்குக் கொடுத்துவிட்டிருந்தார். இப்பொழுது எஞ்சிய முக்கால் பகுதியையும் கொடை செய்துவிட்டார்.




2 தனியார் நில உடைமை ஆய்வுப் பகுதி

*இக.* 1926 : 267 (*யா* : 27) : அதே கொடையாளி அதே கோயிலுக்கு குறுக்கையில் தான் வாங்கி வைத்திருந்த நிலத்தில் நன்செய் 1, 1/2 வேலியும் புன்செய் 10, 1/2 வேலியும்கொடுத்தார். அவரே பக்கத்தூரான சண்மங்கலத்தில்[40] ஊர்நத்தம், நன் செய், புன்செய் உள்பட ஊரில் அரைக்கால் பகுதியைக் கொடை செய்தார். சண்மங்கலம் முழுவதும் கொடையாளியின் உரிமை யாக இருந்தது என்றும் அதில் 3/8 பகுதி ஏற்கனவே பிராமணர் களுக்குக் கொடை செய்யப்பட்டிருந்தது என்றும் சொல்லப்படு கிறது.

அடுத்து, திருப்பங்கிலிக் கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டு (*இக.* 1938-39: 158, *ராஜராஜன் - 3*). பிரமதேயமான தொடையூர்[41] சபையின் உறுப்பினரான மூன்று பிராமணர் பாண்டிய அரசன் சுந்தரபாண்டியனின் ஒரு மண்டல முதலியும், மழவரையன் பட்டம் பெற்றிருந்தவரும் ஆன ஒருவருக்கு 60 வேலி நிலம் விற்ற செய்தி பற்றியது. விற்ற நிலத்தை விவரிக்கும் இடத்து ஏற்கனவே இதே விற்பனையாளர் விழுப்பரையன் பட்டம் பெற்ற ஓர் உயர் அலுவலருக்கு நத்தம், நீர்நிலம், புன்செய் உட்பட 40 வேலியை விற்றிருந்ததாகக் குறிப்புள்ளது. இதே கோயிலில் தொடையூர் பிராமணர் செய்த வேறு நில விற்பனைகள் பற்றிய கல்வெட்டுக்களும் உள்ளன.

திருவானைக்காக் கோயிலிலிருக்கும் ஒரு பதினாறு நிலவிலைக் கல்வெட்டுக்கள் அதிகாரம்: 2இல் ஆயப்பட்டன. இங்கு மேலும் ஐந்து கல்வெட்டுக்களைப் பார்க்கலாம்.

*இக.* 1937-38 : 37, (*ராஜ- 3, யா* : 16 + 1) : தருமபுரம் உடையான்[42] ஆகிய ஒருவர் வாளாடியில் கொஞ்சம் நிலத்தை திருவானைக்காக் கோயிலுக்கு விற்றார். விற்றவர் விற்ற நிலத்தை ஏழு வாளாடி உடையார்களிடமிருந்து வாங்கி உடைமையாகப் பெற்றிருந்தார். இந்த நிலம் நன்செய் 1, 1/2 வேலியையும் அந்த நிலத்திற்குரிய (விழுக்காட்டு ஒபாதி) புன் செய், ஊர்நத்தம், புலைச்சேரி நந்தம், மனைவீடு ஆகிய வற்றையும் உட்கொண்டிருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

*இக.* 1937 - 38 : 38-39, (*குலோ - 3, யா* : 21) : ஒரு பழுவூர் கிழவனுக்கு[43] ஒரு நிலத்தின் உரிமையை வழங்கக் கொடுக்கப் பட்ட அரச ஆணை பற்றியன. இவ்விரு கல்வெட்டுக்களும் பிரசாதக் காணி மூலம் பழுவூரை உடைமையாகப் பெற்றிருந்த பழுவூர் கிழவன் மேலும் 21 வேலி நிலத்தை அவ்வூரோடு சேர்த்து புதிய ஊர் ஒன்றை உருவாக்கியதாகவும், அந்தப் புதிய ஊரை அவருக்கே அரசன் ஜன்மக்காணியாக உரித்தாக்கி ஆணை கொடுத்தார் என்றும் தெரிவிக்கின்றன

மேற்கண்டவற்றைப் போலவே இன்னும் இரு கல்வெட்டுக்களும் (இக. 1937-38 : 40, 41, குலோ - 3) அதே பழுவூர் கிழவனுக்கு ஜன்மக்காணி பொருட்டு அரச ஆணை கொடுக்கப்படடதைத் தெரிவிக்கின்றன. அவற்றிலிருந்து பழுவூர் கிழவன் வேறு ஐந்து ஊர்களில் காணி படைத்திருந்தார் என்றும் தெரிகிறது. அந்த நிலங்களையெல்லாம் சேர்த்துப் புதிய ஊர் உருவாக்கி அதனையும் ஜன்மக்காணியாக அனுபவிக்க உரிமை வழங்கப்பட்டதாகத் தெரிகிறது.

காவேரித் தென்கரையில் உள்ள உய்யக்கொண்டான் திருமலையில் உள்ள கல்வெட்டு ஒன்று (இக. 1939-40 : 388) தொடர்புடைய ஒரு செய்தியைத் தருகிறது. ஊர்க்கிழவன் ஆன குலோத்துங்க சோழ விசையபாலன் என்ற ஒருவர் (வணிகர்) இராஜகெம்பீர வளநாட்டைச் சேர்ந்த பல ஊர்களில் நிலம் வாங்கி ஒரு புதிய நகரத்தை உருவாக்கி அதில் வெளியூர்களிலிருந்து வியாபாரிகளைக் கொண்டு வந்து குடியேற்றி அவர்களுக்குக் காணி உரிமைகள் கொடுத்தார். தனக்கென்று 25 வேலி நிலம் காணியாக வைத்துக் கொண்டார். இந்தப் புதிய நகர உருவாக்கத்துக்கு அரச ஒப்புதல் கொடுக்கப்பட்டு கொங்குகொண்ட சோழபுரம் எனப் பெயரிடப்பட்டது. விலைக்கு வாங்கப்பட்ட நிலம் (19 வேலி, 60 வேலி என்று பல துண்டங்கள் கொண்டு) பெரிய பரப்பளவு கொண்டதாக இருந்தது.

### அறிந்த உண்மைகள்

பிற்சோழர் காலத்தில் நிறைய நிலப் பரிவர்த்தனைகள் நிகழ்ந்தன என்பது மேற்கண்ட செய்திகளிலிருந்து தெரியும் முதல் உண்மை. ஏற்கனவே தெரிந்த உண்மைகளோடு இது பொருந்தி வருகிறது. இரண்டாவதாக இந்தப் பரிவர்த்தனை களில் பரிமாற்றம் ஆனது காணி உரிமைகள் ஆகும் என்று சொல்லலாம். காணி இயல்பாக பரம்பரை உரிமையைக் குறித்தது. நிலத்தைப் பொறுத்த வரையில் உடைமை உரிமையைக் குறித்தது.

ஆனால், பலசமயம் அது வெறும் உடைமை உரிமையை மட்டும் குறிக்காது. ஊரில் செல்வாக்கான வாழ்க்கை மேற் கொள்ளும் தகுதிகளையும் அது குறித்தது. பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் ஆங்கிலேயராட்சிக் காலத்தில் காணிக்குப் பதிலாக வழங்கிய மிராசு என்ற சொல் ஏறக்குறைய இது போன்ற உரிமைகளைக் கொண்டிருந்தது என் பதை இங்கே கருத்தில் கொள்ள வேண்டும்.[44] மேலே பார்த்த பரிவர்த்தனைகளில் ஊர்களில் (1/4, 1/2 முதலியவாறு) ஏதாவது ஒரு பகுதி விற்கப்படும் பொழுது அப்பகுதியில் நன்செய், புன் செய், ஊர்நத்தம், குளம், புலைச்சேரி முதலிய யாவும் திரளாக

அடங்கியிருந்தன எனப்படுகிறது. இவை யாவும் ஒரு திரளாகவே பரிமாற்றம் ஆயின என்ற வகையில் காணி விரிந்த பொருள் கொண்டிருந்தது என்றால் தவறாகாது. திருவானைக்காக் கல்வெட்டில் (எண் : 37) நன்செய் நிலத்தின் விழுக்காட்டின் படி புன்செய், நத்தம் முதலியனவும் சேர்த்துக் கணக்கிடப்பட்டன என்பதை இங்கு நினைவு கூரலாம். அதாவது காணி உரிமை உடையவர்கள் ஊரில் நல்ல நிலத்தினைத் துய்க்க நிச்சயமாக உரிமை பெற்றவர்களாகிறார்கள், எல்லாச் சூழ்நிலைகளிலும் காணியுரிமை இத்தகைய பரந்த பொருளைக் கொடுத்ததா என்று சொல்லுவது கடினம். ஊரில் உள்ள நிலக்கிழார்கள் ஒற்றுமையோடு எந்த எதிர்ப்பையும் எதிர்கொள்ளும் நிலையில் இருக்கும் சூழ்நிலையில் காணியுரிமை மேற்கண்டவாறு பரந்த தன்மையுடையதாக வழங்கியிருக்க வாய்ப்புண்டு. அப்படி இல்லையெனில் சில நிலத்துண்டங்களின் சொந்தக்காரர் என்ற அளவுக்குத்தான் இருந்திருக்கும்.

நிலத்தை எத்தகையோர் விற்றார்கள், அதாவது நிலத்தின் சொந்தக்காரர் யார்? அவர்கள் ஊரில் காணியுரிமை பெற்று செல்வாக்காக வாழ்ந்தவர்களே என்பது தெளிவு. இக்காலக்கட்டத்தில் பெரும் நிலப்பிரபுக்கள் பரவலாகக் காணப்பட்டமையை நன்குணரலாம். காட்டாக, ஊட்டத்தூர்க் கல்வெட்டுக்களில் வரும் பிரமாதராய முத்தரையன் நிறைய நிலத்தை விற்பது; நாயன் சோறன் ஆன இருங்கோளன் நிலத்தை வாங்கிக் குவிப்பது; பெரிய குருக்கை தென்னவரையன் தன் உடைமையான ஒரு முழு ஊரையும், வேறு இரு ஊர்களில் பெரும் பரப்பான நிலத்தையும் கோயிலுக்குக் கொடை செய்வது; திருப்பங்கிலிக் கல்வெட்டுக்கள் குறிப்பிடும் மழவரையன், விழுப்பரையன் முறையே 60 வேலி, 40 வேலி என்று பெற்றிருந்தமை ; ஊர்களைப் புதியதாக உருவாக்கி அவற்றின் ஜன்மக்காணி உரிமையை அரசனிடமிருந்து பெற்றமை. பழுவூர்க் கிழவனும் விசையபாலன் என்ற வணிகரும். இந்தச் செய்திகள் எல்லாம் நிலப் பிரபுக்களின் பரவலான வெளிப்பாட்டை விளக்கும் சில சான்றுகள். இந்தப் பெரு நிலக்கிழார்கள் அவ்வவ் வட்டாரங்களில் செல்வாக்குடன் வாழ்ந்தமையும், அரச பதவிகள் வகித்தமையும் அவர்கள் பூண்ட பட்டப் பெயர்களாலும் உறுதி பெறுகின்றன.

சோழராட்சியின் இறுதிக் கட்டத்தில் தனி உடைமை பரவலாகி பெருநிலக் கிழார்கள் தோன்ற இரு காரணங்களை மேலே குறிப்பிட்டேன்: சோழராட்சியின் இடைப்பகுதியில் கீழ்க் காவேரிப் பள்ளத்தாக்கில் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சி, அதே நேரத்தில் மிகுதியாக அரசு அலுவலருக்கு மானிய நிலங்கள் அளிக்கப்படல். இக் காரணங்களைக் கருது

கோள்களாகக் கொண்டு இனி மேலும் சில கல்வெட்டுச் சான்றுகளை ஆராயலாம்.

**கீழ்க்காவேரிப் பகுதியில் நிலஉடைமை**

வாலிகண்டபுரத்தில் உள்ள கல்வெட்டுக்கள் இரண்டு வன்னாட்டில் காணியுடைய சுத்தமலன் ஆன செயங்கொண்ட சோழ வன்னாடுடையான் பற்றியவை. முதற் கல்வெட்டு (இ.க. 1943 - 44 : 283 : குலோ- 1, யா: 20) இந்த வன்னாடுடையான்[45] வன்னாட்டில் 20 ஊர்களில் ஊருக்கு ஒரு வேலி நிலத்தை வாலி கண்டபுரம் சிவன் கோயிலுக்கு திருநாமத்துக்காணி இறையிலியாகக் கொடுத்தார் என்றுள்ளது. அடுத்த கல்வெட்டு (மேலது எண் : 274) அதே ஆள் ஒன்பது ஆண்டு கழித்து தன் காணியான ஓர் ஊரை அதே கோயிலுக்குக் கொடை செய்தார் எனவும் தனக்குப் பிள்ளைப் பேறு அருளியமைக்காக இக்கொடை செய்தார் எனவும் சொல்லப்படுகின்றன. இக்கல்வெட்டுக்கள் குறிப்பிடும் அரசன் முதற் குலோத்துங்கன் என்பது உறுதியானால்[46] இவைகளை அரசு அலுவலர் காணியுரிமைகளைப் பெருக்கிக் கொள்வது பற்றிய தொடக்க கட்டக் கல்வெட்டுக்களாகக் கருதலாம். "நாடுடையவர்" நாடாட்சியைப் பொறுத்தவரை ஒரு முக்கிய அலுவலராகக் கருத இடமுண்டு.

இன்னொரு கல்வெட்டு (இக. 1943-44 : 265, ராதி- 2 : 11) நாடு காணிஉடைய ஒரு நாடாழ்வான் கோயிலுக்கு வாலிகண்ட புரத்தில் "கழனி புறணி" நிலம் முழுவதையும் திருநாமத் துக்காணி இறையிலியாகக் கொடை செய்தது பற்றியது. நாடாழ்வார் என்பது நாட்டு நிர்வாகத்தில் ஒரு முக்கிய பதவி வகித்த அலுவலர் அல்லது உள்ளூர்த் தலைவரின் பட்டமாகும்.

அடுத்து, இரண்டாம் ராஜராஜன் காலத்தைச் சேர்ந்த ஒரு லால்குடிக் கல்வெட்டு (இக. 1929 : 128). உயர் அலுவலர் நிலவுடைமைகளைப் பெருக்கிக் கொண்டதற்கான இன்னும் ஒரு சான்று தருகிறது. அதன்படி மூவேந்தவேளான் பட்டம் பூண்ட கூற்றுடையான் பெரியான் என்பவர் நான்கு பெரிய நிலப்பகுதிகளை (முறையே 16, 46, 8, 54 வேலி அளவுள்ளன) காணியாக விலைக்கு வாங்கியதாகவும், அவைகளுக்குப் புதிய பேர்கள் கொடுத்து புதிய ஊர்களாகத் தான் அனுபவிக்க அரச ஆணை பெற்றதாகவும் இக்கல்வெட்டு சொல்கிறது. மூவேந்தவேளான் உயர் அரசு அலுவலருக்குக் கொடுக்கப்பட்ட பட்டங்களுள் ஒன்றாகும்.

இறுதியாகக் கீழ்ப்பழுவூரில் உள்ள இரு கல்வெட்டுக்கள் (இக. 1926 : 259, 257) நில உடைமைக் குவிப்பு பற்றிச் சுவையான தகவலைத் தருகின்றன. இரண்டும் இரண்டாம் ராஜராஜனின்

11ஆம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட அரச ஆணைகள். இவற்றில் ஒன்று (இக. 1926 : 259) கொள்ளிட ஆற்றின் வட கரையில் கீழ்ப்பழுவூர்ப் பகுதியில் காணி பறிபோன காணியாளர்களின் அவல நிலையினைச் சித்திரிப்பதோடு அதைத் தவிர்க்கப் பிறப்பிக்கப்பட்ட அரச ஆணை பற்றியும் செய்தி தருகிறது. பழங்காணியாளர் தம் நிலங்களை அனுபவிக்க முடியாமல் பிறர் அனுபவிக்கும் நிலை ஏற்பட்டிருந்தது. அவர்கள் திரும்பத் தம் காணிகளைப் பெற்று அனுபவிக்க அரச ஆணை வகை செய்தது. அக்கல்வெட்டு வருமாறு :

> ". . . கோநேரின்மை கொண்டான் குன்றக் கூற்றமாந உத்துங்க துங்க வளநாட்டூர்களிலாற்கு இந்நாட்டூர்கள் முன்பு பழங்காணியாளராய் அனுபோ$_4$கித்து வருகிறவர்களைத் தவிர இராசுகுலவராதல் இராஜேந்த்ர சோழப் பேராற்றுக்கு தெற்குப்பட்ட நாடுகளில் உள்ளவராதல் ஆழ்வாநுக்குப் (பத்தாவது) வரையும் ராஜராஜப் பெருவிலை கொண்டோமென்றாதல் அனுபோ$_4$கிக்கப் பெறாதாராகவும் குடிநீக்கித் தேவதாநம் பள்ளிச் சந்தம் நீத்தோற்பட்டி[47] இறையிலியாந ஊர்களில் . . . . இறையிலியிடுவதற்கு முன்பு காணியுடைய காணியாளரே காணியாக கைக்கொண்டு அனுபோகித்து கடமையிறுக்கவும் . . . "

இக்கல்வெட்டுப் பாடத்தை ஊன்றிப் பார்த்தால், சில ஆண்டுகளாகவே சிலர் இராஜகுலத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லிக் கொண்டு வேற்றார் காணிகளைத் தம் காணியாக்கிக் கொண்டுள்ளனர். ஆனால் தகாத வழிகளில் சேர்த்த இந்தச் சொத்துக்களை அரசாங்க ஏலத்தில் (ராஜராஜப் பெருவிலை) வாங்கினோம், தனிப்பட்டாரிடம் இருந்து வாங்கினோம் (குடிவிலை) என்று வாதிட்டதாகத் தெரிகிறது. இன்னும் தேவதானம், பள்ளிச் சந்தம் போன்ற பல கோயில் நிலங்களை குடிநீக்கிய, அதாவது குடிகள் அற்ற நிலங்கள் என்று சொல்லி அவற்றைச் சிலர் உரிமை கொண்டாடியதாகவும் தெரிகிறது. ஆகவே, அரச ஆணை முன்பு இருந்த நிலமை திரும்ப வேண்டும் என்று வற்புறுத்தியது. மேலும் இராஜேந்திர சோழப் பேராற்றுக்கு (கொள்ளிடத்துக்குத்) தெற்குள்ள நாடுகளில் உள்ளவர்கள் வடக்குப் பகுதியில் நிலத்தை விலைக்கு வாங்கக் கூடாது என்கிறது. தெற்குப் பகுதி விளைச்சல் மிகுதியான வளமான பகுதியென்பதைக் குறிப்பிட வேண்டும்.[48] இதிலிருந்து புலப்படுவது தென்கரையில் செல்வாக்கு மிக்க குரிசில்கள், வணிகர்கள் முதலியோர் வடகரையிலும் நிலம் வாங்குவதில் தங்கள் செல்வத்தை முதலீடு செய்தார்கள் என்பது.[49]

நிலவுடைமையில் படையினர் தலையீடு மிகுந்த தொல்லை கொடுத்ததை அடுத்த கல்வெட்டு (எண் : 257) தெளிவாக்குகிறது. அதன்படி சில ஆண்டுகளாகவே கீழ்ப்பழுவூரைச் சேர்ந்த குன்றக்கூற்றம் படைப்பற்றாக ஆக்கப்பட்டதன்

விளைவாக உள்ளூர்க் காணியாளர் நிலங்களைப் பயிரிடுவதில் அக்கறை செலுத்தாமல் விட்டுவிட்டனர். அதனால் அரசன் அவர்கள் மீண்டும் பயிரிடும்படி ஊக்குவிக்கும் வகையில் தன் பத்தாவது ஆட்சியாண்டு முதல் காணியாளர் பற்றிப் பயிர் செய்த நிலங்களுக்கு நிலவரியில் சில சலுகைகள் வழங்கினான்.

இந்த அதிகாரத்தில் ஆயப்பட்ட கல்வெட்டுக்கள் தரும் புதிய உண்மை படையினர் நிலவுடைமை பற்றியது. இராஜகுலவர், படைப்பற்று போன்ற சொற்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. மேலே பார்த்த ஊட்டத்தூர்க் கல்வெட்டுக்களைத் திரும்பிப் பார்த்தால் இவ்வுண்மை மேலும் விளக்கம் பெறும். பிரமாதராய முத்தரையன் நெற்குளத்தில் தன் கீழ்ப் படைவீரர்களுக்கு நிலத்தை விற்றதைக் கவனிக்க வேண்டும். வாங்கிய வீரர்கள் சுருதிமான்கள். பெரும்பாலும் இவர்களைப் போன்றவர்களையே இராஜகுலவர் என்ற சொல் சுட்டுகிறது எனலாம். சுருதிமான், பள்ளி போன்றவர்கள் முதலில் மலைப்பாங்கான நிலப்பகுதிகளிலிருந்தவர்கள்; இரண்டாம் கால கட்டத்தில் அதாவது பதினொன்றாம் நூற்றாண்டில் பேரரசை உருவாக்க முனைந்த முதல் ராஜராஜன், முதல் ராஜேந்திரன் ஆகியோர் காலத்துப் பெருகிய சோழர் படையில் சேர்ந்து பணியாற்றச் சமவெளிப் பகுதிக்கு வந்தார்கள்.[50] நாளடைவில் இவர்களில் சிலர் தங்கள் படை ஆற்றலைப் பயன்படுத்தி நில புலன்களைச் சேர்த்தார்கள். பிற்கால கட்டங்களில் சோழராட்சி வலிகுன்றத் தொடங்கிய போது படையாளர் நிலவுடைமைகளைப் பெருக்கிக் கொள்வது தீவிரமடைந்தது.

## பகுதி 1

## சான்றுகளும் குறிப்புக்களும்

1. நாலூர், உத்தரமேரூர் ஆகிய பிரமதேய ஊர்களின் சபைகள் பற்றி கிருஷ்ணசுவாமி அய்யங்கார், நீலகண்ட சாஸ்திரியார் முதலியோரது ஆய்வுகளைக் குறிப்பிடலாம். பார்க்க : கீழே அகு. 4
2. இந்தக் கல்வெட்டுக்களில் பலவற்றில் அரசர்கள் பெயர் ராஜகேசரி அல்லது பரகேசரி என்று மட்டும் உள்ளது. இவை பொதுப் பட்டப் பெயர்கள் ஆதலால் குறிப்பிட்ட அரசர் யார் என்று கண்டுபிடிப்பது எளிதல்ல. இருப்பினும் இக்கல்வெட்டுக்களின் உள்ளடக்கத்தை வைத்து, இவை யாவும் 9-10 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை எனக் கொள்ளப்படுகிறது.
3. இந்தக் காலகட்டத்தில் பெரும்பாலும் அறக் கொடைகளுக்காகவும் ஊர்ப் பொதுச் செயல்களுக்காகவும் நிலங்கள் விற்கப்பட்டன. ஓரிரண்டில் விற்பதன் நோக்கம் குறிப்பிடப்படவில்லை. இருப்பினும் இக்காலத்தில் தனியாருக்குள் உலகியல் சார்பான நில விற்பனைகள் நிகழ்ந்தனவா என்பது ஐயப்பாட்டுக்குரியது.
4. ஊர் மன்றங்களைப் பற்றிய செய்திகள் கீழ்க்கண்ட ஆய்வு நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டன : S. Krishnaswami Aiyangar, *Hindu Administrative Institutions in South India*, Madras, 1931; K.A. Nilakanta Sastri, *Studies in Cola History and Administration*, Madras, 1932 ; A. Appadorai, *Economic Conditions in Southern India* (1000 - 1500 A.D.), 2 vols. Madras, 1936 ; K.A. Nilakanta Sastri, *The Colas*, Madras, 1955 ; T.V. Mahalingam, *South Indian Polity*, Madras, 1955.
5. "(இன்னார்) உள்ளிட்டார்" என்ற தொடர் குறித்து வேறுவேறு கருத்து விளக்கம் கொடுக்கலாம். ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவும் குறிப்பிட்ட நிலத்தின் கூட்டுரிமையாளராகவும் கொள்ளலாம். அல்லது அந்நிலத்தின் கூட்டுரிமையாளராகத் தகுதி படைத்தவரான பிறராகவும் இருக்கலாம். இரண்டாம் கருத்துக்கு சென்ற நூற்றாண்டில் வழக்கில் இருந்த கரையீடு முறை (H. Stokes, 'The Custom of Kareiyid or Periodical Redistribution of Land in Tanjore', *Indian Antiquary*, 3, pp. 65 - 69) சான்றுகள் தருகிறது. இம்முறைப்படி ஒரு ஊரின் நிலங்களைப் பங்கு அல்லது கரைகளாகப் பிரித்து அவைகளை அவ்வூர் நிலக் கிழார்கள் குறிப்பிட்ட காலக்கெடுக்களில் கைமாற்றி அனுபவிப்பது வழக்கம். இப்படி காலந்தோறும் நிலக்கூறுகளை மறுபகிர்வு செய்யும் முறை சோழர் காலத்திலும் இருந்ததாகத் தெரிகிறது.
6. இந்தத் தனிப்பேர்கள் சபையுறுப்பினராக இருந்தார்கள் என்பதற்கு நேரடிச் சான்று இல்லை. ஆனால் இவர்களில் சிலர் பாரதாயன் என்று கோத்திரப் பெயர் கொண்டிருப்பதால் இவர்கள் பிராமணர் என்பது தெளிவு. முற்பாண்டியர் கால மானூர் (திருநெல்வேலி மாவட்டம்) கல்வெட்டுப்படி ஒரு குறிப்பிட்ட அளவு நிலம் வைத்திருந்த பிராமணர் சபை உறுப்பினராகலாம். (எஇ. XXII, ப. 5 - 11)
7. எண் : 692இல் தென்னெல்லை அல்லூர் நகரத்தின் மதிள் சுவர் என்று சுட்டப்படுகிறது. ஆகவே அல்லூர் நகரம் அல்லூரின் தெற்கில் இருந்த அண்டை நகரமாகும்.
8. முதல் ராஜராஜன் காலக் கல்வெட்டான எண் : 681 இல் ஒரு கொடையாளி அல்லூர் நகரத்தைச் சேர்ந்த சங்கரப்பாடியான் அறிஞ்சிகை வெண்ணாவல் என்று சுட்டப்படுகிறார்.
9. எட்டு துண்டங்கள் ஒரே ஆளோடு தொடர்புடையன; வேறு ஏழு துண்டங்கள் ". . . உள்ளிட்டார்" நிலம் எனப்படுவதால் ஒருவருக்கு மேற்பட்டவர்களோடு தொடர்பு கொண்டன எனலாம். இரு துண

டங்கள் ". . . உள்ளிட்டார் ஆள்கிற" என்று குறிப்பிடப்படுகின்றன. "ஆள்தல்" என்ன பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது எனக் கூறுவது கடினம்.

10. ஆயினும் 617 : வடக்கு மடத்தைச் சேர்ந்த சட்டப் பெருமக்களைச் (ஆசிரியர் அல்லது தலை மாணாக்கர்) சேர்ந்தது எனப்படுகிறது.
11. காட்டாக இரண்டாம் ராஜேந்திரன் கால மணிமங்கலம் கல்வெட்டு ஒன்றில் (தெக. III, எண் : 30) "மஹா சபையோமே இறையிறுத்துக் குடுப்போமாநொம்" என்று வருகிறது. இந்த வரியை சபை விதித்திருந்தால் மேற்கண்ட தொடர் பொருளற்றதாகிவிடும்.
12. K.V. Subrahmaniya Aiyer and K.S. Vaidyanathan, 'The Kodumbalur Chiefs and the Revival of the Cholas', *QJMS*. No.p. 43 (1953).
13. கொடும்பாளூர்க் குரிசில்கள் கொடையாக அளித்த நெல் வேலி ஒன்றுக்கு 120 கலம் (எண் : 624) என்று தெரிகிறது. இது அவர்களுக்குரிய நிலவரியென்று கொள்ளவேண்டும். முதல் ராஜராஜன் கல்வெட்டுக்களிலிருந்து (பார்க்க: கீழே அதிகாரம் : 9) சோழ அரசு வேலி 100 கலமாக நிலவரி (காணிக்கடன்) வசூலித்தது என்று தெரிகிறது. இங்கே கொடும்பாளூர்க் குரிசிலும் சோழ அரசும் தனித்தனியாக வரி விதித்து வசூலித்திருந்தால் வேலிக்கு 220 கலம் கொள்ளப்பட்டது என்றாகும். இது இரட்டிப்பு மடங்கு வரி ஆகுமாதலால் இருவரும் வசூலித்தார்கள் என்ற ஊகம் சரியாகாது.
14. 'Land Donation to Hindu Temples in Medieval South India', *Journal of Asian and African Studies,* No. 2, 1969, pp. 29 - 65.
15. வெளியிடப்படாத கட்டுரையிலிருந்து.
16. இந்தப் பதினொரு பரிவர்த்தனைகளைத் தெரிவிக்கும் (வெளியிடப்படாத) கல்வெட்டுக்களாவன. இக. 1936 - 37, எண்கள் : 138, 139, 144, 147, 148, 151 - 54, 156, 157. இன்னும் வெளியிடப்படாத இக்கல்வெட்டுக்கள் 1980 இல் 'திருச்சிராப்பள்ளி மாவட்ட ஊர்களில் சமூகப் பண்பாட்டு மாற்றம்' குறித்த ஒரு ஆய்வுத்திட்டத்துக்காக ஆயப்பட்டன.
17. இவற்றில் மூன்றன் பாடம் மட்டும் முழுமையாக வெளியிடப்பட்டுள்ளன: தெக..VIII, எண் : 336, 340, தெக. IV : எண் 424. வேறு மூன்று அரைகுறையாக வெளியிடப்பட்டுள்ளன. தெக. VIII, எண் : 337 - 339. இவை மீண்டும் படியெடுக்கப்பட்டுள்ளன. இக. 1964 - 65, எண் : 500 - 502.
18. இதன் விலை வேலி 2000 காசு என்றுள்ளது. மற்ற புன்செய்த் துண்டங்களுக்கும் இதே விலை சொல்லப்பட்டுள்ளது.
19. இசணைக்குறை ஊர் மன்றம் விற்ற இந்த நிலம் ஊரில் ஒரு பகுதியே. மேலும் இங்கு தனியாள் நிலம் விற்றமை பற்றியும் செய்தி உள்ளது.
20. இந்த ஊர் தேவதானம் ஆக இல்லையென்றால் உடைமையாளர் ஏறக்குறைய இதே அளவு விளைச்சல் பகுதியை அரசுக் கருவூலத்துக்கு செலுத்தியிருக்கக் கூடும்.
21. பார்க்க : கீழே அதிகாரம் - 7.
22. பார்க்க : மேலது, மற்றும் K.A. Nilakanta Sastri, *The Colas,* 1955, p. 463.
23. சில சாட்சிகள், வேறு கல்வெட்டுக்களில் விற்பனையாளர்களாகவும் காணப்படுகிறார்கள்.

24. சோழர் கல்வெட்டுக்களில் ஆட்பெயராய்வும் இத்தகைய பட்டங்கள் பெற்றோர் பொதுவாகவே பெருகியதைத் தெரிவிக்கிறது. (பார்க்க: அதிகாரம் 7) கீழ்வரும் அட்டவணை அதை விளக்கும் : ஒவ்வொரு பட்டத்திலும் முதல்வரி தஞ்சாவூர் மாவட்டத்தையும், இரண்டாம் வரி திருச்சிராப்பள்ளி மாவட்டத்தையும் குறிக்கும்.

| | காலகட்டம் | | | |
|---|---|---|---|---|
| பட்டம் | 1 | 2 | 3 | 4 |
| உடையான் | 11.4 | 12.5 | 15.9 | 22.6 |
| | 4.3 | 14.4 | 16.9 | 17.6 |
| அரையன் | 4.8 | 6.2 | 7.8 | 13.2 |
| | 5.5 | 8.3 | 12.4 | 23.1 |
| வேளான் | 4.2 | 10.6 | 5.7 | 3.6 |
| | 1.2 | 7.6 | 5.6 | 9.0 |
| ஆழ்வான் | 0 | 0 | 0.2 | 0.5 |
| | 0 | 0.7 | 1.7 | 7.2 |

25. George W. Spencer, 'Temple Money-lending and Livestock redistribution in Early Tanjore' *IESHR*, vol. V, 277 - 93.

26. S.Y. Krishnaswamy, 'Major Irrigation Systems of Ancient Tamilnadu, *Proc. of the First International Conference - Seminar of Tamil Studies*, vol. I, 1968, pp. 451 - 61.

27. பார்க்க : கீழே அதிகாரம் 5.

28. இக் கல்வெட்டுக்கள் குறிப்பிடும் ஊர்களை இன்று தெளிவாக அடையாளம் காண முடியவில்லை. ஆனால் இவை இருந்த உம்பளநாடு, கானத்தூர் நாடு, இடையள நாடு முதலிய நாடுகள், Y. Subbarayalu, *Political Geography of the Chola Country* இல் உள்ள நிலப்படங்கள் படி திருத்துறைப்பூண்டி மற்றும் நாகபட்டினம் வட்டங்களில் இருந்தன என்பதைக் குறிப்பிடலாம்.

29. கொடை, விற்பனை முதலியவற்றின் மூலம் கோயில்களில் நிலம் குவிந்தமையும் நிலவுடைமை முறையில் மாற்றம் ஏற்படக் காரணியாக அமைந்திருக்கக்கூடும். இருப்பினும் தனியாரிடையில் நிகழும் உலகியல் சார்பான பரிவர்த்தனைகள் கூடுதல் மாற்றங்களை ஏற்படுத்தி நிலமானிய முறைத் தோற்றத்துக்கு பின்புலமாக அமையும்.

30. எண் 448 இல் உள்ள நிகழ்வும் இதுபோன்றதே. ஏனெனில் அதிலும் 'என்னுதாய்' என்ற தொடர் வருகிறது. ஆனால் 'அனுபவித்து' என்ற சொல் இல்லை.

31. இந்த ஊர் இப்பொழுது பெரம்பலூர் வட்டத்தில் பாடாலூர் என்ற பெயரில் நெய்க்குளத்துக்குப் பக்கத்தில் உள்ளது.

32. சுருதிமான் இப்பொழுது சுதர்மான் என்ற பெயரில் ஒரு சாதியின் பெயராக லால்குடி, பெரம்பலூர் வட்டங்களில் வழக்கில் உள்ளது. இடைக்காலத்தில் சுருதிமான்கள், பள்ளி, அகம்படியார் போன்ற போர்மரபுக் கூட்டத்தினராக இருந்ததாகத் தெரிகிறது.

33. இங்கும் இதற்குப் பின்பும் வேலியில் பெரிய பின்னங்களே குறிக்கப்பட்டுள்ளன. மிகச் சிறிய பின்னங்கள் (முந்திரி, அரை முந்திரி முதலியவை) வசதியின் பொருட்டு விடப்பட்டுள்ளன.

34. ஊரின் பெயரை முன்னொட்டாகக் கொண்டு வரும் "உடையான்" பட்டம் பெற்றவர்கள் (காட்டு : பாடாவூர் உடையான்) குறிப்பிட்ட ஊரில் நிலக்கிழமை அல்லது காணி உரிமை உடையார்களாகக் கொள்ளலாம். சில பெயர்கள் புனிதத் தலங்களை ஒட்டியும் வரலாம். காட்டு: திருச்சிற்றம்பலம் உடையான்.
35. பேரரையன் என்றால் பெரிய அரசன் என்று நேர் பொருள் தரும். ஆனால் இங்கு ஒரு சிறப்புப்பட்டமாக வழங்கப்படுகிறது. நாடாழ்வான், நாடு + ஆழ்வான், அதாவது நாட்டை ஆள்பவன் எனக் கொள்ளலாம். பார்க்க : அதிகாரம் 7.
36. ஊற்றத்தூர் நாடுடையான். ஊற்றத்தூர் நாட்டில் ஏதோ மேல் உரிமைகளைப் பெற்றவராகக் கொள்ளலாம். இந்த நாடு இப்பொழுது ஊட்டத்தூர் எனப்படும் ஊரை மையமாகக் கொண்டிருந்த நாடாகும்.
37. அகம்படியார் ஒரு போர்மரபு இனத்தின் பெயர். பிற்காலத்தில் அது ஒரு சாதியின் பெயராக ஆகிவிட்டது. சோழர் கல்வெட்டுக்களில் பெரும்பாலும் போர்வீரர் என்ற நிலையில் இப்பெயர் ஆளப்படுகிறது.
38. இவ்வூர் லால்குடி வட்டத்தில் இதே பெயரில் உள்ளது.
39. பெரிய குருக்கைக்குத் தெற்கில் உள்ளது இந்த ஊர்.
40. இப்பொழுது சன்னமங்கலம் என்ற பெயரில் பெரிய குருக்கைக்கு மேற்கில் உள்ளது.
41. இப்பொழுது திருப்பங்கிலிக்குத் தெற்கில் உள்ள தொடையூர் ஆகும்.
42. கும்பகோணத்துக்குப் பக்கத்தில் உள்ள தருமபுரம் ஆகலாம்.
43. 'கிழமை' என்பதன் அடிப்படையாகப் பிறந்த சொல் கிழவன். இதுவும் உடையான் பட்டமும் ஒரே பொருளில் ஆளப்பட்டுள்ளன எனத் தெரிகிறது. (பார்க்க : மேலே அகு. 34). பழுவூர், கொள்ளிடத்துக்கு வடக்கில் மூன்று கிலோமீட்டர் தொலைவில் உள்ள பழுர் ஆகக் கொள்ளலாம்.
44. W. Hudleston (ed.), *Papers on Mirasi Right,* 1862.
45. நாடுடையான் பற்றிப் பார்க்க : மேலே அகு. 36.
46. இக்கல்வெட்டின் அரசன் முதல் குலோத்துங்கன் எனக் கொள்வதற்குக் காரணம் இக்கல்வெட்டில் கொடையாளியின் அரசச் சார்புப் பட்டப் பெயரான 'ஜெயங்கொண்ட சோழன்' முதல் குலோத்துங்கனுக்குப் பின்புள்ள அரசர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. எனினும் இத்தகைய பெரிய நிலப்பகுதியை உடைமையாகப் பெற்றவர்கள் இதற்குப் பின்பே நிறையக் காணப்படுகிறார்கள்.
47. பள்ளிச்சந்தம், சமண அல்லது புத்தக் கோயில்களுக்கு வழங்கப்பட்ட கொடை. நீத்தோர்பட்டி, இறந்த வீரர் நினைவாக வழங்கப்பட்ட கொடை நிலம்.
48. பார்க்க : அதிகாரம் 9.
49. கொள்ளிடத்துக்குத் தெற்குப் பகுதியில் பொருளாதார வளர்ச்சி தொடர்பாக : பார்க்க : R. Champakalakshmi, 'Growth of Urban Centres in South India ; Kudamukku - Palaiyarai, the Twin-City of the Colas' *Studies in History,* vol. 1, No. 1, 1979.
50. பச்சைமலை அடிவாரத்திலுள்ள சிங்களாந்தகபுரத்தில் உள்ள ஒரு கல்வெட்டு முதல் ராஜேந்திரன் காலத்தில் குறும்பரும், வந்நியரும் கொல்லி மலை மேலிருந்த ஒரு ஊரைச் சேர்ந்தவரைத் தாக்கிச் சிறை பிடித்து கொண்டு போனார்கள் என்கிறது (இக. 1943 - 44, எண் : 229).

# அதிகாரம் 5

# சோழ அரசின் அதிகாரக் கட்டமைப்பு

ஒரு சமூகம் வரலாற்றுப் போக்கில் அடையும் மாறுதல்களைப் புரிந்து கொள்ள அதன் சமூக அரசியல் கட்டமைப்பை ஆய வேண்டியுள்ளது. பழைய இந்தியச் சமூகத்தின் சமூக அரசியல் கட்டமைப்பை விளக்க இதுவரை நிலமானிய முறை, பொது அடிமை முறை (General slavery), கீழைத்திசை வல்லாட்சி, முதலிய பல கோட்பாடுகள் பயன் படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் எந்தக் கோட்பாட்டை வற்புறுத்தினாலும் இந்தியச் சமூகத்தில் கிராம சமூகம் ஒரு முக்கிய கூறாக இருந்தது என்பதை மறுப்பதற்கில்லை. ஆகவே பண்டைய இந்தியாவின் சமூக அரசியல் கட்டமைப்பைத் தெளிவாக்க இரு பொருள்களை ஆழ்ந்து பார்க்க வேண்டும். ஒன்று, கிராம சமூகத்தின் வரலாற்றியல் தன்மை; இரண்டு, கிராம சமூகங்களை ஆட்கொண்ட அதிகாரப் பின்னல். முதல் பொருளினைப் பற்றி வேறு அதிகாரங்களில் ஆராயப்படுகிறது.[1] இங்கு இரண்டாம் பொருளைப் பற்றிப் பார்க்கலாம். சில ஆண்டுகளுக்கு முன்பு பர்டன் ஸ்டெயின் சோழமண்டலத்தின் மையப்பகுதிகளில் இயங்கிய சித்திரமேழி என்ற வெள்ளாள உழவரின் மன்றம் எப்படி வணிகர் மற்றும் கைவினைஞரோடு இணைந்து சமூக ஒருங்கிணைப்புக்கு வழிகோலியது என்று ஆராய்ந்து கட்டுரை வெளியிட்டார்.[2] ஏறக்குறைய அதே நோக்கத்துடன் பிரமதேய ஊரின் சமூக ஒருங்கிணைப்புச் செயன்மை பற்றி இவ்வியலில் ஆயப்படுகிறது.[3]

முதல் அதிகாரத்தில் குறிப்பிட்டபடி, சோழர் காலத்தில் பெரும்பான்மையாக இருந்தவை வெள்ளான் ஊர்களாகும். இவ்வூர்களில் ஊர் (அல்லது ஊரார்) எனப்பட்ட நிலக்கிழார் கொண்ட ஊராட்சி மன்றம் இருந்தது. இயல்பாகவே

சமுதாயத்தின் அடிப்படை, உற்பத்தி வர்க்கத்தினரைக் கொண்டு இருந்தமையால் வெள்ளான் ஊர்களைத் தம் கட்டுப்பாட்டுக்குக் கீழ் வைத்திருக்கச் சோழ அரசு முதன்மை அக்கறை கொண்டு இருந்தது. மாறாக, பிரமதேயங்கள் சிறுபான்மையாகவே இருந்தன. அரசர்களின் கொடைகளால் ஏற்படுத்தப்பட்ட இவ்வூர்களில் பிராமணர்கள் வாழ்ந்து பிராமணரல்லா மக்கள் மீது மேலாதிக்கம் செலுத்தினார்கள். இவ்வூர்ச் சமூகத்தில் பிராமண நிலக்கிழார்கள் முதல் நிலையிலும் அவர்களுடைய நிலங்களை உழுது பயிரிட்ட வெள்ளான் குடிகள் அடுத்த நிலையிலும் இருந்தார்கள்; அதாவது இருபடிச் சமூகமாக அது இருந்தது என்று மேலே பார்த்தோம்.

தங்கள் ஊர் நிர்வாகத்துக்காகப் பிராமண நிலக்கிழார்கள் சபை என்ற ஊராட்சி மன்றத்தை அமைத்துக் கொண்டார்கள். இவ்வூரில் வேளாண்மை, பாசனம் முதலிய பல செயல்களை இச்சபை கவனித்தது. முற்பாண்டியர் கால மானூர்க் கல்வெட்டின்படி சபை உறுப்பினர் தர்ம சாஸ்திரங்களிலும், வேத வேதாங்கங்களிலும் குறிப்பிட்டளவு பயிற்சி பெற்றிருக்க வேண்டும்.[4] ஆகவே, சபை உறுப்பினரான பிராமணர் ஒரு வகைப் பண்பாட்டுத் தாக்கம் செய்யவும், சுற்றியுள்ள மக்களுக்குப் பிராமணியக் கருத்துக்களை ஊட்டவும் ஏற்ற சூழ்நிலை இருந்தது எனலாம்.

பிரமதேயங்கள் அரசரால் ஏற்படுத்தப்பட்டு அரச அரவணைப்பில் வளர்ந்தனவாதலால் அரசர்களுக்கும் பிராமண ஊர்களுக்கும் நெருங்கிய உறவு இருந்தது என்பது போதரும். உத்தரமேரூர்க் கல்வெட்டுக்களின் படி அவ்வூர்ச் சபைத் தேர்தல் விதிகளைப் பற்றிய முடிவுகள் அரசனால் அனுப்பப்பட்ட ஒரு அதிகாரியின் முன்னிலையில் எடுக்கப் பட்டன என்பதையும்[5] முதல் ராஜராஜன் தான் எழுப்பிய தஞ்சைப் பெரிய கோயிலில் பண்டாரிகள், கணக்கர்கள், மெய்காவலாளர்களாகப் பணிபுரிய ஏற்ற ஆட்களை அனுப்பி வைக்குமாறு பிரமதேய ஊர்ச் சபைகளுக்கு ஆணை பிறப்பித்தான் என்பதையும்[6] இங்குக் குறிப்பிட வேண்டும்.

**பிரமதேய ஊர்களின் பரப்பீட்டுத் தன்மையும் நாடுகளும்**

நிர்வாகத்தின் பொருட்டு சோழராட்சிப் பகுதி மேலிருந்து கீழாக, மண்டலங்கள் வளநாடுகளாகவும், வளநாடுகள் நாடுகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தன.[7] ஒவ்வொரு நாடும் சில ஊர்களை உட்கொண்டிருந்தது. முதல் ராஜராஜன் கல்வெட்டுக்களில் (குறிப்பாகத் தஞ்சாவூர்க் கல்வெட்டுக்களில்) காணப்படும் ஊர்களைக் கல்வெட்டாய்வாளர் வெ. வெங்கையா நாடுகள் வாரியாக ஒரு அட்டவணை செய்து கொடுத்துள்ளார்.[8]

அக்கல்வெட்டுக்களைக் கூர்ந்து பார்த்தால் பிரமதேய ஊர்களைப் பிற (வெள்ளான்) ஊர்களிலிருந்து வேறுபடுத்தி இனம் காண முடியும். சோழநாட்டில் பிரமதேயங்கள் எப்படிப் பரவிக்கிடந்தன என்பதையும் அறியலாம்.[9]

**அட்டவணை 3**

**சோழமண்டலத்தில் நாடுகளும்பிரமதேயங்களும்**

| வ. எ. | நாடு | பிரமதேய ஊர் எண்ணிக்கை | வ. எ. | நாடு | பிரமதேய ஊர் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| | | **அருமொழிதேவ வளநாடு** | | | |
| 1. | அளநாடு | 2 | 7. | புலியூர் நாடு | 0 |
| 2. | ஆர்வலக் கூற்றம் | 2 | 8. | புறங்கரம்பை நாடு | 10 |
| 3. | இடையள நாடு | 2 | 9. | தக்களூர் நாடு | 1 |
| 4. | இங்கணாடு | 2 | 10. | வலிவலக் கூற்றம் | 0 |
| 5. | மங்கல நாடு | 1 | 11. | வண்டாழை வேளூர் கூற்றம் | 3 |
| 6. | நென்மலி நாடு | 4 | | | |
| | | **க்ஷத்ரியசிகாமணி வளநாடு** | | | |
| 1. | அளநாடு | 3 | 7. | சேற்றூர் கூற்றம் | 3 |
| 2. | இங்கணாடு | 1 | 8. | தேவூர் நாடு | 1 |
| 3. | மருகல் நாடு | 4 | 9. | திருநறையூர் நாடு | 5 |
| 4. | பனையூர் நாடு | 1 | 10. | திருவாரூர் கூற்றம் | 1 |
| 5. | முழையூர் நாடு | 1 | 11. | வேளா நாடு | 1 |
| 6. | பட்டினக் கூற்றம் | 9 | | | |
| | | **கேரளாந்தக வளநாடு** | | | |
| 1. | சூரலூர் கூற்றம் | 1 | 3. | உறையூர் கூற்றம் | 7 |
| 2. | தட்டைகள நாடு | 1 | | | |
| | | **நித்த விநோத வளநாடு** | | | |
| 1. | ஆவூர் கூற்றம் | 4 | 6. | நல்லூர் நாடு | 2 |
| 2. | காந்தார நாடு | 1 | 7. | பாம்புணி கூற்றம் | 1 |
| 3. | கரம்பை நாடு | 1 | 8. | பொயிற் கூற்றம் | 0 |
| 4. | கிழார் கூற்றம் | 1 | 9. | வெண்ணி கூற்றம் | 4 |
| 5. | முடிச்சோழ நாடு | 2 | 10. | வீர சோழ வளநாடு | 0 |

### பாண்டிகுலாசனி வளநாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆற்காட்டுக் கூற்றம் | 1 | 10. | பனங்காடு நாடு | 0 |
| 2. | எயி நாடு | 1 | 11. | தஞ்சாவூர் கூற்றம் | 0 |
| 3. | ஏரியூர் நாடு | 0 | 12. | புன்றிற் கூற்றம் | 1 |
| 4. | இடையாற்று நாடு | 3 | 13. | புறக்கிளியூர் நாடு | 1 |
| 5. | கிளியூர் நாடு | 0 | 14. | சுண்டைமூலை நாடு | 1 |
| 6. | கீழ்செங்கிளி நாடு | 0 | 15. | வடகவிர நாடு | 0 |
| 7. | கீழ்சூதி நாடு | 0 | 16. | வடசிறுவாய் நாடு | 1 |
| 8. | மீசெங்கிளி நாடு | 1 | 17. | விளா நாடு | 3 |
| 9. | மீய்பொழி நாடு | 0 | | | |

### ராஜராஜ வளநாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஏமப்பேர் கூற்றம் | 0 | 6. | புலிவல கூற்றம் | 0 |
| 2. | கீழ் வேங்கை நாடு | 1 | 7. | புன்றில் கூற்றம் | 0 |
| 3. | குன்றிற் கூற்றம் | 0 | 8. | சென்னிமங்கல கூற்றம் | 1 |
| 4. | பன்றியூர் நாடு | 0 | 9. | வரகூர் நாடு | 0 |
| 5. | பொயிற் கூற்றம் | 0 | | | |

### ராஜேந்திரசிங்க வளநாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அதிகைமங்கை நாடு | 1 | 11. | நாங்கூர் நாடு | 3 |
| 2. | அண்டாட்டு கூற்றம் | 3 | 12. | நெலுவூர் நாடு | 1 |
| 3. | இன்னம்பர் நாடு | 6 | 13. | பிடவூர் நாடு | 2 |
| 4. | கார் நாடு | 1 | 14. | பொய்கை நாடு | 2 |
| 5. | கொண்ட நாடு | 1 | 15. | திருக்கழுமல நாடு | 3 |
| 6. | குறுக்கை நாடு | 4 | 16. | திருவாலி நாடு | 2 |
| 7. | மண்ணி நாடு | 6 | 17. | திருவிந்தளூர் நாடு | 3 |
| 8. | மிறை கூற்றம் | 2 | 18. | உத்துங்க துங்க வள நாடு (குன்ற கூற்றம்) | 0 |
| 9. | மிழலை நாடு | 1 | 19. | வெண்ணையூர் நாடு | 5 |
| 10. | நல்லாற்றூர் நாடு | 2 | 20. | விளத்தூர் நாடு | 1 |

### ராஜாச்ரய வளநாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கலார கூற்றம் | 1 | 4. | செம்புறை கண்டம் | 1 |
| 2. | மீமலை | 2 | 5. | வடவழி நாடு | 0 |
| 3. | பாச்சில் கூற்றம் | 3 | 6. | வெண்கோன் குடி கண்டம் | 1 |

### உய்யக் கொண்டான் வளநாடு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆக்கூர் நாடு | 3 | 6. | திரைமூர் நாடு | 2 |
| 2. | அம்பர் நாடு | 5 | 7. | திருநறையூர் நாடு | 1 |
| 3. | குறும்பூர் நாடு | 6 | 8. | திருவழுந்தூர் நாடு | 4 |
| 4. | மருகல் நாடு | 1 | 9. | வெண்ணாடு | 6 |
| 5. | பாம்பூர் நாடு | 4 | 10. | விளா நாடு | 4 |

இந்த அட்டவணையிலிருந்து பெறப்படுவது, முதல் ராஜராஜன் காலத்தில் சோழரின் மைய ஆட்சிப் பகுதியான சோழ மண்டலத்தில் இருந்த நாடுகளில் பெரும்பான்மை, இரண்டு அல்லது மூன்று பிரமதேய ஊர்கள் இருந்தன என்ற உண்மை. இப்போதைக்கு மற்ற மண்டலங்களைப் பற்றி விவரமான தரவுகள் இல்லையென்றாலும் வடபகுதியான ஜெயங்கொண்ட சோழமண்டலத்திலும், ஒவ்வொரு நாட்டிலும் ஒன்று அல்லது இரண்டு பிரமதேயங்கள் ஆள்பவர்களால் உண்டாக்கப்படும் வழக்கம் நிலவியது என்று தெரிகிறது.

ஒவ்வொரு நாட்டிலும் நாடு அல்லது நாட்டார் என்று சொல்லப்பட்ட ஆட்சிமன்றம் இருந்தது என்றும் அது உள்ளாட்சியில் முக்கிய பங்காற்றியது என்றும் பல கல்வெட்டுக்களிலிருந்து அறிகிறோம். உள்ளூர்த் தொடர்பான அரச ஆணைகள் இந்த நாட்டுமன்ற உறுப்பினர்களுக்கே முதலில் தெரிவிக்கப்பட்டன.[10]

வேள்விக்குடிச் செப்பேட்டின்படி கைதவறிப் போன தன் பரம்பரை நிலக்கிழமையை மீட்டுத் தருமாறு ஒரு பிராமணர் பாண்டிய அரசர் நெடுஞ்சடையனுக்கு முறையிட்டதாகவும் அரசர் நாட்டுமன்றத்தைக் கொண்டு தன் கிழமையின் பழமையை நிறுவ வேண்டும் என்று அறிவுறுத்தியதாகவும் வேள்விக்குடிச் செப்பேட்டுப் பட்டயம் தெரிவிக்கிறது.[11] வேறுசில கல்வெட்டுக்களின்படி நாட்டுமன்றம் அரசு வரியைச் செலுத்தும் பொறுப்புடையதாக இருந்தது என்று அறிகிறோம்.[12]

நாட்டுமன்றம் எப்படி அமைக்கப்பட்டது என்பது பற்றி இன்னும் தெளிவேற்படவில்லை. அந்தந்த நாட்டிலிருந்த எல்லா ஊர்களிலிருந்தும் பேராளர்களைக் கொண்டு இந்த மன்றம் உருவாக்கப்பட்டது என்பது நீலகண்ட சாஸ்திரியாரின் கருத்தாகும்.[13] எப்படியும் சபைகளின் பேராளர்கள் இந்த நாட்டு மன்றங்களில் இடம் பெற்றிருக்க வேண்டும்.[14] உள்ளூர் முன்னோடிகள் என்ற வகையில் இந்த மன்றங்களில் முதன்மைப் பங்கு வகித்து உள்ளாட்சியில் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருக்க வேண்டும். முடிவாக, பிரமதேயங்கள், வெள்ளான் ஊர் மக்களிடையே பிராமணியக் கருத்துக்களைப் பரப்பி, வட்டாரங்களில் சமூக அமைதியைக் கொண்டு செலுத்த முனைப்பான பங்காற்றியது என்று விவாதிக்கலாம். உள்ளூர்ப் பகுதிகளில் உணவுப் பெருக்கத்துக்கு தூண்டுகோலாகவும் அவை இருந்திருக்கக் கூடும். அதாவது, பிரமதேயங்கள் சோழ அரசின் அதிகாரக் கட்டமைப்பின் உள்ளூர் மையங்களாக அமைந்து சுற்றியிருந்த வெள்ளான் ஊர்களை ஒருங்கிணைத்துக் கட்டுப்படுத்தப் பயன்பட்டன எனலாம்.

# அதிகாரம் 6

# கிராம சமூகங்கள் : கற்பனையும் உண்மையும்

தென்னிந்திய வரலாற்று நூல்களில் 'கிராம சமூகம்' என்ற சொற்றொடர் அடிக்கடி பயன்படுத்தப்பட்டுள்ளது. கிருஷ்ணசுவாமி அய்யங்கார், நீலகண்ட சாஸ்திரி மற்றும் பலர் எழுதிய நூல்களில் இதனைக் காணலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஆங்கிலேய ஆட்சியாளர்கள் வரிவசூல் தொடர்பாக இச்சொற்றொடரினை முதன் முதலில் பயன்படுத்தினர். குறிப்பாக, நில வரியை யாரிடமிருந்து வசூலிக்க வேண்டும் எனத் தீர்மானிக்குங்கால் 'கிராம சமூகம்' என்ற அமைப்பு வழக்கத்தில் இருப்பதைக் 'கண்டு பிடித்தனர்'. இதற்குப் பின் இந்திய வரலாற்று ஆய்வுநிலை அல்லது பயன் படுத்துவோர் நோக்கங்களுக்கு ஏற்பச் சில குறிப்பு மாற்றத்துடன் இத்தொடர் இந்தியச் சமூகத்தை விளக்கும் பொருட்டு அடிக்கடி கையாளப்பட்டு வருகிறது.[15]

தலைமை ஆளுநராகத் தற்காலிகப் பொறுப்பு ஏற்றிருந்த சர். சார்லஸ் டி. மெட்காவு என்பவரின் இந்தியக் கிராம சமூகம் குறித்த விளக்கம் தான் அடிக்கடி மேற்கோளாகக் காட்டப்படுவதாகும்.

> "கிராம சமூகங்கள் குட்டிக் குடியரசுகள்; தேவையான அனைத்தையும் தங்களுக்குள் பெற்றிருந்தன. இங்கு அயலார் தலையீடு பெரும்பாலும் இல்லை. இவை மற்ற நிறுவனங்கள் வீழ்ச்சியுற்ற போதும் நிலை பெற்று நின்றுள்ளன. அரசகுல மரபுகள் பல வீழ்ச்சியுறுகின்றன; புரட்சிக்குப் பின்னர் புரட்சி தோன்றுகின்றது ஆயினும் கிராம சமூகம் மட்டும் அதுவாகவே நிலை பெற்றுள்ளது."

1830இல் மெட்காவு மேற்கிந்தியாவில் ரயத்துவாரி முறையைப் புகுத்துவற்கு எதிர்ப்புத் தெரிவிக்குமுகத்தான் இக்

கருத்துகளை வெளியிட்டார்.[16] மேலும் கிராம சமூகங்கள் பண்டு முதல் இந்திய மக்களை ஊட்டி வளர்த்தன என்றும் புகழ்பாடியுள்ளார்.

கிராம சமூகங்களின் பங்களிப்பு பற்றிப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காரல் மார்க்சு, என்றி மெயின் ஆகியோர் எதிரான கருத்துக்களை வழங்கினர். இவை இந்தியாவில் தேக்க நிலை உருவாவதற்கு தலையாய காரணம் என்றனர். நீண்ட காலமாக, பல ஆய்வாளர்கள் ஏற்றுப் பயன் படுத்தி வரும் இக்கருத்தோட்டத்தில் இரு மையக் கருத்துக்கள் உள்ளன : (1) கிராமங்களில் நிலவிய சமூக நில உடைமை ; (2) பொருளாதார மற்றும் சமூகத்தன்மை அல்லது கிராமத் தன்னிறைவு. உழவர்களோடு பிற தொழில் வகுப்பார் கிராமத்தில் தங்களை இணைத்துக் கொண்டதும் அவர்களிடம் இருந்த தொழில் பகிர்வும் கிராமத் தன்னிறைவை ஏற்படுத்தித் தந்தன.[17]

இவற்றில் முதல் கருத்தை பேடன் பாவெல் மறுக்கின்றார். இவரால் வெளியிடப்பட்ட ஆங்கிலேய இந்தியாவின் நிலவுடைமை முறைகள் பற்றிய சிறந்த நூலில் அதற்கான காரணங்களைத் தருகின்றார். இந்தியாவில் நீண்ட காலமாக நிலவி வரும் தனியார் நில உடைமையைச் சுட்டிக் காட்டி அவற்றின் வரலாற்று முக்கியத்துவத்தையும் வலியுறுத்தினார்.[18] இவரது கருத்துக்களை நாம் முழுமையாக ஏற்க இயலாது. எனினும் சமூக நில உடைமை இந்தியக் கிராமங்களில் மிகப் பழங்காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை நிலவி வந்தது என்ற கருத்து இவர் திரட்டிய சான்றுகளால் பொய்ப்பிக்கப்பட்டுவிட்டது.

இரண்டாவது கருத்தான, கிராமத் தன்னிறைவு பற்றிச் சில திறனாய்வுகளே இதுகாறும் வெளிவந்துள்ளன. இவற்றுள் உருப்படியான முதல் திறனாய்வு சமூக மானிடவியலரால் தரப்பட்டது. வட இந்தியக் கிராமங்களில் "எஜமானி" என்ற முறை இருந்ததை 1930களில் W.H. வைசர் என்பவர் கண்டறிந்தார். இது சாதிப் பாகுபாட்டினை அடிப்படையாகக் கொண்டு, உள்ளூர் மக்கள் சமூக, பொருளாதாரக் கூட்டுச் சார்புத் தன்மை பெறும் முறையாகும். கிராம எல்லைகளைக் கடந்தும் இம்முறை இயங்கியது.[19] இந்தியாவின் பல்வேறு கிராமங்களில், 1950களில் நடத்தப்பெற்ற கள ஆய்வுகள் பல ஊர்கள் இந்தப் பொருளாதார சமூகத் தன்னிறைவு பெறுவதற்குத் தேவையான அனைத்து சாதிப் பிரிவுகளையும் பெற்றிருக்கவில்லை என்பதைத் தெளிவாக்கியது. பல ஊர்கள் அடங்கிய வட்டாரங்கள் அளவிலேயே பல சாதிகளிடையே தொழில் பகிர்வு நிகழ முடிந்தது. அதாவது ஒவ்வொரு கிராமமும் ஒரு குட்டிக் குடியரசு என்ற நம்பிக்கை பொய்த்துப் போனது.[20]

1960களில் அலிகார் மற்றும் தில்லியைச் சார்ந்த முகலாய வரலாற்று ஆய்வாளர்களால், இரண்டாவது திறனாய்வு உருவானது. ஊரைவிடப் பெரிய ஒரு நிலப்பரப்பின் முக்கியத் துவம் இங்கு வலியுறுத்தப்பட்டது. இப்பெரு நிலப்பரப்பு ஏறக் குறைய ஒரு தயாதிக் கூட்டத்தின் நிலப்பரப்பாகும்.[21] மேற்கண்ட கருத்தையே பர்டன் ஸ்டெயின் வலியுறுத்தினார். இவர் பண் டைய தென்னிந்திய உழவர் சமூக அமைப்பின் தன்மைகளைப் புரிந்து கொள்ள முயற்சிகள் மேற்கொண்டாலும்[22] கிராம சமூகம் பற்றிய முழுமையான ஓராய்வை மேற்கொள்ளவில்லை. பல்லவ–சோழர் தமிழ்க் கல்வெட்டுக்களின் அடிப்படையில் கிருஷ்ணசுவாமி அய்யங்கார் முதலிய பலர் கிராம சமூகம் குறித்து விரிவான ஆய்வுகள் மேற்கொண்டனர்.[23] எனினும், இவ்வாய்வுகள் தேக்கநிலை சமூகக் கொள்கையினைக் குறித்து ஒத்த கருத்தினையோ எதிர்ப்பையோ தெரிவிக்க முற்பட வில்லை. மாறாக பரம்பரையாக வரும் சமூக அமைப்பினைப் புகழ்ந்திடும் நோக்கில் பிரமதேய ஊர்களில் குடியாட்சி முறை நிலவியது என நிறுவ முற்பட்டனர்.

ஆகவே, மேற்குறிப்பிட்ட இரண்டு கருத்துக்களும் பழங்காலத் தென்னிந்தியக் கிராம நிலமைகளுக்குப் பொருந்தி இருந்தனவா என்பதைக் காண இதுவரை எந்த ஆய்வும் நடத்தப் பெறவில்லை. இவ்விரு கருத்துக்களில் இரண்டாவது கருத்தான பொருளாதார சமூகத் தன்னாட்சி அல்லது தன் னிறைவு பெற்ற கிராமங்கள் பற்றிய ஆய்வு சோழர் காலக் கல்வெட்டுக்களின் அடிப்படையில் இங்கு மேற்கொள்ளப்படு கிறது. இதற்கு தஞ்சைப் பெரிய கோயிலின் இரண்டு பெரிய கல்வெட்டுக்களும் (தெக. II, எண்கள் : 4, 5)[24], கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலின் ஒரு கல்வெட்டும் (தெக. IV, எண் : 524) அடிப்படை ஆதாரமாகும். இம்மூன்று கல்வெட்டுக்களும் நீண்ட கல்வெட்டுக்கள். மூன்றாவது மிகவும் சிதைந்துள்ளது.

அரச ஆணையுடன் தொடங்கும் தஞ்சாவூர்க் கல்வெட்டுக்கள் முதலாம் இராஜராஜனின் 29வது ஆட்சியாண்டில் வெளியிடப் பட்டவை. இவ்வரசன் தஞ்சைக் கோயிலுக்கு தேவதானமாக வழங்கிய ஊர்களிலிருந்து வசூலிக்கப்பட வேண்டிய நில வருவாயான காணிக்கடன் குறித்த விவரங்களைத் தெரிவிக்கும் இக் கல்வெட்டுக்களைக் கோயில் சுவர்களில் பொறிக்க ஆணையிட்டதை இவை பதிவு செய்கின்றன. இவற்றில் கீழ்க்கண்ட விவரங்கள் தரப்பட்டுள்ளன: (அ) ஊரின் பரப்பளவு; (ஆ) இறையிலியாகக் கழிக்கப்பட வேண்டிய நிலங்களின் விவரங்கள் மற்றும் அவற்றின் பரப்பளவு ; (இ) நிலவரி செலுத்த வேண்டிய எஞ்சிய பகுதிகளின் பரப்பளவு; (ஈ) நிலவரியாகச் செலுத்தவேண்டிய நெல் அல்லது பணத்தின் அளவு. இவ்வரசாணையைத் தொடர்ந்து சோழ மண்

டலத்திலிருந்து கொடையாக அளிக்கப்பட்ட 40 ஊர்கள் பற்றிய விவரங்கள் மேற்குறிப்பிட்ட வரிசையில் தரப்பட்டுள்ளன.

கங்கைகொண்ட சோழபுரத்துக் கல்வெட்டு (இனிமேல் க. சோழபுரம்) ஏழு பகுதிகளைக் கொண்டிருக்கலாம். ஒவ்வொரு பகுதியும் வீரராஜேந்திரனின் மெய்க்கீர்த்தியுடன் தொடங்குகிறது. இவனாலும் இவனது முன்னோர்களாலும் அளிக்கப்பட்ட தேவதான ஊர்களைப் பற்றி விவரிக்கிறது. கல்வெட்டு மிகவும் சிதைந்துள்ளதால் எத்தனை ஊர்கள் இக்கல்வெட்டில் விவரிக்கப்பட்டுள்ளன என்பதை அறிய இயலவில்லை. மேலும் சில கொடைகள் எவ்விதத்தில் கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலுடன் தொடர்புடையவை என்பதையும் தெரிந்து கொள்ள இயலவில்லை. எனினும் க. சோழபுரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஊர்கள் பற்றிய விவரங்கள் யாவும் தஞ்சைக் கல்வெட்டு வரிசையிலேயே உள்ளன. எனினும் க. சோழபுரத்தில் பலவகை இறையிலி நிலங்களின் பரப்பளவுகள், பயிர்களின் தன்மைக்கு ஏற்ப இறை நிலங்களை வகைப்படுத்தியமை ஆகியவை விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.

ஊரின் மொத்தப் பரப்பளவிலிருந்து கழிக்கப்படவேண்டிய இறையிலி நிலங்களைக் குறிப்பிடும் பகுதியில் தான் கிராமப் பொருளாதார மற்றும் சமூகத் தன்னிறைவு பற்றிய முக்கிய விவரங்கள் அடங்கியுள்ளன. தஞ்சைக் கல்வெட்டு அரச ஆணையில் கீழ்க்கண்ட நிலங்கள் தரப்பட்டுள்ளன: ஊர் நத்தம் (ஊராரின் குடியிருப்புப் பகுதி),[25] ஸ்ரீகோயில்கள், குளங்கள், ஊடறுத்துப்போன வாய்க்கால்கள், பறைச்சேரி, கம்மாணச்சேரி மற்றும் சுடுகாடு. ஆயினும் அரச ஆணையில் தரப்பட்டுள்ள அனைத்து இறையிலி நிலங்களும் ஒவ்வொரு ஊரிலும் உள்ளதாகச் சொல்லப்படும் இறையிலி நிலங்களும் மாறுபடுகின்றன. அதாவது அரசாணையில் தரப்படும் எல்லாவகை இறையிலி நிலங்களும் தனித்தனி ஊர்களில் சொல்லப்படும் இறையிலி நிலங்களில் காணப்படவில்லை. மேலும் பல கிராமப் பதிவுகளில் வேறு சில வகையான நிலங்களைப் பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. எல்லா ஊர்களிலும் விவரிக்கப் பட்ட இறையிலி நில விவரங்கள் குறித்துக் கீழ்வரும் அட்டவணையின் துணையோடு ஊன்றிப் பார்க்கலாம். இவ் அட்டவணையில் தஞ்சைக் கல்வெட்டு ஊர்களில் 40இல் ஒரு 7 ஊர்கள் தவிர்த்து எஞ்சிய 33 ஊர்களும் க. சோழபுரத்தில் 7 ஊர்களும் சேர்த்து 40 ஊர்கள் பற்றிய விவரங்கள் பகுத்துத்தரபட்டுள்ளன.[26]

அட்டவணை 4

| | | தஞ்சை | | | | | | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஊர் எண் | | அ. ஆ. | 1 | 2 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| ஊர்ப் பரப்பு | | | 134 | 111 | 7 | 6 | 24 | 34 | 7 | 6 | 52 | 39 | 31 | 6 | ? | 81 | 46 | 42 | 19 | 5 | 16 | 13 | 50 |
| இறையிலி நிலப்பரப்பு | | | 9 | 4 | 0.1 | 0.2 | 0.3 | 5 | 0.4 | 0.2 | 2 | 2 | 1 | ? | ? | 5 | 3 | 2 | 0.2 | 0.2 | 1 | 1 | 2 |
| நிலத்தீர்வை | | | 100 | 100 | 99 | 95 | 100 | 10* | 95 | 99 | 98 | 100 | 99 | ? | 100 | 8* | 77 | 100 | 100 | 100 | 100 | 99 | 99 |
| குடியிருப்புப் பகுதி | ஊர் நத்தம் | ○ | ○ | ○ | | | ○ | ○ | ○ | ○ | ◎ | ○ | | ○ | ○ | | ○ | ○ | ○ | ○ | | ○ | ○ |
| | ஊரிருக்கை | | | | | ○ | | | | | | | ○ | | | ○ | | ○ | | | ○ | | |
| | குடியிருக்கை | | | | | | | | | | | | | | | | | | | | | ○ | ◎ |
| | பறைச்சேரி | ○ | ○ | ○ | | | | ○ | | | | | ○ | | | ○ | ○ | ○ | ○ | ○ | ○ | ◎ | ◎ |
| | கம்மாளச் சேரி | ○ | ○ | | | | | | | | | | | | | | | | | | ○ | | ○ |
| | ஈழச் சேரி | | | | | | | | | | | | | | | ○ | | ○ | | ○ | | | |
| | பிற | | | | | | | ○ | | | | | | | | | | | | | | | |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| குளம் | | ○ | ○ | ◎ | ◎ | ○ | ◎ | ◎ | ◎ | ◎ | ◎ | ◎ | | ○ | | ○ | | | | | | ◎ | |
| கரை | | | | | | ○ | | | | | | | | ○ | | ◎ | | ○ | | | | ○ | ○ |
| கால்வாய் | | ○ | ◎ | | | | ○ | | | | | ◎† | | | | ◎† | | ○ | ○ | | | ◎† | ○ |
| கோயில் | | ○ | | ◎ | | | | | | | ○ | | ◎ | ◎ | | ◎ | ◎ | ◎ | | | | ○ | ◎ |
| சுடுகாடு | | ○ | ○ | | | ○ | ○ | ○ | | | | ○ | ○ | ○ | ○ | | | | | | | | |
| ஊர்க்களம் | | | | | | | | | | | | | | | | ◎ | | | | | ○ | ○ | ○ |
| கொட்டகாரம் | | | | | | | | | | | | | | | | | | ○ | | ○ | | | |
| பிற | | | | | | | | | | | ○ | | ◎ | ○ | | ○ | | | | | | | ◎ |

அட்டவணை 4(தொடர்ச்சி)

| | தஞ்சை | | | | | | | | | | | | | க.சோழபுரம் | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஊர் எண் | 29 | 30 | 31 | 32 | 33 | 34 | 35 | 36 | 37 | 38 | 39 | 40 | மொ | 101 | 134 | 197 | 200 | 202 | 208 | 212 | மொ | இ.கூ. |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| ஊர்ப் பரப்பு | 24 | 7 | 153 | 11 | 21 | 26 | 3 | 3 | 7 | 11 | 53 | 28 | | ? | 54 | 53 | 24 | 37 | 47 | 67 | | |
| இறையிலி நிலப்பரப்பு | 0.5 | 0.5 | 3 | 0.4 | 4 | 0.7 | 0.2 | | 0.1 | 3 | 3 | 8 | | 0.7 | 1 | 5 | 2 | 4 | 4 | 7 | | |
| நிலத்தீர்வை | 100 | 100 | 99 | 98 | 5.3* | 9.8* | 8.5* | 10* | 9.7* | 99 | 100 | 8.2* | | 51 | 48 | 16 | 16 | 28 | 29 | ? | | |
| குடியிருப்புப் பகுதி: ஊர் நத்தம் | | | ○ | ○ | | ○ | ○ | | ○ | ○ | ○ | | 23 | ○ | | ○ | ○ | ○ | ○ | ○ | 6 | 29 |
| ஊரிருக்கை | ○ | ○ | | | ○ | | | | | | | ○ | 9 | | ○ | | | | | | 1 | 10 |
| குடியிருக்கை | | | ○ | | | | | | | | | | 3 | | | | | | | | | 3 |
| பறைச்சேரி | ○ | ○ | ○ | ○ | ○ | ○ | | | | | | ○ | 19 | | ○ | | | | | | 1 | 20 |
| கம்மாளச் சேரி | | ○ | ○ | ○ | | | | | | | | ○ | 7 | | | | | | | | | 7 |
| ஈழச் சேரி | ○ | | ○ | ○ | | | | | | | | | 6 | | | | | | | | | 6 |
| பிற | | | ○ | | | | | | | | ○ | ○ | 4 | | | | | | | | | 4 |
| | | | | | | | | | | | | | | | | | | | | | | |
| குளம் | | | ○ | | ◎ | ○ | | | | ○ | ○ | ◎ | 22 | ◎ | ○ | ○ | ○ | ◎ | ◎ | ○ | 7 | 29 |
| கரை | | | ○ | | ◎ | ○ | | | | ○ | | ○ | 11 | | | ○ | ○ | | | ○ | 3 | 14 |
| கால்வாய் | ○ | ○ | ○ | | | | | | | | | | 13 | | | ◎ | ◎ | ◎ | ◎ | ◎† | 5 | 18 |
| கோயில் | ○ | | ◎ | ◎ | ◎ | | | | | ○ | ○ | ◎ | 16 | | | ○ | ◎ | ◎ | ◎ | ◎ | 5 | 21 |
| சுடுகாடு | △ | △ | △ | △ | ○ | ○ | | | | | | ○ | 19 | | ○ | ○ | ○ | | ○ | ○ | 5 | 24 |
| ஊர்க்களம் | ○ | | | ○ | | | | | | | | | 6 | | | | | | | | | 6 |
| கொட்டகாரம் | | ○ | ◎ | | | | | | | | | | 4 | | | | | | | | | 4 |
| பிற | ○ | ○ | ○ | | ○ | | | | | | | ◎ | 10 | | | | | | | | | 10 |

**ஊர் வகைகளும் பரப்பளவும்**

அரச ஆணையில் 'ஊர்' என்ற பொதுச்சொல்லே பயன் படுத்தப்பட்டுள்ளது. இருப்பினும் தஞ்சைக் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள 33 ஊர்களில் மூன்று ஊர்கள் (எண்கள் : 12, 33, 40) 'நகரம்' என்ற வகையாகும். வணிக ஊர்களே 'நகரம்' எனப்பட்டன. இவற்றுடன் ஐந்து ஊர்கள் (34 - 38) ஒரு நகரத்துடன் (33) இணைக்கப்பட்டதாகச் சொல்லப்பட்டுள்ளது. எனவே, இவ்வைந்து ஊர்களையும் நகரங்களாகக் கொள்ளலாம். க. சோழபுரத்தில் கூறப்பட்டுள்ள 7 ஊர்களில் 'நகரம்' எவையும் இல்லை. மேலே குறிக்கப்பட்டுள்ள நகரங்களைத் தவிர தஞ்சைக் கல்வெட்டில் இரண்டு வகை ஊர்கள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று (39) சாலாபோகமாகும். (அறச்சாலைகளுக்கு கொடையாகத் தரப்பட்ட ஊர்); மற்றொன்று (16) பள்ளிச்சந்த (பௌத்த அல்லது சமணப் பள்ளிகளுக்கு மானியமாக அளிக்கப்பட்ட ஊர்) வகையிலிருந்து விடுவிக்கப்பட்டதாகும். இவை தவிர உள்ள பிற ஊர்களின் வகை பற்றிய குறிப்பு இல்லை. எனவே அவைகளை இயல்பான ஊர்களாகக் கருத வேண்டும். அதாவது அவை வெள்ளான் வகை ஊர்களாகும்.[27] இத் தரவுகள் எவையும் பிரமதேய ஊர்களைக் குறிப்பிடவில்லை என்பது இங்கு நோக்கத்தக்கது.

அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள 40 ஊர்களுள் 37 ஊர்களுக்குப் பரப்பளவு கிடைக்கிறது. அவற்றின் பகுப்பு கீழுள்ள அட்டவணையில் காட்டப்படுகிறது.

**அட்டவணை 5**

| நிலப்பரப்பு (வேலிகளில்) | ஊர்களின் எண்ணிக்கை |
|---|---|
| 1 – 10 | 9 |
| 11 – 20 | 5 |
| 21 – 30 | 6 |
| 31 – 40 | 4 |
| 41 – 50 | 4 |
| 51 – 60 | 4 |
| 61 – 70 | 1 |
| 81 – 90 | 1 |
| 111 – 120 | 1 |
| 131 – 140 | 1 |
| 151 – 160 | 1 |
| மொத்தம் | 37 |

அட்டவணைப்படி 100 வேலிகளுக்கும் மேற்பட்டதாகச் சில ஊர்கள் விளங்கினாலும் பெரும்பான்மையான ஊர்கள் 60 வேலிக்கும் குறைவான பரப்பு உடையன என்பது உறுதி.[28] எனினும் இவற்றுள்ளும் மிகுந்த வேறுபாடுகள் உள்ளன என்பதைக் கவனிக்க வேண்டும். இறையிலி நிலங்களின் பரப்பளவுகளும் பெரிதும் வேறுபட்டுள்ளன.

**ஊரிருக்கைப் பகுதி**

கீழ்க்கண்ட மூன்றுவகை ஊரிருக்கைப் பகுதிகளை அரச ஆணை குறிப்பிடுகிறது: ஊர் நத்தம், பறைச்சேரி (பறையர் குடியிருப்புப் பகுதி), கம்மாணச்சேரி (கம்மாளர் குடியிருப்புப் பகுதி). இருப்பினும் தனித்தனி ஊர்களை விவரிக்கையில் வேறு சிலவகைக் குடியிருப்புப் பகுதிகளும் சொல்லப்பட்டுள்ளன. அவையாவன : குடியிருக்கை (குடிகள் வாழும் பகுதி), ஈழச்சேரி (கள் இறக்குவோர் வாழும் பகுதி), தீண்டாச்சேரி (தீண்டத் தகாதவர் என்போர் வாழும் பகுதி), தலைவாய்ச்சேரி (நீர் செல்லும் தலைவாய்களைக் கட்டுப்படுத்துவோர் வாழும் பகுதி), தளிச்சேரி (கோயில் குடியிருப்பு). இறுதியில் கூறப்பட்ட மூன்று குடியிருப்புப் பகுதிகளும் சில ஊர்களில் மட்டுமே காணப்படுவதால் அட்டவணையில் பிற என்ற தலைப்பில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. மேலும் 8ஆம் எண்ணுடைய ஊர்ச் செய்திகள் கல்வெட்டில் சிதைந்துள்ளமையால் அட்டவணையில் சேர்க்கப்படவில்லை. இவ்வூரில் வண்ணாரச் சேரி (வெளுப்போர் குடியிருப்பு) இடம் பெற்றுள்ளது. எனவே அரச ஆணையில் கூறப்பட்டுள்ள மூன்று குடியிருப்பு வளாகங்களைத் தவிர, பிறவகைக் குடியிருப்புப் பகுதிகள் பலவும் ஊரில் இருந்துள்ளமை தெளிவு.

அரச ஆணையில் பறைச்சேரி சொல்லப்பட்டிருந்தாலும் தஞ்சையின் 33 ஊர்களில் 19 ஊர்களில் மட்டும் பறைச்சேரிகள் இருந்துள்ளன. ஆனால் க. சோழபுரத்தில் 7 ஊர்களில் ஒரு ஊரில் மட்டுமே பறைச்சேரி காணப்படுகிறது. தஞ்சையில் 7 ஊர்களில் மட்டுமே கம்மாணச்சேரி இருந்துள்ளது. க. சோழபுரத்தில் ஒரு ஊரில் கூட இது இல்லை. மூன்றில் இரு பங்கு ஊர்களில் ஊர் நத்தமும் மற்றவற்றில் ஊரிருக்கையும் காணப்படுகின்றன. தஞ்சைக் கல்வெட்டில் ஓர் ஊரில் (எண்: 23) இவ்விரு சொற்களும் சேர்க்கப்பட்டு ஊரிருக்கை நத்தம் என்ற சொல்லால் அப்பகுதி குறிக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டு சொற்களுக்கும் உள்ள முக்கியப் பொருள் மாறுபாடு தெளிவாக இல்லை[29] என்றாலும் இவ்விரு பகுதிகளையும் ஊராரின் குடியிருப்புப் பகுதிகளாகக் கொள்ளலாம். எனினும், தஞ்சையில் இரண்டு ஊர்களில் ஊர் நத்தமோ ஊரிருக்கையோ

அல்லது வேறு வகைக் குடியிருப்போ காணப்படவில்லை. இவ்விரண்டு ஊர்களின் பரப்பளவும் மிகக் குறைவானதாக (முறையே 6, 3 வேலிகள்) உள்ளதும் இதற்குக் காரணமாகலாம். மேலும் இவ்வூர்கள் வேறொரு ஊரின் பிடாகையாக இருக்கலாம். அப்பெரிய ஊரில் ஊர் நத்தம் அல்லது ஊரிருக்கை இருந்திருக்கலாம்.

தஞ்சையில் மூன்று ஊர்களில் 'குடியிருக்கை' காணப்படுகிறது. 'குடி' என்ற சொல்லுக்கு உழுகுடி, ஒரு குடும்பம் அல்லது மக்கள் தொகுதி என்று பல வகையில் பொருள் கொள்ளலாம். மேற்கூறப்பட்ட மூன்று ஊர்களில் குடியிருக்கையுடன் ஊர் நத்தமும் பறைச்சேரியும் இருந்துள்ளன. எனவே இவ்விடத்தில் குடி என்பது குத்தகைதாரராக உள்ள உழுகுடிகளைக் குறிப்பிடலாம். இவர்கள் பொருளாதார, சமூக நிலைகளில் ஊராரிலிருந்தும் பறையர்களிலிருந்தும் வேறானவர்கள்.

சோதிடர்களுக்கு அளிக்கப்பட்ட 'கணிமுற்றூட்டு' என்ற பகுதி ஊர்க் குடியிருப்பு வளாகத்தில் எப்பகுதியில் இருந்தது? என்று கல்வெட்டில் குறிப்பிடவில்லை. எனினும் ஊர்ப்பரப்பில் இது உள்ளடங்கியதாக தஞ்சை ஊர் எண் : 1 தெரிவிக்கிறது. இதேபோன்று ஊர் எண் : 2இல் மருத்துவர்களுக்கு அளிக்கப் பட்ட மருத்துவப்பேறு என்ற பகுதி இருந்தது. இதிலிருந்து சோதிடர், மருத்துவர் ஆகியோர் அவ்வூர்களில் வசித்தனர், என்றாலும் அவர்களுக்கெனத் தனிக் குடியிருப்பு வளாகங்கள் இல்லை என அறியலாம்.

ஊர் எண் : 28இல் பறைச்சேரி 'உழப்பறையரிருக்கும் கீழைச்சேரி' என்றும் 'உழப்பறையரிருக்கும் மேலைப் பறைச்சேரி' என்றும் குறிப்பிடப்படுகிறது. அவ்வூரில் வாழ்ந்த பறையர்கள் உழுதொழிலில் ஈடுபட்டிருந்தனர் என்பதை இது தெளிவாகக் காட்டுகிறது.

**நீர்ப்பாசன வசதிகள்**

தஞ்சை அரச ஆணையில் குளம், வாய்க்கால் என்ற இரு சொற்கள் நீர்ப்பாசன வசதிகளுக்குப் பயன்படுத்தப்பட்டுள் ளன. இருப்பினும் ஊர்க் குடியிருப்புப் பகுதிகளைப் போன்று இச்சொற்களும் அனைத்து ஊர்களிலும் காணப்படவில்லை. தஞ்சையின் 22 ஊர்களிலும் க. சோழபுரத்தின் 7 ஊர்களிலும் குளம் இருந்துள்ளது. மேலும் சில ஊர்களில் உள்ள நீர் நிலைகள் சில அடைகளோடு விவரிக்கப்பட்டுள்ளன: புலத்திற்குளம் (உழு நிலங்களின் நடுவில் உள்ள குளம்); கழனிக் குளம் (நெல் பயிரிடப்பட்ட நிலத்தில் உள்ள குளம்) ; ஊருணிக் குளம் (ஊருக்குப் பொதுவாக அமைந்த குடிநீர்க் குளம்);

திருமஞ்சனக் குளம் (புனிதக் குளம்); பறைக்குளக் குழி (பறையர்கள் பயன்படுத்தும் நீர்க்குட்டை?). எனவே தேவையான அடைமொழி இல்லாத 'குளம்' வேளாண்மைக்காகவா அல்லது குடிநீருக்காகவா அல்லது பிற வசதிகளுக்கானதா என்பது குறித்துத் தெளிவாகக் கூற முடியாது. எனினும் 23, 28 எண்ணு டைய ஊர்களில் குடிநீர்க் குளம் மட்டும் குறிப்பிடப் பட்டுள்ளது. ஊர் எண் : 22இல் ஒரு கோயில் குளம் கூறப்பட்டுள்ளது. இந்த மூன்று ஊர்களிலும் பாசனக் குளங்கள் குறித்து ஒன்றும் சொல்லப்படவில்லையாதலால் அதனைக் காட்ட அட்டவணை யில் முக்கோணக் குறியீடு இடப்பட்டுள்ளது.

'கரை' என்ற சொல் 11 ஊர்களில் காணப்படுகிறது. இச்சொல் 9 இடங்களில் 'குளம்' என்பதையடுத்து வந்துள்ளது. எனவே, இங்குக் கரை என்பது குளக்கரையைக் குறிப்பிடலாம். பிற இடங்களில் இச்சொல் வாய்க்கால் அல்லது ஆற்றின் கரை எனக் கொள்ளலாம்.

அரச ஆணையில் வாய்க்கால்களைப் பற்றிய சொற்றொடரில் ஊடறுத்துப்போன வாய்க்கால்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. எனினும், ஊர்கள் பகுதியில் வாய்க்கால்களைக் குறிப்பிடும் பொழுது 'இவ்வூர் நிலத்தை ஊடறுத்துப் புற ஊர்களுக்கு நீர் பாயப்போன வாய்க்கால்' என விவரிக்கப்பட்டுள்ளது. 16ஆம் எண்ணுடைய ஊரில் 'கீழ் நாட்டுக்கு நீர் பாயப்போன' என்று விவரிக்கப்பட்டுள்ளது. மற்றவகை நீர் வழிகள் ஆறு, வாய், நீரோடு கால் என் பனவாகும். மூன்று ஊர்களில் (தஞ்சை எண் : 16, 26; க. சோழபுரம் 212) ஆறு பற்றியும், இரண்டு ஊர்களில் (தஞ்சை எண்கள் 10, 21) வாய் (பெரிய வாய்க்கால்) பற்றியும், ஒரு ஊரில் (தஞ்சை எண் : 27), 'நீரோடு கால்' (சிறிய வாய்க்கால்) பற்றியும் கூறப்பட்டுள்ளன. மேற்கூறப்பட்ட இந்த ஆறு ஊர்களில் இரண்டில் வாய்க்கால் பற்றிக் கூறப்படவில்லை. இது அட்டவணையில் முக்கோணம் இட்டு காட்டப்பட்டுள்ளது. மீதமுள்ள நான்கு ஊர்களில் குறைந்தது ஒரு வாய்க்காலாவது உள்ள ஊர்கள் வட்டம் மற்றும் கத்திக் குறியுடன் அட்டவணையில் காட்டப்பட்டுள்ளன. பெரிய பரப்பளவு கொண்ட மற்றொரு ஊரில் கிணறும் தொட்டியும் கூறப்பட்டுள்ளன.

## கோயில்கள்

அரச ஆணையில் இவை பொதுவாக 'ஸ்ரீகோயில்கள்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. எனினும் ஒவ்வொரு ஊரிலும் இப்பகுதியில் மூலவர் பற்றியும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அவற்றுள் சொல்லப்பட்ட தெய்வங்களாவன : மகாதேவர்,

பிடாரி, காளாபிடாரி, அய்யன், காடுகாள், துர்க்கையார் மற்றும் சேட்டை. அட்டவணையில் கோயில்கள் என்ற தலைப்பில் அனைத்துக் கோயில்களும் சேர்க்கப்பட்டுள்ளன. கீழே உள்ள பட்டியலில் கோயில்களின் பகுப்பு தரப்பட்டுள்ளது.[30]

**அட்டவணை 6**

| கோயில் | ஊர்களின் எண்ணிக்கை |
|---|---|
| ஸ்ரீ கோயில் | 11 + |
| மகாதேவர் ஸ்ரீ கோயில் | 4 |
| காளாபிடாரி ஸ்ரீ கோயில் | 2 |
| பிடாரி ஸ்ரீகோயில் | 2+ |
| பிடாரி கோயில் | 8 |
| அய்யன் கோயில் | 5+ |
| காடுகாள் கோயில் | 2 |
| துர்க்கையார் கோயில் | 1 |
| சேட்டைக் கோயில் | 1 |

22 ஊர்களில் குறைந்தபட்சம் ஒரு கோயிலாவது உள்ளது. இவற்றுள் 14 ஊர்களில் ஒன்றுக்கு மேற்பட்ட கோயில்கள் உள்ளன. எட்டு ஊர்களில் ஸ்ரீ கோயில் அல்லது ஸ்ரீ கோயில்கள் என்று மட்டும் காணப்படுகிறது (தஞ்சையில் மூன்றும் க. சோழபுரத்தில் ஐந்தும்). மற்ற 14 ஊர்களில் ஸ்ரீ கோயில் என்ற சொல் நான்கு ஊர்களில் இடம் பெறவில்லை; பத்து ஊர்களில் பிற கோயில்களுடன் அல்லது பிற கடவுளர்களுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளது.

பத்து ஊர்களில் பிடாரி ஸ்ரீ கோயில் அல்லது பிடாரி கோயில் காணப்படுகிறது. இரண்டு ஊர்களில் பிடாரி கோயில் மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. மேலும் மூன்று பிடாரி கோயில்கள் ஒரே ஊரில் இருந்துள்ளன (எண் 31). ஐந்து ஊர்களில் அய்யன் கோயில்கள் இருந்துள்ளன. எல்லா இடங்களிலும் இக்கோயில் பிற கோயில்களுடன் இணைத்தே சொல்லப்பட்டுள்ளது. காளாபிடாரி ஸ்ரீ கோயிலும் காடுகாள் கோயிலும் இரண்டிரண்டு ஊர்களில் இருந்துள்ளன. துர்க்கையார் கோயிலும் சேட்டைக் கோயிலும் ஓர் ஊரில் மட்டுமே இருந்துள்ளன.

பல ஊர்களில் கோயிலோடு சேர்த்துத் திருமுற்றம் (கோயிலின் முன் உள்ள திறந்த வெளி) குறிப்பிடப்பட்டுள்ளது. இது இறையிலி நிலமாகும்.

**சுடுகாடு**

தஞ்சையின் 19 ஊர்களிலும் க. சோழபுரத்தின் 5 ஊர்களிலும் ஒன்று அல்லது இரண்டு சுடுகாடுகள் இருந்துள்ளன. எனவே மொத்தம் 40 ஊர்களில் 24 ஊர்கள் மட்டுமே சுடுகாடுகளைப் பெற்றிருந்தன. இச்சுடுகாடுகள் ஊரின் பரப்பளவு வீதத்தைப் பொறுத்து அமைந்திருந்தன வாகத் தெரியவில்லை. ஏனெனில் 2, 5 எண் ஊர்கள் 51 வேலிக்கும் அதிக நிலப்பரப்பை உடையன. எனினும், சுடுகாடுகள் அவ்வூர்களில் இல்லை. ஆனால் 10, 30 எண் ஊர்கள் 10 வேலிக்கும் குறைவான பரப்புடைய சிற்றூர்கள். இவை சுடுகாடுகளைப் பெற்றிருந்தன.

சுடுகாடுகளைக் கொண்ட 24 ஊர்களில் 8 ஊர்களில் வேளாளருக்கும் பறையருக்கும் தனித் தனியான சுடுகாடுகள் சொல்லப்பட்டுள்ளன. இதனால் அவ்வூர்ச் சமூகத்தில் வேளாளரும் பறையரும் ஒதுங்கி வாழ்ந்தனர் என்பதைக் காட்டுகிறது. இந்த எட்டு ஊர்களும் முக்கோணம் இட்டு காட்டப்பட்டுள்ளன.

பறைச்சேரியினைக் கொண்டிருந்த எல்லா ஊர்களிலும் பறைச் சுடுகாடு இருந்ததாக நம்மால் கூற இயலவில்லை. தீண் டாச்சேரி இருந்த இரண்டு ஊர்களிலும் ஈழச் சேரி இருந்த ஆறு ஊர்களிலும் அவர்களுக்கெனத் தனிச் சுடுகாடுகள் இருந்தன என்று கல்வெட்டு கூறவில்லை. 7 ஊர்களில் கம்மாளர்கள் குடியிருப்பு உள்ளதைக் குறித்து அரச ஆணையில் குறிக்கப் பட்டாலும் எந்த ஊரிலும் அவர்களுக்குத் தனியாகச் சுடுகாடு இருந்தமை பற்றிக் குறிப்பு இல்லை.

**பிறவகை இறையிலி நிலங்கள்**

மேலே ஆய்வு செய்யப்பட்டவைகளுடன் கீழ்க்கண்டவைகளும் இறையிலியாக அவ்வவ் கிராமப் பகுதியில் கூறப்பட்டுள்ளன. இவ்விவரங்கள் அரச ஆணையில் கூறாது விடுபட்டுள்ளன. அவையாவன : ஐந்து ஊர்களில் ஊர்க் களம் (தானியம் அடிக் கும் களம், ஊர் எண்கள் : 21, 26, 27, 29, 32) ; நான்கு ஊர்களில் கொட்டகாரம் (தானியக் களஞ்சியம், எண்கள் : 23, 25, 30, 32) ; ஓர் ஊரில் கன்று மேய் பாழாய்க் கிடந்த நிலம் (மேய்ச்சல் நிலம், எண் : 28) ; இரண்டு ஊர்களில் வழி (எண் : 15, 28) ; மூன்று ஊர் களில் திருநந்தவனம் (எண்கள் 17, 29, 39) ; மற்றும் ஓர் ஊரில் இருந்த கற்கிடை (கற்களின் குவியல், எண் : 21).

**தரவுகளின் நம்பகத் தன்மை**

மேற்கூறப்பட்ட அனைத்துச் சான்றுகளையும் பகுப்பாய்வு செய்வதற்கு முன் இவற்றின் நம்பகத் தன்மையைக் கண்டறிய

வேண்டும். மேலும், முடிவுகளை எவ்வளவு தூரம் பொதுமைப்படுத்தலாம் என்பதையும் கருத வேண்டும்.

முதலில், அரச ஆணை, தனித்தனி ஊர் விவரணை ஆகியவற்றுக்கிடையே உள்ள முரண்பாடு பற்றிக் கவனிக்க வேண்டும். ஏழு வகையான இறையிலி நிலங்களை அரசாணை தெரிவிக்கின்றது. ஆயினும், இவை அனைத்தும் ஒவ்வொரு ஊரினையும் பற்றிக் குறிப்பிடும் பகுதியில் இடம் பெறவில்லை. எடுத்துக்காட்டாக மொத்தம் 40 ஊர்களில் 6 ஊர்களில் மட்டுமே கம்மாணச்சேரி கூறப்பட்டுள்ளது. இதற்கு மாறாக, அரச ஆணையில் தெரிவிக்கப்பட்ட ஏழு வகை இறையிலி நிலங்கள் அல்லாத பிற வகை இறையிலி நிலங்களும் ஊர்களின் விளக்கப் பகுதியில் சொல்லப்பட்டுள்ளன. எனவே அரசாணை யில் குறிப்பிடப்பட்ட இறையிலி நிலங்கள் எடுத்துக்காட்டாகச் சொல்லப்பட்டன என்று தெரிகிறது. மேலும் ஒவ்வொரு ஊரிலும் இறையிலி நிலங்கள் குறித்துத் தரப்படும் விவரங்கள் அவ்வவ்வூரில் நிலவிய உண்மை நிலைமைகளைப் பிரதிபலிப்ப தாகக் கொள்ள வேண்டும் என்றாகிறது.

இறையிலி நிலங்கள் பற்றிய விவரங்கள் ஊருக்கு ஊர் மாறுபடுகின்றன என்ற உண்மையையும் இங்கே குறிப்பிட வேண்டும்.

இதுவரை நாம் கண்ட முடிவுகளை எந்த அளவு பொதுமைப் படுத்த முடியும்? இக்கேள்விக்கு விடைகாண வேண்டின் அந்த 40 ஊர்களின் வருவாய்த்தீர்வை மற்றும் அவ்வூர்களின் இடப்பரவல் ஆகியவற்றை இங்கு ஆய்வு செய்ய வேண்டும். தஞ்சையின் 26 ஊர்களில் நிலவரி அல்லது காணிக்கடன் வேலிக்கு[31] 95 – 100 கலம் என்ற குறுகிய விகித எல்லைக்குள் உள்ளது. ஓர் ஊரில் மட்டுமே இத்தீர்வை 1 வேலிக்கு 77 கலம் நெல்லாக விதிக்கப்பட்டுள்ளது. எனினும் க. சோழபுரத்தில் கூறப்பட்ட 7 ஊர்களில் காணிக்கடன் தீர்வை வேலிக்கு 16 கலத்திலிருந்து 52 கலம் வரை மாறுபடுகிறது. தஞ்சையின் ஊர்களையும் க. சோழபுரத்தின் ஊர்களையும் கூர்ந்து நோக்கினால் வேலிக்கு 95 கல நெல்லுக்கு மேல் விதிக்கப்பட்ட ஊர் நிலங்கள் யாவும் நெல் விளையும் இரு பூ (இரு போகம்) நிலங்களாகும். ஒரு வேலிக்கு சுமார் 50 கலம் வசூலிக்கப்படும் க. சோழபுரத்தின் இரண்டு ஊர்களில் ஒரு பூ மற்றும் இரு பூ நிலங்கள் கலந்து கிடந்தன. 30 கலத்துக்குக் கீழ்ப்பட்ட தீர்வை வழங்கிய 5 ஊர்களில் வரகு விளைச்சல் இருந்தது. இதிலிருந்து க. சோழபுரத்தின் 7 ஊர்களின் இயற்கைச் சூழலும் தஞ்சை ஊர்களின் சூழலும் வேறுபட்டவை என்று தெரிகிறது.

முப்பத்து மூன்று ஊர்களின் இடப்பரவல் நிலப்படம் 3இல் காட்டப்பட்டுள்ளது. இப்படத்தில் தஞ்சைக் கல்வெட்டில்

கூறப்பட்டுள்ள 26 ஊர்கள த1, த2, த3, த4, த6 என்றும் க. சோழ புரத்தின் 7 ஊர்கள் க3 அ, க7 என்றும்காட்டப்பட்டுள்ளன.

மீதமுள்ள தஞ்சையின் 8 ஊர்களில் நெல்லுக்கு மாறாகப் பொன்னாக வரி விதிக்கப்பட்டுள்ளது. இதில் மூன்று ஊர்கள் நகரங்களாகும். மற்றவை இம்மூன்று நகரங்களில் ஒன்றுடன் இணைந்த ஊர்களாகும். இங்கு வரிவீதம் 1 வேலிக்கு 5.32 கழஞ்சு பொன்னிலிருந்து 9.97 கழஞ்சு பொன் வரை உள்ளது. இந்த 8 ஊர்களும் நிலப்படத்தில் த1, த4, த5 என்ற பகுதிகளாகக் காட்டப்பட்டுள்ளன. இவ்வூர்களின் அமைவிடம் மூலமே இவ்வூர்களின் நிலத்தன்மையை ஊகிக்க முடியும்.

மேற்கூறப்பட்ட 40 ஊர்களும் கீழ்க்கண்ட மூன்று வகைகளில் வேறுபட்டுள்ளன: (1) தஞ்சைக் கல்வெட்டு ஊர்கள் பெரும்பாலும் சமமான செழிப்புத் தன்மை கொண்டவை எனினும் மாறுபட்ட இயற்கைச் சூழல் கொண்ட ஊர்களைக கொண்டிருந்தன. (2) இவ்வூர்கள் சோழ மண்டலத்தில் நன்கு பரவிக் கிடந்தன. (3) இவ்வூர்களின் பரப்பளவு ஒன்றுக் கொன்று வேறுபட்டுள்ளன. எனவே, இங்கு முடிவுகள் சோழமண்டல ஊர்களை, குறிப்பாக சோழமண்டலத்து மையப் பகுதி ஊர்களைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம். எப்படியும் இத் தரவுகளில் ஒரு சார்புத் தன்மை இல்லை எனலாம். பிரமதேய ஊர்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்படவில்லை என்பதைக் குறிக்க வேண்டும். அரசரின் கொடைகளால் ஏற்படுத்தப்பட்ட இவை சிறப்புச் சலுகைகளைப் பெற்ற ஊர்கள், பொருளாதார வளர்ச்சி மிக்க பகுதியுமாகும். எனவே, பிரமதேயங்களை இவ் ஆய்விலிருந்து விலக்கியதால் ஆய்வு முடிவுகளில் குறைபாடு ஏதும் ஏற்படாது. மாறாக, அக்கால இயல்பான ஊர்களின் நிலைமைகளை அறிய முற்படும் இவ் ஆய்விற்கு கூடுதல் வலிவு கிடைக்கும்.

### பகுப்பாய்வு

பல ஊர்களில் பல்வேறு குடியிருப்புப் பகுதிகள் இருந்தமையை நாம் காண்கிறோம். அரசாணையில் தரப்பட்ட குடியிருப்புப் பகுதிகள் ஊர் நத்தம் (ஊரிருக்கை), கம்மாணச்சேரி மற்றும் பறைச்சேரி என்பன. வண்ணாரச்சேரி, ஈழச்சேரி, தீண்டாச்சேரி, தலைவாய்ச்சேரி மற்றும் தளிச்சேரி ஆகிய குடியிருப்புப் பகுதிகளும் அமைந்திருப்பதிலிருந்து அவ்வவ் ஊரில் பல வகுப்பார் உண்மையாகவே வாழ்ந்திருந்தனர் என்று அறியலாம். மேற்கண்ட வகுப்பாரது பெயர்களிலிருந்து இவர்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் என்பதும் தெளிவு. அதாவது வேளாண்மை, .கருவிகள் செய்தல், வெளுத்தல், கள் இறக்குதல் மற்றும் இது




3 சோழர் ஆட்சியில் நிலவரித் தீர்வை

போன்ற பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். சிற் சில வகுப்பார் சேர்ந்து வாழ்ந்த இவ்வூர்களில் சாதி அடிப்படையில் தொழில் பகிர்வு இருந்தது என்பது இதிலிருந்து விளங்கும். ஒரு வகையில் இச்சான்றுகள் இந்திய ஊர்கள் குட்டிக் குடியரசுகளாக இருந்தன; அவற்றுள் வேளாண்மையும் கைவினைத் தொழிலும் பிணைந்து சமூக உற்பத்திக்கு வழி வகுத்தன என்ற கொள்கைக்கு உரம் கூட்டுகின்றன.

ஊரில் அனைத்து வகையான குடியிருப்பு வளாகங்களும் அமைந்திருக்கவில்லை என்னும் முக்கிய உண்மை ஈண்டு நோக்கத்தக்கது. எடுத்துக்காட்டாக, கம்மாணச்சேரி சில ஊர்களில் மட்டுமே இருந்துள்ளது; இவ்வாறே பறைச்சேரியும்; ஆராய்ந்த 40 ஊர்களில் பாதி ஊர்களில் மட்டுமே இருந்துள்ளது. மாறாக ஊர் நத்தம் அல்லது ஊரிருக்கை தான் பல ஊர்களில் இருந்த ஒரே குடியிருப்புப் பகுதியாகும்.

கோயில்கள், சுடுகாடுகளின் பரவல் தன்மையும் மேலே கண்ட கருத்தையே நமக்குத் தெளிவுறுத்துகின்றது. பல ஊர்களில் வாழ்ந்த மக்கள் வேறு ஒரு ஊரிலிருந்த கோயிலிலோ அல்லது சுடுகாடுகளிலோ கூடி முறையே நன்மை தீமைச் சடங்குகளைச் செய்திருக்க வேண்டும்.

மேற்சென்ற கருதல் நம்மைக் கீழ்க்கண்டவாறு சொல்லத் தூண்டுகிறது. சமூகப் பெருக்கம் நிலை பெற்ற முதன்மை மையங்களாகக் கிராமங்கள் விளங்கவில்லை. மேலும் அவற்றுக்குள்ளேயே கிராம மக்களின் இயக்கம் முடங்கி யிருக்கவில்லை; கிராமத்தைவிட ஒரு பெரிய நிலக் கூறிலேயே சமூகப் பெருக்கம் நடை பெற்றிருக்கக் கூடும்.

மற்றுமொரு கருதல் நீர்ப் பயன்பாடு ஆகும். மழை நீரைத் தேக்கி வைக்க உயர்ந்த கரைகள் கொண்ட குளங்கள் பெரும்பாலான ஊர்களில் இருந்துள்ளமை. வேளாண்மை ஊர்கள் எனினும் குளங்கள் பற்றிய தகவல்களைக் கூர்ந்து நோக்கும்பொழுது இக்குளங்களில் சில வெறும் குடிநீர் அல்லது நீராடும் குளங்களாகவே இருந்தன; பாசனத்துக்குப் பயன் படவில்லை எனத் தெரிகிறது. மேலும் பாதி ஊர்களில் அவற்றினூடே சென்ற வாய்க்கால்கள் பிற ஊர்களுக்குப் பாசனத்தைக் கொடுத்தன; கீழுள்ள வேறு நாட்டுக்குக் கூட அவை பாய்ந்தன. ஆகவே நீர்ப்பங்கீட்டின் பொருட்டு ஓர் ஊரின் மக்கள் பிறிதொரு ஊர் மக்களோடு மட்டுமன்றி, பக்கத்து நாட்டு மக்களுடனும் இணைந்து செயல்பட்டிருக்க வேண்டும்.

ஆய்ந்தவற்றில் பாதி ஊர்களில் மட்டுமே ஆறு அல்லது வாய்க்கால்கள் ஊரின் குறுக்கே செல்கின்றன. இதனால் பிற ஊர்களில் எவ்வித நீர்வழிகளும் இல்லை என்று கூற இயலாது. ஊர்களின் அல்லது நாடுகளின் எல்லைகளாக விளங்கும் வாய்க்கால்களோ அல்லது ஆறுகளோ பொதுவாக

வரிவிலக்களிக்கப்படுவதில்லை. ஆகவே, நீர்ப்பயன்பாட்டு முறைகள் ஊரைவிடப் பெரிய நிலப்பரப்பில் வாழ்ந்த மக்களின் கூட்டுறவினால் வேளாண்மை உற்பத்தி மேற்கொள்ளப்பட்டது எனக் காட்டும். அதாவது சமூகப் பெருக்கம் ஊரைவிட பரந்துபட்ட நிலப்பகுதியில் நடைபெற்றது என்பது உறுதியாகிறது.

முடிவாக, நிர்வாக அலகு என்ற வகையில் கிராமத்தின் முக்கியத்துவத்தைப் புறக்கணிக்க முடியாது.[32] ஆயினும் சமூகப் பெருக்கத்தைப் பொறுத்தவரை மெயினும், மார்க்சும் இவர்கள் வழி வந்த வரலாற்றாசிரியரும் கருதியதற்கு மாறாக சோழராட்சியின் இடைப்பகுதியில் சோழமண்டலத்திலிருந்த கிராமங்கள் தன்னிறைவு பெற்றுத் தனித்தியங்கவில்லை என்பது மேற்கண்ட நாற்பது ஊர்கள் பற்றிய உண்மைகளிலிருந்து போதரும்.

# அதிகாரம் 7

# பெயர்களும், பதவிகளும் காட்டும் சமூகமும் நிர்வாக அமைப்பும்

கல்வெட்டுக்களை வரலாற்று ஆய்வுக்குப் பயன்படுத்துவதில் முந்தைய வரலாற்றாசிரியர்கள் எந்த முறையையும் பின்பற்றியதாகத் தெரியவில்லை. இத்தகைய நெறிசாராப் போக்கினால் தென்னிந்திய வரலாற்றுப் படைப்புக்களில் தேக்கம் ஏற்பட்டுவிட்டது. இந்தத் தேக்கத்தை நீக்கப் புதிய அணுகு முறைகள் கையாளப்பட வேண்டும். இந்த நோக்கத்தில் சோழர் காலக் கல்வெட்டுக்களில் காணப்படும் ஆள்பெயர், பட்டம், பதவிநிலைகளைப் பற்றிய தரவுகளைத் தொகுத்துப் புள்ளியியல் முறையில் ஆராயும் ஒரு திட்டம் 1973-75இல் தோக்கியோ ஆசிய, ஆஃப்ரிக்க மொழிகள் மற்றும் பண்பாடுகள் ஆய்வு நிறுவனத்தில் மேற்கொள்ளப்பட்டது.[33] சோழர் காலத்தின் சமூக அமைப்பைப் பற்றியும் அக்கால நிர்வாக முறையைப் பற்றியும் கண்டறிதல் இத்திட்டத்தின் முதன்மை நோக்கங்களாக இருந்தன. இத்திட்டத்தின் வழி கண்டறிந்த சில முக்கிய முடிவுகள் மட்டும், சுருக்கமாகக் கீழே தரப்படுகின்றன.

சோழராட்சியின் முக்கிய இரு மண்டலங்களான சோழ மண்டலம் (தோராயமாக, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென் ஆர்க்காடு மாவட்டங்கள்), ஜெயங்கொண்ட சோழ மண்டலம் (செங்கல்பட்டு, வட ஆர்க்காடு, சித்தூர், நெல்லூர் மாவட்டங்கள்) ஆகிய நிலப்பகுதிகளிலிருந்து தொகுத்து பாடத்தோடு வெளியிடப்பட்ட 3543 கல்வெட்டுக்கள் இத்திட்டத்துக்கு அடிப்படைச் சான்றுகளாகப் பயன்படுத்தப் பட்டன. இக்கல்வெட்டுக்களிலிருந்து மொத்தம் 9590 பெயர்கள் தொகுக்கப்பட்டு அவை முதலில் துளைபிரி அட்டைகளைக் (hole-sort cards) கொண்டும், இரண்டாம் நிலையில் கணிப்பொறி உதவி கொண்டும் பகுப்பாய்வு செய்யப்பட்டன.[34]




4 சோழமண்டலமும் ஜெயங்கொண்ட சோழமண்டலமும்

இடைக்கால ஆள்பெயர்கள் ஒன்று முதல் ஐந்து கூறுகளைக் கொண்டு பல வகையுருக்களில் காணப்படுகின்றன. ஆனால் இக்கூறுகளையெல்லாம் சேர்த்து கீழ்க்கண்ட பொது வாய்பாட்டைப் பெறலாம்: [35]

I ஊர்ப் பெயர், II கோத்திரம்/குடிப் பெயர், III தந்தை பெயர், IV தன் பெயர், V பட்டம்.

இக்கூறுகள் ஒவ்வொன்றையும் தனித்தனியாகவோ இணைத்தோ கால, இட வாரியாகப் பகுத்துப் பார்த்தால் பல சமூக, பண்பாட்டு, அரசியல் உண்மைகள் புலப்படும். காலவாரிப் பகுப்புக்கு சோழர் ஆட்சிக்காலம் முன்பே குறிப்பிட்டபடி நான்கு கால கட்டங்களாகப் பிரித்துக் கொள்ளப்படுகின்றது. இடவாரிப் பகுப்புக்கு மாவட்டங்கள் அடிப்படை அலகுகளாகக் கொள்ளப்படுகின்றன.

## பகுப்பாய்வும் விளக்கமும்

**உடையான்**

உடையான் என்ற சொல்லின் கால, இடப் பரவல் அட்டவணை:7ல் கொடுக்கப்பட்டுள்ளது. அட்டவணையில் ஒவ்வொரு கால, இடச் சந்தியிலும் உள்ள எண்கள் அவ்வக் கால, இடச் சந்தியைச் சேர்ந்த மொத்தப் பெயர்களுள் உடையான் பெயர்க்கூறு உள்ள பெயர்களின் சதவீதத்தைக் குறிக்கும். (காட்டாக, தஞ்சாவூர் மாவட்டத்தில் காலகட்டம் Iஇல் 11.4 சதவீதம் பேர் உடையான் பெயர் கொண்டவர்கள்.[36]

**அட்டவணை 7**

| மாவட்டம் | காலகட்டம் | | | |
|---|---|---|---|---|
| | I | II | III | IV |
| தஞ்சாவூர் | 11.4 | 12.7 | 16.4 | 22.9 |
| திருச்சிராப்பள்ளி | 4.4 | 14.9 | 17.5 | 17.7 |
| தென் ஆர்க்காடு | 7.0 | 14.9 | 20.5 | 19.9 |
| வட ஆர்க்காடு | 18.2 | 10.5 | 13.5 | 8.6 |
| செங்கற்பட்டு | 8.6 | 15.7 | 8.4 | 10.0 |
| சித்தூர் & நெல்லூர் | 9.1 | 9.7 | 16.7 | 3.0 |

'உடையான்' என்ற பட்டம் பெரும்பாலும் ஊர்ப் பெயரின் பின்னொட்டாகக் காணப்படுகின்றது.[37] ஓர் 'ஊரின்' உடையான் அவ்வூரில் சிறிது நிலத்தை உடையவர் என்று கருதச் சூழ்நிலைச் சான்று இடம் தருகிறது. ஆகவே இப்பட்டத்தின்

பரவல் முக்கியமானதாகும். சோழமண்டலம் சேர்ந்த தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென் ஆர்க்காடு மாவட்டங்களில் இப்பட்டப் பெயர்கள் வழங்குதல் காலந்தோறும் எண்ணிக்கையில் கூடியுள்ளது. ஆனால் ஜெயங்கொண்ட சோழமண்டலப் பகுதிகளான வடஆர்க்காடு, செங்கல்பட்டு, சித்தூர் மற்றும் நெல்லூர் மாவட்டங்களில் இது போன்ற கூடுதல் தெளிவாகக் காணப்படவில்லை. சோழமண்டலத்தில் இப்பட்டப் பெயர்களின் எண்ணிக்கைக் கூடுதல் சோழராட்சியின் பிற்பாதியில் ஏற்பட்ட தனியார் நில உடைமையின் வளர்ச்சியினைக் காட்டுகிறது எனக் குறிப்பிடலாம்.[38] அதாவது காவேரிக் கழிமுகப் பகுதியில் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியினைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

**மூவேந்தவேளான், பிரமராயன்**

மூவேந்தவேளான் மற்றும் பிரமராயன்[39] என்ற பட்டப்பெயர் களின் பரவல் சதவீதத்தில் கீழே தரப்பட்டுள்ளது.

| | காலகட்டம் | | | |
|---|---|---|---|---|
| | I | II | III | IV |
| மூவேந்தவேளான் | 2.2 | 9.3 | 2.8 | 2.0 |
| பிரமராயன் | 0.8 | 2.4 | 0.6 | 0.6 |

மேல் அட்டவணையில் பிரமராயன் பட்டப்பெயர் எண் ணிக்கை மூவேந்தவேளான் என்ற பட்டப்பெயரின் எண் ணிக்கை விட குறைந்த விழுக்காட்டில் இருந்தாலும் கூட இரண் டிற்கும் காலமுறைப் பரவல் போக்கு ஒன்று போலக் காணப்படுகிறது.

அட்டவணை 8இல் இவ்விருபட்டங்கள் பிற பட்டங்களுடனும் பதவி நிலைகளுடனும் கொள்ளும் தொடர்பு காட்டப்பட்டுள்ளது. கொடுக்கப்பட்ட எண்கள் குறிப்பிட்ட பட்டப் பெயர்களின் எண்ணிக்கை ஆகும். சதவீதம் அல்ல.

இவ்வட்டவணை மூலம், இவ்விரண்டு பட்டங்களும், அரசப் பட்டப்பெயர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவை என்று உணரலாம். இது அரசனுக்கும் இப்பட்டங்களைப் பெற்றிருந்தவர்களுக்கும் இடையில் நிலவிய நெருக்கமான உறவினைப் புலப்படுத்தும். அத்துடன் இவற்றை உடையோர் பலவகைப் பதவி நிலைகளிலும் இருந்தார்கள் என்பதும் கவனிக்கத் தக்கது. ஆகவே இந்த இரு பட்டங்களும் அரசனால் உயர் அரசு அலுவலர்க்கு வழங்கப்பட்டவை என ஊகிக்கலாம்.

எனினும் இவ்விரு பட்டங்களுக்கும் இடையில் சில வேற்றுமைகள் உள்ளன. முதலாவதாக இப்பட்டங்களின் பொருளை வைத்து 'மூவேந்தவேளான்' என்ற பட்டம் வேளாண்

சாதியைச் சேர்ந்த அலுவலர்களுக்கும், 'பிரமராயன்' என்ற பட்டம் பிராமண சாதியைச் சேர்ந்த அலுவலர்களுக்கும் வழங்கப்பட்டன எனலாம். இரண்டாவதாக, மூவேந்தவேளான் பட்டம் பெற்றவர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் 'உடையான்' பட்டத்தைப் பெற்றிருந்தனர்.[40] இதறகு மாறாக உடையான், பிரமராயன் பட்டங்களுக்கு இடையில் குறைந்த தொடர்பே காணப்படுகிறது. மூன்றாவதாக, மூவேந்தவேளான் பட்டம் வருவாய்த் துறையோடு மிகுதியும் தொடர்பு உடையதாயிருந்தது. மேலும் நாட்டு நிர்வாகத்தோடு நெருங்கிய தொடர்பு இருந்தது என்பதை நாடு என்ற அடை அடிக்கடி சேர்ந்து வருவதிலிருந்து ஊகிக்கலாம்.[41]

**அட்டவணை 8**

| | | மூவேந்தவேளான் | பிரமராயன் |
|---|---|---|---|
| | மொத்தம் | 307 | 94 |
| பட்டம் | அரச விருது | 228 | 83 |
| | உடையான் | 118 | 1 |
| | கிழவன் | 12 | 0 |
| | கிழான் | 12 | 0 |
| | நாடு | 34 | 0 |
| பதவி நிலை | அதிகாரி | 78 | 4 |
| | ஊர் | 4 | 0 |
| | ஓலை | 39 | 8 |
| | கண்காணி | 3 | 1 |
| | கரணம் | 6 | 1 |
| | கருமம் ஆராயும் | 12 | 0 |
| | கூறு | 4 | 0 |
| | சிவபிராமணர் | 0 | 1 |
| | சேனாபதி | 0 | 6 |
| | தண்டநாயகம் | 0 | 1 |
| | திருவாய்க்கேழ்வி * | 3 | 0 |
| | நகரம் | 13 | 0 |
| | நாயகம் | 12 | 4 |
| | பள்ளி தொங்கல் | 0 | 2 |
| | புரவு வரி | 37 | 0 |
| | பெருந்தரம் | 3 | 2 |
| | முகவெட்டி | 5 | 0 |
| | வரி பொத்தகம் | 2 | 1 |
| | ஸ்ரீ காரியம் | 9 | 1 |

* கோயில் பணிகள் இக்கணிப்பில் சேர்க்கப்பட்ட வில்லை.

பிரமராயன் பட்டம் படைப்பதவியோடு (சேனாபதி) நெருங்கிய தொடர்பு கொண்டு இருந்தது. வேறுபாடு இருப்பினும், பிரமராயன் பட்டம் பூண்டோர் சோழ அரசாங்கத்தில் முக்கிய பங்காற்றினார் என்பது உறுதி.

**நக்கன்**

'நக்கன்' என்பது பெயரா அல்லது பட்டமா என்பது சரியாக விளங்கவில்லை. நக்கன், சில சமயம் ஆள்பெயராக உள்ளது. அட்டவணை 9இல் 'நக்கன்' வழங்கும் இடம், காலப் பரப்பு காட்டப்பட்டுள்ளது. இங்கு தரப்பட்டுள்ள எண்கள் எவ்வளவு தடவை அச்சொல் வழங்கப்பட்டுள்ளது என்ற எண்ணிக்கையைக் குறிக்கும்.[42]

**அட்டவணை 9**

| | I | II | III | IV |
|---|---|---|---|---|
| தஞ்சாவூர் | 83 | 14 | 8 | 1 |
| திருச்சிராப்பள்ளி | 52 | 14 | 1 | 0 |
| தென் ஆர்க்காடு | 8 | 8 | 1 | 1 |
| வட ஆர்க்காடு | 4 | 3 | 0 | 0 |
| செங்கற்பட்டு | 2 | 0 | 0 | 1 |
| சித்தூர் & நெல்லூர் | 0 | 1 | 0 | 2 |

ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் இச்சொல் மிக அருகியே பயன்படுத்தப்பட்டுள்ளது. சோழமண்டலத்தில் காலம் செல்லச் செல்ல குறைந்த எண்ணிக்கையில் பயன்படுத்தப் பட்டுள்ளதைத் தெளிவாகக் காணலாம். நக்கன் என்ற சொல் வடமொழியில் சிவனின் ஒரு பெயரான 'நக்நா' என்ற சொல்லிலிருந்து பிறந்தது. ஆகவே இச்சொல்லைப் பெயராகக் கொண்டவர்கள் சைவ மதத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதலாம். சோழமண்டலத்தில் முதற் கால கட்டத்தில் மிகுந்தும் பிற்காலத்தில் குறைந்தும் பயன்படுத்தப்பட்டுள்ளதால் இப்பகுதியில் சைவ மதத்தில் ஏதோ மாற்றங்கள் ஏற்பட்டன எனக் கருத இயலும்.

**குரிசில்களின் பட்டங்கள்**

குரிசில்களின் பட்டங்களாக 28க்கும் மேற்பட்டவை களுள்ளன. இவை 'அரயன்' அல்லது 'அதரயன்' ஆகியவற்றில் ஒன்றைக் கொண்டுள்ளன. அட்டவணை 10இல் இவ் 28 பட்டங் களின் பாகுபாடு தரப்பட்டுள்ளன. கொடுக்கப்பட்ட எண்கள்

சொல் வழக்கின் எண்ணிக்கையைக் குறிக்கும். 0.5 என்ற மதிப்பு காலகட்டம் III, IV இவ்விரண்டுக்குள் ஐயம் இருப்பதைக் காட்டும்.

**அட்டவணை 10**

| குரிசில் பட்டங்கள் | காலகட்டம் | | | |
|---|---|---|---|---|
| | I | II | III | IV |
| இலாட | 7 | 10 | 1.5 | 6.5 |
| இளங்கோவேள் | 19 | 11 | 2 | - |
| கங்க | 9 | 2 | 14.5 | 23.5 |
| கலிங்க | - | 1 | 6.5 | 5.5 |
| களப்பாள | - | 1 | 6.5 | 5.5 |
| காடவ | 2 | 3 | 6 | 12 |
| கேரள | - | - | 1 | 2 |
| சம்பு | - | - | 8 | 20 |
| சேதி | - | - | 19 | 11 |
| தீபத்த | - | - | 2 | 1 |
| நுளம்ப | - | 1 | 3 | 4 |
| பங்கள | - | - | 2 | 3 |
| பல்லவ | 31 | 36 | 33 | 38 |
| பழுவேடு | 13 | 1 | - | 2 |
| பிரம | 20 | 45 | 12.5 | 13.5 |
| மலையகுல | - | - | 8 | 10 |
| மழவ | 5 | 2 | 3 | 6 |
| முத்து | 10 | 7 | 8.5 | 11.5 |
| முனைய | 2 | 1 | 2 | 2 |
| மூவேந்த | - | - | 2 | 6 |
| யாதவ | - | - | 1 | 21 |
| வயிர | - | - | 1 | 5 |
| வல்லவ | 2 | 1 | - | 1 |
| வாண | 4 | 2 | 8 | 4 |
| வாணகோ | 4 | 1 | 1 | 7 |
| வில்லவ | - | 3 | 6 | 8 |
| விழிஞ | - | - | 3 | 4 |
| விழுப்ப | 8 | 38 | 12 | 13 |

அட்டவணையில் உள்ள பிரம, பல்லவ, விழுப்பரைய ஆகிய மூன்று பட்டங்கள் பாங்கு, வழங்கு வேகம் ஆகிய தன்மைகளில் ஒன்று போல் காணப்படுகின்றன. அது மட்டுமல்ல; தொடர்புடைய மற்ற பட்டங்கள், பதவி நிலைகள் ஆகியவற்றிலும் பிரமராயன் போன்றே பல்லவ, விழுப்பு, அரைய பட்டங்கள் காணப்படுகின்றன.

அதாவது, பல்லவரையன், விழுப்பரையன் பட்டம் பெற்றவர்களும் அரசாங்கத்தில் முக்கிய பொறுப்புகள் வகித்தார்கள் என்று தெரிகிறது. முத்தரையன் பட்டம் ஓரளவு மேற்சொன்ன பட்டங்கள் போல வழங்கினாலும் சில வேறுபாடுகளும் காணப்படுகின்றன. மேலும் அது மற்றவற்றைப் போல அதிகமாக வழங்கவில்லை. மற்றப் பட்டங்களைப் பொறுத்தவரையில் இளங்கோவேள் பட்டத்துக்கு அரசாங்கத்தோடு நெருங்கிய தொடர்பு காணப்படுகிறது. மற்றவற்றில் அத்தகைய தொடர்பு இல்லை. காட்டாக சம்பு, மலையகுலம் போன்றவை பின் இரு காலகட்டங்களில் மட்டுமே வருகின்றன. அவற்றின் இடப்பரவலும் தென்ஆர்க்காடு, வடஆர்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களுக்குள்ளேயே காணப்படுகிறது. அரசத் தொடர்பு அற்ற வட்டாரத் தலைவர்களுடைய பட்டங்களாக இவற்றைக் கொள்ள வேண்டியுள்ளது.

**நாடாழ்வான், மத்தியஸ்தன்**

நாடாழ்வான் என்ற பட்டமும், மத்தியஸ்தன் என்ற பதவி நிலையும் எங்ஙனம் பரவியிருந்தது என்பதைக் கீழே உள்ள அட்டவணை குறிப்பிடுகிறது. எண்கள் சதவீதங்களைக் குறிக்கும்.

| | I | II | III | IV |
|---|---|---|---|---|
| நாடாழ்வான் | 0.0 | 0.6 | 0.7 | 1.9 |
| மத்தியஸ்தன் | 2.7 | 2.2 | 0.6 | 0.5 |

நாடாழ்வான் பட்டம் கால கட்டம் II தொடங்கி காலந்தோறும் கூடிக் கொண்டு செல்வதையும், மத்தியஸ்தன் பட்டம் காலந்தோறும் குறைந்து கொண்டு செல்வதையும் காணலாம். நாடாழ்வான் நாட்டை ஆள்பவன் என்று பொருள்படும். அதாவது நாட்டை நிர்வகிப்பதில் பொறுப்பு வகித்தவராகலாம். சில சமயம் வட்டாரத் தலைவராகவும் காணப்படலாம். 'சபை' அல்லது 'ஊர்' போன்ற உள்ளூர் மன்றங்களுடன் மத்தியஸ்தர் தொடர்பு கொண்டிருந்தனர். வழக்கமாக இச்சொல்லுக்கு நடுவர் என்று பொருள் கொண்டாலும் ஊர்மன்றத்தின் செயலர், அல்லது பதிவாளர் என்பதே சரியான பொருளாகும் என்பதை கல்வெட்டுக்களின் வழி அறியலாம்.

மத்தியஸ்தன் சொல்வழக்கு குறைந்தும், நாடாழ்வான சொல்வழக்கு அதிகரித்தும் செல்லுகின்ற தன்மையை ஒரு சேர எடுத்துக் கொண்டு நோக்கினால் அக்காலச் சமூக அமைப்பில் சில மாற்றங்கள் ஏற்பட்டதை உணரலாம். அதாவது, கிராம நிர்வாகங்கள் வட்டாரத் தலைவர்கள் ஆதிக்கத்துக்கு வந்தன. ஒரு வகை நிலமானிய முறை எழத் தொடங்கியது என்று இதை விளக்கம் செய்யலாம். உடையான் பட்டத்தைப் பற்றிய விளக்கத்தை இங்கு நினைவு கூரலாம்.

## பகுதி II

### சுட்டு நூல்களும் குறிப்புக்களும்

1. பார்க்க : அதிகாரம் 1 மற்றும் 6.
2. Burton Stein, 'Coromandel Trade in Medieval India' in John Parker (ed.), *Merchants and Scholars*, University of Minnesota Press, 1965, pp. 49 - 62. சித்திரமேழிப் பெரியநாட்டார் மற்றும் அதுபோன்ற அமைப்புகளைப் பற்றி அறிய, பார்க்க : Venkatarama Ayyar, 'Medieval Trade, Craft and Merchant Guilds in South India', *Journal of Indian History*, XXV (1947), pp 269 - 80; K.V. Subrahmanya Aiyer, 'Largest Provincial Organisations in Ancient India', *QJMS*, LXV (1954 - 55), No. 1. இந்தக் கட்டுரைகளில் கையாளப்பட்ட 20 கல்வெட்டுக்களில் மூன்று 12 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை; பதின்மூன்று கல்வெட்டுக்கள் 13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை, எஞ்சிய நான்கு காலங்கணிக்க முடியாதவை. எனவே சித்திரமேழி அமைப்பு சோழராட்சியின் பிற்பகுதியில்தான் எழுச்சி பெற்றதோ எனக் கருத வேண்டியுள்ளது. இது முற்பகுதியில் நிறையப் பிரமதேயங்கள் ஏற்படுத்தபட்டமையின் எதிர்விளைவாக இருக்கக் கூடுமோ? இந்தக் கருத்தையொட்டி இன்னும் பல கேள்விகள் எழும். இவற்றுக்கு நிறைவான பதில் வேண்டுமானால் இன்னும் சித்திரமேழி அமைப்பைப் பற்றிய கல்வெட்டுக்களை ஆழமாகப் பார்க்க வேண்டும்.
3. கிராமம் தன்னிறைவு அமைப்பு என்ற தொனி இங்குள்ளது. அக்கருத்து அவ்வளவு சரியல்ல என்று அடுத்த அதிகாரத்தில் விவாதிக்கப்படுகிறது.
4. எஇ. XII, எண்: 3 மற்றும் பார்க்க: K.A. Nilakanta Sastri, *Studies in Cola History and Administration*, p. 84.
5. K.A. Nilakanta Sastri, *Studies in Cola History and Administration*, pp. 163 - 75.
6. தெக. II. எண்: 60, 70.
7. தொண்டைமண்டலம் அல்லது ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் மண்டலம், கோட்டம், நாடு என்ற வரிசை இருந்தது. பின்னால் கோட்டம், வளநாடு என்று பெயர் மாற்றியும் அழைக்கப்பட்டது.
8. தெக. III. ப. 21 - 29.
9. பிரமதேயங்களை இனங்காண இரு தடயங்கள் கிடைக்கின்றன. ஒன்று, அவ்வூர்களின் பெயர்கள் பெரும்பாலும் மங்கலம் அல்லது சதுர்வேதி மங்கலம் என்ற பின்னொட்டைப் பெற்றுள்ளமை. இரண்டு, மேலே குறிப்பிட்டபடி (அகு. 6) ராஜராஜன் பிரமதேயங்களுக்கு அனுப்பிய ஆணையில் அந்த ஊர்களின் பெயர்கள் நேரடியாகச் சொல்லப்படுகின்றன. இருப்பினும் இந்தக் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுபவை தவிர இன்னும் பல பிரமதேயங்கள் இருந்திருக்க வேண்டும்.
10. தெக. III, எண்: 142, 205 ; எஇ. XV, எண்: 5 முதலியன.
11. எஇ. XVII, ப. 291 - 309
12. K.A. Nilakanta Sastri, *The Colas*, pp. 503 - 05.
13. மேலது, ப. 504, 505, 507.

14. இந்தக் கட்டுரை முதலில் எழுதப்பட்ட நேரத்தில் நாட்டுமன்றத்தின் மூலமே பிரமதேயங்களைச் சேர்ந்த பிராமணர் தங்கள் மேலாதிக்கத்தைச் செலுத்தினார்கள் என்ற கருத்துத் தொனிக்க எழுதினேன். அதாவது அவர்களும் நாட்டு மன்றங்களில் உறுப்பினராக இருந்தார்கள் என்று கொள்ளப்பட்டது. ஆனால் தன் *Political Geography of the Chola Country* இல் சுப்பராயலு நாட்டுமன்றங் களுக்கு அனுப்பப்பட்ட ஆணைகளில் நாட்டு உறுப்பினரில் பிராமண ஊர்ப்பேராளர்கள் சேர்க்கப்படவில்லை என்று தெளிவாக்கியுள்ளார். ஆகவே மேற்சொன்ன என் கருத்து திருத்தத்துக்குரியது. இருப்பினும் அரச ஆணைகளில் நாட்டாரோடு அதாவது நாட்டுமன்ற உறுப்பினரோடு பிராமண நிலக்கிழாரும் (பிரமதேயக் கிழவர்) இணைந்தே சுட்டப்படுவதிலிருந்து பின்னவர்கள் உள்ளாட்சியில் ஒரு முக்கிய பொறுப்பு வகித்தார்கள் என்பதை மறுக்க முடியாது. உண் மையில் பல கல்வெட்டுக்கள் பல உள்ளாட்சிப் பிரச்சினைகளைத் தீர்க்க அவர்கள் மேற்கொண்ட முயற்சிகளைக் குறிப்பிடுகின்றன.

15. இச்சொற்றொடரின் பயன்பாட்டு வரலாற்றினை அறிய காண்க : Louis Dumont, 'The "village community" from Munro to Maine,' in his *Religion, Politics and History in India*, Paris, 1970, pp 112 - 32.

16. Sir Charles T. Metcalfe, 'Minute on the Settlement in the Western Province', dated 7 November 1830.

17. கிராம சமூகத்தின் அரசியல் தன்மையையும் மூன்றாவது கருத்தாக இங்குச் சேர்க்கலாம். எனினும் மார்க்சு. மெயின் உள்பட்ட பிற ஆய்வாளர்கள் தெளிவில்லாமல் இதனைக் கையாண்டுள்ளனர்.

18. B.H. Baden Powell, *The Origin and Growth of Village Communities in India*, London, 1899.

19. W.H. Wiser, *The Hindu Jajmani System*, Lucknow, 1936

20. M.N. Srinivas and A.M. Shah, 'The myth of the self-sufficiency of the Indian village', *Economic Weekly*, No.12 (1960), pp. 1373-8

21. B.R. Grover, 'Nature of land-Right in Mughal India', *Indian Economic and Social History Review*, Vol.1 (1963), pp.1 - 23.

22. Burton Stein, *Peasant State and Society in Medieval South India*, New Delhi, 1980.

23. Krishnaswamy Aiyangar, *Evolution of Hindu Administrative Institutions in South India*, Madras, 1931, and K.A. Nilakanta Sastri, *Studies in Cola History and Administration*, Madras, 1932.

24. இரண்டாவது கல்வெட்டின் தொடர்ச்சி மூன்றாவது ஒரு கல்வெட்டில் (தெக. II, 92) இடம் பெற்றுள்ளது. இதில் சோழர் ஆட்சிக்குட்பட்ட பிற பகுதிகளில் கொடையாக அளிக்கப்பட்ட நிலங்கள் சொல்லப்பட்டுள்ளன. இம்மூன்றாவது கல்வெட்டில் கொடையாகத் தரப்பட்ட கிராமங்களின் விவரங்கள் சிலவே. எனவே இவ்வாய்வுக்குரிய செய்திகளை அக்கல்வெட்டு தரவில்லை.

25. ஊரார் எனப்படுவோர், வேளாளர் மற்றும் அவர்களை ஒத்த பிற வலிய வேளாண்மைச் சாதிகளாகலாம்.

26. அட்டவணை 4 இல் தஞ்சையின் 40 ஊர்களுக்கு கல்வெட்டில் இடம் பெற்றுள்ள வரிசையில் எண்கள் தரப்பட்டுள்ளன. இந்த அட்டவணையில் 7 ஊர்கள் (எண்கள் 3-8ம், 20ம்) விடுபட்டுள்ளன. இவ்வூர்களைப் பற்றிய கல்வெட்டுப் பகுதிகள் பெரிதும் சிதைந்துள்ளமையால் இவை அட்டவணையில் சேர்க்கப்படவில்லை.

க.சோழபுரத்தில் 7 ஊர்களுக்கு மட்டும் தேவையான குறிப்புகள் உள்ளன. எனவே இவ் 7 ஊர்கள் அவ் ஊர் விவரங்கள் தொடங்கப் பெறும் வரி எண்ணால் அட்டவணையில் குறிக்கப்பட்டுள்ளன.

27. தன்மையில் வெள்ளான் வகை ஊர்கள், பிரமதேய ஊர்களுக்கு மாறுபட்டவை எனச் சில சோழர் கல்வெட்டுகள் காட்டுகின்றன. வெள்ளான் வகை ஊர்கள் என்பது பெரும்பான்மை ஊர்களாகும்; அவ் ஊர்களின் மீது அரசாங்கம் வரித்தீர்வையை விதித்தது. தஞ்சைக் கல்வெட்டில் ஊர் எண் 18இல் தேவதானம், சாலா போகம் தவிர்ந்த பிற பகுதிகள் வெள்ளான் வகை எனக் கூறப்பட்டுள்ளன.

28. 'வேலி' என்னும் பேர் இக்கல்வெட்டில் பயன்படுத்தப்படவில்லை, ஆயினும், அடிப்படை நில அளவு வேலி தான் என்பதில் எவ்வகை ஐயமுமில்லை. ஒரு வேலி இன்றைய அளவில் 6.6 ஏக்கருக்குச் சமமானது என்று வில்சனின் 'சொல்லடைவு' குறிக்கிறது. *தமிழ்ப் பேரகராதி* 6.74 ஏக்கர் பரப்பளவைக் கொண்டது என்று குறிக்கும். ஆனால் சோழர் காலத்தில் வேலியின் அளவு இவ்வளவு என்று நம்மால் அறுதியிட்டுக் கூற முடியவில்லை.

29. நத்தம், குடியிருப்புப் பகுதி என்றாலும் மக்கள் குடியேறாத நிலப்பகுதிகளையும் உள்ளடக்கியிருக்கலாம்; மாறாக இருக்கை என்பது மக்கள் உள்ளபடியே குடியேறிய இடமாகலாம் என்று திரு. K.G. கிருஷ்ணன் (முன்னாள் முதன்மைக் கல்வெட்டாய்வாளர்) கருத்து தெரிவித்தார்.

30. ஒன்றுக்கு மேற்பட்ட ஒரே வகைக் கோயில்கள் கொண்ட ஊர் + (கூட்டல்) குறியால் காட்டப்பட்டுள்ளது.

31. பார்க்க : கீழே அதிகாரம் 9.

32. தஞ்சையில் ஒரு எட்டு ஊர்கள் பணத்தீர்வை செலுத்திய நகரங்கள். அவ்வூர் மக்கள் பற்றி சரியாகத் தெரியவில்லை. இவ்வூர்களில் பலர் வணிகத்தில் ஈடுபட்டிருக்கக் கூடும். ஆயினும் தீர்வை நிலத்தின் அடிப்படையிலேயே வாங்கப்பட்டது. எனவே இக்கால வணிக நகரங்கள் பிற ஊர்களிலிருந்து அதிகமாக வேறுபடவில்லையெனலாம்.

33. கணிப்பொறியைப் பயன்படுத்தி பகுப்பாய்வு செய்யும் பணியில் பேராசிரியர் தோரு மத்சுயி (Toru Matsui) இணைந்துதவினார். பேராசிரியர் ஸகமொதொ (Y. Sakamoto) இறுதியில் பெயர்த்தொகையை அச்சேற்றுவதற்குரிய படியாக கணிப்பொறியில் செய்துதவினார்.

34. இத்திட்டத்தின் ஒரு முக்கிய விளைவு சோழர் கால ஆள்பெயர் தொகை. அது மூன்று தொகுதிகளாக 1978இல் வெளியிடப்பட்டது. Noboru Karasima, Y. Subbarayalu and Toru Matsui, *A Concordance of the Names in the Cola Inscriptions*, Madurai, 1978.

35. ஒவ்வொரு பெயரின் கூறமைப்புப் பாங்கும் (segmentation pattern) மேலே குறிப்பிட்ட நூலில் காட்டப்பட்டுள்ளது. ஆனால், சில பெயர்களில் கூறுகளைச் சரியாக இனங் காண்பது அவ்வளவு உறுதியில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும்.

பட்டம் ஒரு பெயர்க்கூறாகவே கருத இடமுள்ளது. இதல்லாமல் பல பெயர்களுக்கு தொடர்புடைய பதவி நிலைகளும் (status) குறிப்பிடப்பட்டுள்ளன. பதவி (அதிகாரி, சேனாபதி, கணக்கன், முதலியன), தொழில் வகுப்பு அல்லது சாதி (இடையன், தச்சன், வியாபாரி) ஆகியன இந்த வகையில் கொள்ளப்படுகின்றன. பெயர்களுக்குரியோர் செய்த பணிகள் (role/function) வழக்கமாகக் கல்வெட்டுக்களில் சொல்லப்படுகின்றன. பெயராய்வுக்கான

தரவுகளில் இவை யாவும் (பெயர், பதவி/நிலை, பணி) திரட்டிப் பயன் படுத்தப்பட்டன. யாவற்றையும் எளிதில் கணிப்பொறி கொண்டு பகுப்பாய்வு செய்ய குறியீடுகள் பயன்படுத்தப்பட்டன. பார்க்க : பின்னிணைப்பு : 1

36. தஞ்சாவூர்க் கோயில் கல்வெட்டுக்களில், காலகட்டம் 2இல் மூன்று பெரிய கல்வெட்டுகள் (தெக. II, எண்கள். 66, 94, 95) உள்ளன. இவற்றில் 400 தளிச்சேரி பெண்டிர்களின் பெயர்களும், 689 மன்றாடிகளின் பெயர்களும் இடம் பெற்றுள்ளன. இயல்புக்கு மாறாக மிக அதிக எண்ணிக்கையில் இப்பெயர்கள் இருப்பதால் இவற்றை நீக்கி விட்டு சதவீதங்கள் கணக்கிடப்பட்டுள்ளன.

37. சில ஊர்ப் பெயர்கள் 'திருச்சிற்றம்பலமுடையான்' போன்று இருக்கலாம். இத்தகைய ஐயத்திற்கிடமான பெயர்கள் இங்குக் கணக்கில் கொள்ளப்படவில்லை.

38. காண்க : அதிகாரம் 2, 4.

39. பிரமமாராயன், பிரமாதராயன் போன்ற பட்டங்களும் இதில் அடங்கும்.

40. கிழான், கிழவன், உடையான் என்ற மூன்று பட்டங்களும் ஒன்றே என்று நாம் எடுத்துக் கொண்டால் இதன் சதவிகிதம் அதிகமாகும்.

41. நாட்டின் வருவாய் நிர்வாகப் பணிகளை அறிய காண்க Y. Subbarayalu. *Political Geography of the Chola Country*, Madras. 1973, pp.41-4.

42. தஞ்சைக் கல்வெட்டுக்களில் (கால கட்டம் 2) 400 தளிச்சேரிப் பெண்டிர் பெயர்களிலும் 'நக்கன்' கூறு உள்ளது. இந்த 400 பெயர்கள் இங்கு கணக்கில் எடுக்கப்படவில்லை.

# அதிகாரம் 8

## சோழர் கல்வெட்டுக்களில் வருவாய்ச் சொற்கள்

பழங்கால மற்றும் இடைக்காலத் தென்னிந்தியாவின் வருவாய் முறையை அறிவதற்கு இது வரை எஞ்சியுள்ள சமகாலக் கல்வெட்டுக்களே முக்கிய சான்றுகளாகும். சோழர் கல்வெட்டுக்களில் பெரும்பாலானவை நிலக்கொடைகள், அல்லது நிலவிற்பனை அல்லது வருவாய் இனக் கொடைகளைக் குறிக்கின்றன. இவற்றுள் ஒரு நல்ல விழுக்காடு வருவாய்ச் சொற்களைக் கொண்டுள்ளது. இவ்வாறு ஆதாரங்கள் கிடைத்தபோதிலும் சோழர் வருவாய் முறையைப் பற்றி சிறிதளவே அறிந்துள்ளோம்.

நீலகண்ட சாஸ்திரியார் 1955இல் கீழ்க்கண்டவாறு எழுதினார்:[1]

> "வரிகள், கட்டணங்களைப் பற்றி விளக்கிடும் கல்வெட்டுக்களின் மொழி அமைப்பு இப்போதைக்கு முழுமையாகவோ, அல்லது ஏற்புடைத்ததாகவோ விளக்கம் சொல்ல முடியாத அளவில் உள்ளது. இவற்றிலிருந்து சில தற்காலிக ஊகங்கள் அளிப்பதைத் தவிர வேறொன்றும் இயலாது. இப்படிப்பட்ட ஊகங்கள் பிற் காலத்தில் நடத்தப்படும் ஆய்வில் நிறுவப்பட வேண்டும், அல்லது மாற்றப்பட வேண்டும்."

வருவாய்ச் சொற்களைப் புரிந்து கொள்ள இயலவில்லை என்பது மட்டுமல்ல; அவற்றின் முக்கியத்துவம் மற்றும் இணைத் தொடர்புகள், ஆகியன பற்றியும் நம்மால் அறிய முடியவில்லை. உண்மையில், இச் சொற்கள் நிறையக் காணப்படுகின்றன. ஆனால், அவை வழங்கும் முறையில் ஒரு ஒழுங்கோ விதியோ காண்பது அரிது. இந்தக் குழப்பத்திற்கு தெளிவு காண வேண்டும் எனில் இவ் வருவாய்ச் சொற்களை முறையாகப் பகுப்பாய்வு செய்ய வேண்டும். இதற்கு சோழர் கல்வெட்டுக்கள் அனைத்திலிருந்தும் தொகுக்கப்பட்ட ஒரு

வருவாய்ச் சொல் தொகை மிகவும் தேவை. இவ் வகைப்பட்ட சொல் தொகையின் பயன் பலவாகும். முதலாவது, வரிச் சொற்கள் காணப்படும் அனைத்து வாக்கியச் சூழல்களையும் ஆய்ந்தோமெனில் பல சொற்களுக்கான பொருளை நம்மால் காண இயலும். காட்டாக, ஒரு குறிப்பிட்ட சொல் ஒரு குறிப்பிட்ட சூழலில் மட்டும் அல்லது அதோடு தொடர்புடைய பிற சொற்களுடன் காணப்படின் அச் சொல்லின் பொருளை அறிவதற்கான தடயம் நமக்குக் கிடைக்கும். வடிவம், மற்றும் பொருளால் தொடர்புடைய சொற்களைத் திரளாகச் செய்தும் பல சொற்களின் பொருளைக் கண்டறிய முடியும்.

இரண்டாவதாக, ஒரு வரிச் சொல் காணப்படுகிற நிலப்பகுதி, காலங்கள் ஆகியவற்றின் பரவல் தன்மையைக் கொண்டு அச்சொல்லின் சிறப்புத் தன்மையை அறியலாம். மேலும், சோழர் வருவாய் முறையில் இச் சொல்லின் பங்கு என்ன என்றும் ஊகிக்கலாம். இவ்வாறு எல்லாச் சொற்களின் பரவல் தன்மையை ஆராய்ந்தால் சோழர் வருவாய் அமைப்பினைப் பற்றிய உறுதியான முடிவுகள் கிடைக்க வாய்ப்பேற்படும்.

சுமார் 9000 சோழர் கல்வெட்டுக்கள் இதுவரை கிடைத்துள்ளன. அவற்றில் பல கல்வெட்டுக்கள் முழுப்பாடத்துடன் வெளியிடப்படவில்லை. ஆகவே, ஏற்கெனவே முழுப்பாடத்துடன் வெளியிடப்பட்ட கல்வெட்டுக்களை மட்டும் பயன்படுத்தி இந்த ஆய்வு செய்யப்பட்டுள்ளது.[2] மேலும், இவ்வாய்வுக்கு நிலப்பரப்பு எல்லையும் வரையறுக்கப்பட்டுள்ளது. சோழராட்சி தன் உச்ச நிலையில், வடக்கே கோதாவரி வரையிலும் தெற்கே குமரிமுனை வரையிலும் பரவி இருந்தபோதும், அவர்கள் நிர்வாகத்தின் இதயப் பகுதியாக சோழமண்டலம், ஜெயங் கொண்ட சோழமண்டலம் என்ற இரு பெரு நிலப் பகுதிகள் மட்டுமே இருந்துள்ளன. முன்னது சோழநாட்டின் மையப் பகுதியாகும். இது, ஏறக்குறைய தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களுடன் தென் ஆர்க்காடு மாவட்டத்தின் தென் பகுதியைக் கொண்டதாகும். ஜெயங்கொண்ட சோழமண்டலம் செங்கல்பட்டு, வட ஆர்க்காடு மாவட்டங்கள்; தென் ஆர்க்காட்டின் வடபகுதி, சித்தூர், நெல்லூர் மாவட்டங்களையும் கொண்டிருந்தது. சோழர் வருவாய் முறையின் அடிப்படை அளவீடுகளைக் கண்டறிவதற்கு இம்மாவட்டக் கல்வெட்டுக்கள் மட்டும் தெரிவு செய்யப்பட்டன.[3]

விதிக்கப்பட்டவை அல்லது விலக்கப்பட்டவை என்று குறிப்பிடப்படும் வரிகள், கட்டணங்கள் ஆகியனவே இத் தொகையில் திரட்டிப் பயன்படுத்தப்பட்டுள்ளன.[4] தேர்ந் தெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் பெரும்பாலும் தமிழ் மொழியிலேயே உள்ளன. சில தமிழ், சமஸ்கிருதத்திலும் உள்ளன.

ஒரே சொல்லுக்குப் பல வடிவங்கள் வழங்கப்பட்டிருந் தாலும் பொருள் சிதையாத அளவுக்கு நல்லது என்று கருதப்பட்ட ஒரு வடிவமே சொல் தொகையில் கொடுக்கப் பட்டுள்ளது.

அட்டவணை 11 அதிக வழக்குள்ள வருவாய்ச் சொற்களின் கால, இடப் பரவலைக் காட்டுகிறது. இச் சொற்கள், தொகையில் பத்து அல்லது பத்துக்கு மேல் வழங்கியவனவாகக் குறிக்கப்பட்டவை. இதனால், சோழர் வருவாய் முறையின் பல முக்கிய உண்மைகளைச் சுட்டிக்காட்ட முடிந்தது.

இடவாரியாகப் பகுத்துப் பார்த்தால் பல சொற்களின் பரவல் சில தனித்தன்மைகளைக் காட்டுகின்றன. இச் சொற்கள், ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் மட்டும் அல்லது சோழ மண் டலத்தில் மட்டும்தான் காணப்படுகின்றன. இதனால் ஆட்சி முறை மற்றும் பொருளாதார நிலைமையில் இவ்விரு மண்டலங்களுக்கிடையே வேறுபாடு இருந்ததாகக் கொள்ள லாம்.

எல்லாக் கால கட்டங்களிலும் இரண்டு மண்டலங்களிலும் காணப்படுபவை 7 சொற்கள். இவை ஒவ்வொன்றும் சோழர் கால முழுவதும் 20க்கும் மேற்பட்ட வழக்கு எண்ணிக்கையில் காணப்படுகின்றன. ஆயினும், இச் சொற்களின் பரவல் எல்லாக் காலகட்டங்களிலும் ஒரே சீராக இல்லை. இச்சொற்களாவன: அந்தராயம், எச்சோறு, கடமை, குடிமை, முட்டையாள், தட்டார்ப் பாட்டம் மற்றும் வெட்டி. எனவே சோழர் வருவாய் முறையினை ஆய்வு செய்யுங்கால் இச் சொற்களுக்கு அதிக முக்கியத்துவம் தர வேண்டும்.

இடவாரியாகப் பார்த்தால் பல சொற்கள் (40 விழுக்காட்டுக்கு மேல்) ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் மட்டுமே காணப் படுகின்றன. அவற்றுள் நான்கு சொற்கள், (9, 13, 17, 20 எண்ணுடையவை) காலகட்டம் 4இல் மட்டுமே காணப்படுகின் றன. அக்கால அரசியல் நிலையின் பிரதிபலிப்பாக இது தோன் றலாம். காலமுறைப்படி நோக்கினால் பல சொற்கள், காலகட்டம் 2இலிருந்துதான் காணப்படுகின்றன. காலகட்டம் 1 அல்லது 2இல் முதல் முறையாகத் தோன்றும் சொற்களின் எண் ணிக்கை, காலகட்டம் 3இலிருந்து கூடுகிறது. இதிலிருந்து கால கட்டம் 2, 3இல் வருவாய் முறையில் சில மாற்றங்கள் மேற்கொள்ளப்பட்டன என ஊகிக்கலாம். முதல் ராஜராஜன் மற்றும் முதல் குலோத்துங்கன் காலங்களில் மேற்கொண்ட நில அளவை நடவடிக்கைகளை இங்கு நினைவுகூரல் தகும்.[5] கால கட்டம் 3, 4 இல் கூடுதல் எண்ணிக்கையில் காணப்படும் சொற்கள் நம் கவனத்திற்குரியன. ஆனால் இக்காலகட்டங்களில் மறைந்து விட்ட சொற்கள் மிகச் சிலவே.

அட்டவணை 11

பெரு வழக்குச் சொற்களின் பரவல் தன்மை

| வரிசை எண் | சொல் | எண்ணிக்கை | மண்டலம் | கால கட்டம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 1 | 2 | 3 | 4 |
| 1 | அந்தராயம் | 73 | இ | 3.0 | 6.0 | 30.0 | 34.0 |
| 2 | அமஞ்சி | 23 | ஜெ | 13.5 | 4.5 | 4.0 | 1.0 |
| 3 | ஆயம் | 42 | ஜெ* | - | 2.0 | 9.0 | 31.0 |
| 4 | ஆளமஞ்சி | 14 | ஜெ* | - | 1.0 | 4.5 | 8.5 |
| 5 | எச்சோறு | 85 | இ | 47.5 | 19.5 | 12.0 | 6.0 |
| 6 | கடமை | 65 | இ | 1.5 | 5.5 | 14.5 | 43.5 |
| 7 | காசாயம் | 13 | ஜெ | - | - | 0.5 | 12.5 |
| 8 | குடிமை | 34 | இ | 1.0 | 1.0 | 9.5 | 22.5 |
| 9 | குற்றத் தெண்டம் | 12 | ஜெ | - | - | - | 12.0 |
| 10 | கூற்று நெல் | 11 | ஜெ | - | 4.0 | 7.0 | - |
| 11 | சில்லிறை | 18 | ஜெ | - | 4.5 | 9.5 | 4.0 |
| 12 | சில்வரி | 32 | இ | - | 6.0 | 17.0 | 9.0 |
| 13 | செக்குக் கடமை | 10 | ஜெ | - | - | - | 10.0 |
| 14 | செந்நீர்வெட்டி | 19 | சோ | 10.5 | 4.0 | - | 4.0 |
| 15 | தட்டார்பாட்டம் | 27 | இ | 2.0 | 5.0 | 4.0 | 16.0 |
| 16 | தறி இறை | 28 | ஜெ | - | 3.0 | 4.0 | 21.0 |
| 17 | தனியாள் | 10 | ஜெ | - | - | - | 10.0 |
| 18 | திருவாசலில் போந்த குடிமை | 11 | சோ | 1.0 | - | 8 0 | 2.0 |
| 19 | நீர் விலை | 15 | ஜெ | 1.5 | 3.5 | 9.0 | 1.0 |
| 20 | நெல்லாயம் | 15 | ஜெ | - | - | - | 15.0 |
| 21 | பாட்டம் | 17 | இ | - | - | 8.5 | 8.5 |
| 22 | பாடிகாவல் | 37 | ஜெ | - | - | 9.5 | 27.5 |

| வரிசை எண் | சொல் | எண்ணிக்கை | மண்டலம் | காலகட்டம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | 1 | 2 | 3 | 4 |
| 23 | பெருவரி | 22 | இ | - | 3.0 | 16.0 | 3.0 |
| 24 | முட்டை ஆள் | 21 | இ | 1.0 | 2.5 | 12.5 | 5.0 |
| 25 | வெட்டி | 107 | இ | 46.5 | 23.0 | 15.5 | 22.0 |
| 26 | வேதினை | 26 | சோ* | 17.0 | 8.0 | 1.0 | - |
| 27 | வேலிக்காசு | 12 | இ | - | 4.0 | 6.0 | 2.0 |

குறிப்பு : ஜெ : ஜெயங்கொண்ட சோழமண்டலம்; சோ : சோழமண்டலம்; தரப்பட்டுள்ள எண்ணிக்கை அவ்வவ் மண் டலத்தை மட்டும் சேர்ந்தவை. இ : இரண்டு மண்டலத்திலும் காணப்படுகின்றன; * (ஜெ/சோ மீதுள்ள உடுக்குறி): 100 விழுக்காட்டுக்குக் குறைவாகவும் ஆனால் 90 விழுக்காட்டுக்கு மேல் அவ்வவ் மண்டலங்களில் காணப்படுகிறது. 0.5: காலத்தைத் சரியாகத் தீர்மானிக்க இயலாத எண்ணிக்கையை குறிக்கிறது.

---

ஆகவே சோழராட்சியில் காலந்தோறும் வருவாய் இனங்கள் கூடிக் கொண்டு சென்றன என நாம் முடிவு செய்யலாம்.[6]

சோழர் வரலாற்றையும் வருவாய் முறையினையும் சரியாக அறிந்து கொள்வதற்கு இந்த தொடக்க நிலை கண்டுபிடிப்புகள் வெகு முக்கியத்துவம் வாய்ந்தவை. இம் முடிவுகள் குறைந்த எண்ணிக்கையுள்ள சான்றுகளின் மீது எடுக்கப்பட்டன. எனவே இவற்றை நம்பகமான பொதுமுடிவுகள் ஆகக் கருத முடியாது. இம் மாதிரியான ஆய்வுகள் மற்ற ஆட்சிகளுக்கும் மேற்கொள்ளப் பட்டு. அம் முடிவுகள் ஒப்பாய்வு செய்யப்பட வேண்டும்.[7]

# அதிகாரம் 9

# சோழர் ஆட்சியில் நிலவரித் தீர்வை

சோழர் கல்வெட்டுக்கள் பலவற்றில் பதிவாகியுள்ள நிலவரித் தீர்வையைத் தென்னிந்திய அல்லது சோழர் பொருளாதார வரலாற்று நூல்கள் பல குறிப்பிடுகின்றன[8]. ஆயினும் அவ்வாய்வுகளில் தரப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகள் சிலவே. இவ் எடுத்துக்காட்டுகள் இங்கொன்றும் அங்கொன்று மாக நெறிசாராப் போக்கில் தேர்ந்து எடுக்கப்பட்டவை. இக் கல்வெட்டுக்கள் அனைத்தும் ஒரே மாதிரியான விவரங்களைத் தரும் என்பதற்கு எவ்வித உறுதியும் இல்லை[9]. எனவே இதுவரை நடைபெற்ற ஆய்வுகளிலிருந்து சோழர் நிலவரித் தீர்வை பற்றிய பொதுவான கருத்தோட்டத்தைப் பெறுவதென் பது ஏறக்குறைய இயலாதது.

எனினும் சில நீண்ட கல்வெட்டுக்களில் பல ஊர்களின் வரித்தீர்வை தரப்பட்டுள்ளது. இவ்வகைக் கல்வெட்டுக்களில் இருந்து ஒரே சீர்மையுடைய விவரங்களை உறுதியாகப் பெறலாம். இவ்வகையில் தஞ்சாவூர்க் கோயிலில் இரண்டு கல்வெட்டுக்களும் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோயிலில் ஒன்றும் முக்கியமானவை.

தஞ்சாவூர்க்கல்வெட்டுக்களில் (தெக, II, 4, 5. இனிமேல் தஞ்சை)[10], 29ம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பெற்ற முதலாம் ராஜராஜனின் ஆணை தரப்பட்டுள்ளது. தேவதான கிராமங்களின் வழி தஞ்சாவூர்ப் பெரிய கோயிலுக்குச் சேரவேண்டிய நிலவரித் தீர்வை (காணிக்கடன்)[11] பற்றிய விவரங்களைக் கோயில் சுவர்களில் பொறிக்கும்படி இடப்பட்டது இவ் ஆணை. ஆணையைத் தொடர்ந்து சோழ மண்டலத்தில் இக்கோயிலுக்குத் தேவதானமாக்கப்பட்ட 40 ஊர்களின் விவரங்கள் தனித்தனியாகத் தரப்பட்டுள்ளன :

அ) ஒவ்வொரு ஊரின் பரப்பளவு ; ஆ) வரிவிலக்குப் பெற்ற நிலங்களும் அதன் மொத்த பரப்பளவும் ; இ) தீர்வைக்குட்பட்ட எஞ்சிய நிலங்களின் பரப்பு ; ஈ) நெல் அல்லது பொன்னாக செலுத்தப்பட வேண்டிய தீர்வையின் அளவு. எனவே இக்கல்வெட்டுக்களிலிருந்து ஒவ்வொரு ஊரிலும் தீர்வை வீதத்தைக் கணிக்க இயலும். எனினும், இக் கல்வெட்டிலிருந்து வரி விதிப்புக்குள்பட்ட நிலங்களின் தன்மையை அறிய இயலாது.

கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டு (தெக. IV, 529. இனிமேல் க. சோழபுரம்) ஏழு பகுதிகளைக் கொண்டது போல் தோன்றுகிறது. ஒவ்வொரு பகுதியும் வீரராஜேந்திரனின் மெய்க் கீர்த்தியுடன் தொடங்கி, இவனாலும் இவன் முன்னோர்களாலும் தேவதானமாகத் தரப்பட்ட ஊர்க் கொடைகளை விவரிக்கிறது.[12] இக்கல்வெட்டு மிக அதிகமாகச் சிதைந்துள்ள தால் எவ்வளவு ஊர்கள் விவரிக்கப்பட்டுள்ளன என்று துல்லியமாகச் சொல்ல இயலாது. மேலும் இக்கொடைகளில் சில எவ்வாறு கங்கை கொண்ட சோழபுரத்துக் கோயிலோடு தொடர்பு உடையன என்று அறியவும் இயலாது. எனினும் இக்கல்வெட்டில் காணப்படும் ஊர் விவரணை தஞ்சாவூர்க் கல்வெட்டில் காண்பதை விட மிக விரிவானது. இதனால், இவற்றிலிருந்து பல முக்கிய செய்திகளை அறியலாம். பல ஊர்களில் வரி விலக்குப் பெற்ற நிலங்கள் ஒவ்வொன்றின் பரப்பளவு, வரித்தீர்வைக்கு உட்பட்ட நிலங்களின் வகைப்பாடு, இவ்வகைப்பட்ட நிலங்களின் பரப்பளவு ஆகியன யாவும் தரப்பட்டுள்ளன. க. சோழபுரத்தின் கல்வெட்டுப் பகுதிகளில் கீழ்க்கண்டவாறு தகவல்கள் உள்ளன: இரண்டாம் பகுதியில் 15க்கு மேற்பட்ட ஊர்கள்; மூன்றாம் பகுதியிலும் 15க்கு மேற்பட்ட ஊர்கள்; ஐந்தாம் பகுதியில் 2 ஊர்க்கொடை விவரங்கள்; ஏழாம் பகுதியில் 7க்குக் மேற்பட்ட ஊர்க்கொடைகள். எனினும் கல்வெட்டில் உள்ள சிதைவினால் இப்பகுதிகளிலும் கூட எல்லா விவரங்களையும் சில ஊர்களே பெற்றுள்ளன.[13]

மற்றுமொரு முக்கியமான செய்தி என்னவென்றால் க. சோழபுரத்தின் இரண்டாம் பகுதியில் கொடையாகத் தரப்பட்ட 15 ஊர்களில் 14 ஊர்கள் ஏற்கெனவே முதலாம் ராஜராஜன் காலத்தில் தஞ்சாவூர்க் கோயிலுக்குக் கொடையாக வழங்கப்பட்டவையாகும். எனவே இவை தஞ்சாவூர்க் கல்வெட்டிலும் இடம் பெற்றுள்ளன. க. சோழபுரத்துக் கல்வெட்டுத் தகவல்களிலிருந்து இந்த 14 ஊர்களை ஆய்வு செய்வதன் மூலம் தஞ்சாவூர்க் கல்வெட்டில் தரப்பட்ட வரி நிலங்களின் தன்மையையும் ஓரளவு அறிய முடியும்.[14]

முதலில், தஞ்சைக் கல்வெட்டில் காணப்படும் ஊர்களை ஆய்வோம். ஒவ்வொரு ஊரிலும் விதிக்கப்பட்ட வரித் தீர்வையை

அட்டவணை 12 காட்டுகிறது. தீர்வை நெல்லானால் கலத்திலும், பொன்னானால் கழஞ்சிலும் தரப்பட்டுள்ளது.[15]

இவற்றிலிருந்து நெல்லாகத் தீர்வை செய்யப்பட்ட ஊர்களின் தரத்தீர்வை சற்றேக்குறைய வேலி ஒன்றுக்கு 100 கலம் நெல்லாகும். ஆனால் இத்தீர்வை வீதம் 95 கலத்திலிருந்து 100 கலம் வரை மாறுபட்டுள்ளது. ஒரே ஒரு ஊரில் 77 கலம் எனத் தீர்வையிடப்பட்டுள்ளது. பொன்னாகத் தீர்வை செய்யப்பட்ட ஊர்களில் வேலிக்கு, 5.321 கழஞ்சு பொன்னிலிருந்து 9.991 கழஞ்சு பொன் வரை நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

அட்டவணை 12இல் தரப்பட்டுள்ள தஞ்சைக் கல்வெட்டின் 5 ஊர்களின் தீர்வை நில விவரங்கள் யாவும் க. சோழபுரம் கல் வெட்டில் தரப்பட்டுள்ளபடி அட்டவணை 13இல் கொடுக்கப் பட்டுள்ளன.

ஊர் எண் 17இல் வரித்தீர்வைக்குள் பட்ட ஊர்நிலங்கள் இரண்டு வகையாகும். அவையாவன :இரு பூ (போகம்) விளையும் நிலம் மற்றும் புன்செய் நிலம். ஊர் எண் 30இல் மூன்று; அல்லது கூடுதலான நில வகைகள் உள்ளன போலத் தோன்று கிறது. இதற்கு மாறாக ஊர் எண்கள் 20, 22இல் வரித்தீர்வைக்குள்பட்ட அனைத்து நிலங்களும் நீர்நிலமாகும் (நெல் விளையும் நன்செய் நிலம்). நீர்நிலத்தில், பொதுவாக இரு பூ விளையும் நிலம் மற்றும் ஒரு பூ விளையும் நிலம் என்ற இரண்டு வகை நிலங்கள் அடங்கியிருப்பினும், இவ்வூர் நிலங்கள் இவ்விரண்டில் ஏதேனும் ஒரு வகைக்குள் மட்டும் அடங்கின எனல் வேண்டும். ஏனெனில் இருவகையான நிலங்களானால் இரு பூ, மற்றும் ஒரு பூ என்ற அடை மொழிகளைக் கொண்டு தனித்துக் காட்டப்பட்டிருக்கும். இரு பூவா, ஒரு பூவா என்று நிர்ணயிப்பதற்கு இப்பகுதியில் உள்ள மற்ற ஊர்களில் உள்ள தீர்வை நிலங்களின் தன்மைகளைக் கருத்தில் கொண்டால் இவ்வூரில் உள்ள நிலங்கள் யாவும் இரு பூ விளையும் நிலமாகக் கருதலாம். இக்கருத்தின் படி பார்த்தால் கீழ்வரும் செய்தி முக்கியமானது. ஊர் எண் 22இல் அமைந்துள்ள தீர்வை நிலங்கள் யாவும் நீர்நிலமாக (இரு பூ விளையும் நிலம்) உள்ளபடியால் வேலி ஒன்றுக்கு 100 கலம் எனச் சரியாகத் தீர்வை விதிக்கப்பட்டுள்ளது என்று தீர்மானிக்கலாம். ஊர் எண்கள் 17, 30இல் புன்செய் மற்றும் பிறவகை நிலங்களுடன் சேர்ந்து இரு பூ விளையும் நிலம் காணப்படுவதால் 100 கலத்திற்கும் குறைவாகத் தீர்வை விதிக்கப்பட்டுள்ளது. இவ்வகைச் சான்றுகள் குறைவாக இருந்தபோதிலும், நீர்நிலம் அல்லது இரு பூ விளையும் நிலத்தின் தீர்வை வீதம் வேலி ஒன்றுக்கு சரியாக 100 கலம் ஆக இருந்தது; பல ஊர்களில் 100க்குக் குறைவான வீதம்

காணப்படுவது அவ்வூர்களில் விளைச்சல் திறன் குறைவுபட்ட ஒரு பூ விளையும் நிலம், புன்செய் அல்லது வேறு வகைப்பட்ட நிலம் இருந்தமையினால் எனலாம்.

எனினும், பணமாகத் தீர்வை செய்யப்பட்ட ஊர்களில் இவ்விதமாகக் கருத்து சொல்ல இயலவில்லை. ஊர் எண் 20இல் நீர் நிலத்தின் மீது விதிக்கப்பட்ட வரித் தொகை 7.667 அல்லது 8.580[16] கழஞ்சு பொன் ஆகும். இவ்விரண்டு வரி வீதமும் இவ் அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள மற்ற ஊர்களின் வரி வீதத்தை விட மிகவும் குறைவானதாகும். பணத்தீர்வை நிர்ணயிக்கப்படும் ஊர்களின் இவ்வரி வீத மாறுதலுக்கு நாம் வேறு காரணங்களை நாட வேண்டும்.[17]

இப்போது க. சோழபுரத்தில் குறிப்பிட்ட ஊர்களுக்கு வருவோம். இக்கல்வெட்டின் மூன்றாம் பகுதியில் 6 ஊர்கள நில வரித் தீர்வைக்குட்பட்டுள்ளன. இதன் விவரங்களைச் சேர்த்து அட்டவணை 14 இல் தரப்பட்டுள்ளது. கல்வெட்டுப் பகுதி 5 இல் இரண்டு ஊர்கள் விவரிக்கபபட்டுள்ளன. இதன் விவரங்கள் யாவும் அட்டவணை 15 இல் தரப்பட்டுள்ளன. கல்வெட்டுப் பகுதி 7இல் உள்ள 5 ஊர்களின் விவரங்கள் அட்டவணை 16 இல் தரப்பட்டுள்ளன. இவ் அட்டவணைகளில் தரப்பட்ட விவரங்களைக் கொண்டு பார்க்கையில் நமக்குத் தோன்றும் முதல் செய்தி, கல்வெட்டுப் பகுதிகளுக்கிடையே வரித் தீர்வை வீதத்தில் காணப்படும் வேறுபாடுகள் ஆகும். தஞ்சைக் கல்வெட்டிலும் குறிப்பிடப்படுகின்ற க. சோழபுரத்துக் கல்வெட்டின் இரண்டாம் பகுதி ஊர்களில் வேலி ஒன்றுக்கு 100 கலம் வரி வீதம் காட்டப்பட்டுள்ளது.[18] மூன்றாம் பகுதி ஊர்களில் வேலி ஒன்றுக்கு சுமார் 50 கலம் காட்டப்பட்டுள்ளது. ஐந்தாம் பகுதி ஊர்கள் இரண்டே என்ற போதிலும் வேலி ஒன்றுக்கு 82 கலம் தரப்பட்டுள்ளது. ஏழாம் பகுதி ஊர்களில் சராசரியாக 20 கலம் தீர்வையாகத் தரப்பட்டுள்ளது.

இவ்வேறுபாடுகளின் காரணம் என்ன? ஊர்கள் கொடையாகத் தரப்பட்ட காலங்களுக்குள் வேறுபாடு இருந்தது காரணமாகலாம். ஆனால் உண்மையில் கொடை அளிக்கப்பட்ட காலங்களில் குறிப்பிடத்தக்க கால இடைவெளி ஏதுமில்லை. இதனை ஒவ்வொரு கல்வெட்டுப் பகுதியிலும் சொல்லப்படும் அரசனின் ஆட்சி ஆண்டுகளை ஒப்பிட்டுத் தெரிந்து கொள்ளலாம். மேலும் க. சோழபுரத்தின் நான்கு பகுதிகளில் தரப்பட்ட ஊர்கள் யாவும் வீரராஜேந்திரனால் வேறு ஒரு தெய்வத்துக்கு திருப்பிவிடப்பட்டன: அல்லது மூலக்கொடைகள் தற்போது உறுதி செய்யப்பட்டுள்ளன எனத்தெரிகிறது.[19] எனவே கால வேறுபாடு இல்லை. ஆகவே, கொடைத் தன்மையின் வேறுபாட்டை இம்மாறுதலுக்குக் காரணமாகச் சொல்லலாமா என ஆராயலாம். ஆனால், தஞ்சாவூர்க்

கல்வெட்டில் ஊர்களை விவரிக்கும் பாணியே க. சோழபுரக் கல்வெட்டின் நான்கு பகுதிகளிலும் பின்பற்றப்பட்டுள்ளது.[20] க. சோழபுரம் 3ஆம், 5ஆம் பகுதிகளிலும் காணிக்கடன் என்ற சொல் தஞ்சைக் கல்வெட்டில் வருவது போலவே கோயிலுக்கு வருவாய் மாற்றம் செய்வதைக் குறிக்கிறது.[21] இவ்விரண்டு செய்திகளை மனதில் கொண்டு பார்க்கும் போது இக் கொடைகள் இரண்டின் இயல்பும் ஒன்றே என்பது புலப்படும்.

சற்றுத் தெளிவான மற்றும் ஏற்றுக் கொள்ளத் தக்கதான காரணத்தை ஊர்களின் இட அமைப்பில் காணலாம். க. சோழபுரம் கல்வெட்டின் பகுதிகள் 2, 3, 5, 7 ஆகியவற்றை முறையே, க2, க3, க5, க7 என்று பெயரிட்டும், தஞ்சைக் கல்வெட்டு ஊர்களை அட்டவணை 12இல் கண்டுள்ளபடி ஆறு திரள்களாக்கி அவைகளுக்கு த1, த2, த3, த4, த5, த6 என்று பெயரிட்டும் இவ் ஊர்களின் இட அமைப்பு நிலப்படம் 3ல் காட்டப்பட்டுள்ளது.[22] த1 மூன்று நாடுகளைக் கொண்டது;[23] இதனுள் ஊர்கள் 5 - 12, 39 மற்றும் 40ம் அடங்கும். த2இல் ஒரு நாடும், மற்றொரு நாட்டின் பகுதியும் (வேளா நாடு) அடங்கும் ; ஊர்கள் 1 முதல் 4ம், 15ம் இந்நாட்டுப் பகுதியில் அடங்கும். த3இல் மூன்று நாடுகள், அதாவது 13, 14, 16, 17, 18 எண்ணுடைய ஊர்கள் அடங்கும். த4இல் ஒரு நாடு அடங்கும்; ஊர்கள் 19, 20 உள்படும். த5இல் ஒரு கூற்றத்துள்படும் ஒரு முதன்மை நகரமும் துணை நகரங்கள் 5ம் அடங்கும் (எண்கள் : 33 - 38). த6இல் ஊர்கள் 21லிருந்து 32 முடிய உள்ள இரண்டு கூற்றங்களும், இரண்டு கண்டங்களும் அடங்கும். த6ம், க2ம் ஏறக்குறைய ஒரே ஊர்களைக் குறிக்கின்றன. க. சோழபுரம் கல்வெட்டில் ஒரு ஊர் (வரி 80) அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. க3அ வில் மூன்று நாடுகள் (திருவழுந்தூர் நாடு, விளைநாடு, குறுக்கை நாடு) இருக்கலாம். மேலும் இது க. சோழபுரம் கல்வெட்டின் மூன்றாம் பகுதியில் சொல்லப்பட்ட 11க்கும் கூடுதலான ஊர்களைக் (வரிகள் 91 - 137, மற்றும், 153 - 5) கொண்டுள்ளது. க3ஆ வெண்ணையூர் நாட்டின் பகுதியாகும். க. சோழபுரம் கல்வெட்டின் மூன்றாம் பகுதியில் சொல்லப்பட்ட 3க்குக் கூடுதலான ஊர்களை இது கொண்டுள்ளது. ஐந்தாம் பகுதியில் சொல்லப்பட்ட உறையூர் கூற்றத்தின் இரண்டு ஊர்களை க5 கொண்டுள்ளது. க. சோழபுரம் ஏழாம் பகுதியில் சொல்லப்பட்ட மதுராந்தக வளநாட்டில் அடங்கிய ஊர்கள் எப்பகுதியில் இருந்தன என்று சரியாகத் தெரியவில்லை. அது மருதையாற்றை[24] ஒட்டி அமைந்திருக்கலாம். அவ்வாறாயின் அவை க7 என்ற பகுதியைச் சார்ந்ததாகும்.

நிலப்படம் 3இன் படி மேலே குறிப்பிட்ட ஊர்த் திரள்கள் ஒவ்வொன்றின் இட அமைப்பும் சில தனித் தன்மைகளைக்

கொண்டுள்ளது எனலாம். ஊர்களின் இடப்பரவல் தன்மையையும் முறையையும் அட்டவணைகள் 12 - 15இல் தரப்பட்ட விவரங்களையும் கொண்டு ஆய்வோமானால், கீழ்க்கண்ட செய்திகள் நமக்குப் புலப்படும். முதலாவதாக, ஒவ்வொரு திரளிலும் உள்ள ஊர்கள் ஒரே மாதிரியான வேளாண் அமைப்பைக் கொண்டவை. வேளாண் அமைப்பு திரளுக்குத் திரள் வேறு படலாம். அட்டவணை 13 - 15 இல் உள்ள ஒவ்வொரு திரளின் தீர்வை நிலங்களின் கலவையிலிருந்து இதை எளிதில் ஊகிக்கலாம்.

க3அ /ஆ ஊர்களில் ஒரு பூ நிலத்தின் விழுக்காடு கூடுதலாக உள்ளது. மாறாக க5 ஊர்களில் இரு பூ நிலம் கூடுதலாக உள்ளது. க2, த1–த5 ஆகியவற்றின் தீர்வை நிலக்கலவை க5 ஊர்களில் உள்ளதையே ஒத்திருக்க வேண்டும். க7 ஊர்களில் ஒரு பூ நில விழுக்காடு கூடுதலாக இருந்ததோடு வரகு விளைநிலமும் நிறைய இருந்தது.

இரண்டாவதாக, நில விளைச்சல் திறனும் வட்டாரத்துக்கு வட்டாரம் மாறுபட்டிருக்கலாம் என்றும் அனுமானிக்கலாம். க. சோழபுரம் ஊர் 5இல், 39.676 வேலி இரு பூ விளையும் நிலமும், 12.464 வேலி ஒரு பூ விளையும் நிலமும் உண்டு. இதன் மீது விதிக்கப்பட்ட தீர்வையானது 2500 கலம் நெல்லாகும். மற்ற தஞ்சைக் கல்வெட்டு ஊர்களில் நிர்ணயிக்கப்பட்ட வரித்தீர்வை போன்று இவ்வூரிலும் இரு பூ விளையும் நிலங்கள் மீது வேலி ஒன்றுக்கு 100 கலம் தீர்வை என்று அனுமானித்தோமெனில், இவ்வூரில் இரு பூ விளையும் நிலத்தின் தீர்வையே 3967 கலமாக இருக்கும். இது ஊரின் உண்மையான தீர்வையை விட அதிகமாகும். ஆகவே ஊர் 5 ல் இரு பூ விளையும் நிலத்தின் தீர்வை வீதம் வேலிக்கு 100 கலம் என்பதை விடக் குறைவாக இருந்தது; அதாவது க3 ஊர்களில் இரு பூ விளையும் நிலத்தின் விளைச்சல் திறன் தஞ்சைக் கல்வெட்டு ஊர் விளைச்சலை விடக் கொஞ்சம் குறைவானது என்று முடிவு செய்யலாம்.

ஆகவே நாம் க. சோழபுரக் கல்வெட்டில் அடங்கிய ஊர்களில் சராசரி வரித் தீர்வை திரளுக்குத் திரள் வேறுபடக் காரணமாக, அவ்வத் திரளின் வேறுபட்ட வேளாண் அமைப்பு முறையையும் விளைச்சல் திறனையும் குறிப்பிடலாம். தஞ்சைக் கல்வெட்டில் 40 ஊர்கள் பல இடப்பகுதியில் அமைந்திருந்த போதிலும் ஒரே மாதிரியான வரித் தீர்வை கொண்டிருப்பதை நினைவில் கொண்டு, ஒரே வகையான வேளாண் அமைப்பும், விளைச்சலும் உள்ள கிராமங்களே குறிப்பாகத் தேர்வு செய்யப்பட்டன என்று குறிப்பிடலாம்.

தஞ்சைக் கல்வெட்டு, மற்றும் க. சோழபுரம் கல்வெட்டுக்கள் தரும் சோழர் காலத்து நிலவரித் தீர்வை சற்றுச்

அட்டவணை 12

தஞ்சாவூர் கல்வெட்டு ஊர்கள்

| | நாட்டுப்பிரிவு ஊர் | தீர்வைக்கு உள்படும் பரப்பு (வேலிகளில்)[25] | தீர்வை நெல் (கலங்களில்) அல்லது பொன் (கழஞ்சில்) | வரிவீதம் (ஒரு வேலிக்கு) |
|---|---|---|---|---|
| | **அருமொழி தேவ வளநாடு** | | | |
| | **இங்கணநாடு** | | | |
| த2 | 1. பாலையூர் | 125.379 | 12530.759 | 99.942 |
| | 2. ஆரப்பாழ் | 107.614 | 10745.863 | 99.846 |
| | 3. கீரன்தேவன்குடி | 40.882 | 4070.468 | 99.564 |
| | 4. நாகன்க... | 21.834 | 2183.458 | 100.000 |
| | *(நெ...மலிநாடு)*[26] | | | |
| த1 | 5. ......... | 115.260 | 11526.155 | 100.00 |
| | 6. தண்ணீர் குன்றம் | 34.199 | 3378.208 | 98.780 |
| | 7. உச்சிபாடி | 55.651 | xx26.xxx | 99.304 |
| | 8. கிழ்வடுகக்குடி | 26.471 | 26xx.xxx | 99.731 / 98.371[27] |
| | 9. கஞ்சாறனகர் | 6.801 | 674.791 | 99.211 |
| | 10. ஊசக் கண்ணங்குடி | 5.449 | 518.684 | 95.185 |
| | **ஆர்வலக் கூற்றம்** | | | |
| | 11. வடவிறையான் பள்ளம் | 23.937 | 2393.801 | 100.002 |
| | 12. திருத்தெங்கூர் | 29.746 | 297.218* | 9.991 |
| | **க்ஷத்திரிய சிகாமணி வளநாடு** | | | |
| | **திருநறையூர் நாடு** | | | |
| த 3 | 13. அரக்கன்குடி | 6.904 | 656.614 | 95.096 |
| | 14. பிடாரசேரி | 5.402 | 535.874 | 98.869 |
| | **வேளா நாடு** | | | |
| த 2 | 15. மணற்கால்ப் பள்ளி | 49.950 | 4918.927 | 98.477 |
| | **உய்யக்கொண்டார் வளநாடு** | | | |
| | **திரைமூர் நாடு** | | | |
| | 16. நெற்குப்பை | 37.364 | 3722.052 | 99.613 |
| | **ராஜேந்திர சிங்க வளநாடு** | | | |
| | **இன்னம்பர் நாடு** | | | |
| த 3 | 17. மருத்துவக் குடி | 29.889 | 2967.854 | 99.295 |
| | 18. கருப்பூர் | ? | 549.624 | ? |
| | **திருவாலி நாடு** | | | |
| த 4 | 19. திருத்தேவன்குடி | 29.290 | 29xx.677 | 100.910[28] |
| | 20. குறுவாணியக்குடி | 39.671 | 304.197* | 7.667 |

| | | | | |
|---|---|---|---|---|
| | **ராஜாச்ரய வளநாடு (மழ நாடு)** | | | |
| | **பாச்சிற் கூற்றம்** | | | |
| த 6 | 21. ஆன்பனூர் | 75.750 | 5850.760 | 77.237 |
| | 22. ஈங்கையூர் | 42.782 | 4278.291 | 100.000 |
| | 23. பணமங்கலம் | 40.792 | 4072.156 | 99.824 |
| | 24. சாத்தந்பாடி | 18.838 | 1883.916 | 100.002 |
| | 25. ...க்கன்குடி | 4.709 | 469.343 | 99.661 |
| | **கலாரக் கூற்றம்** | | | |
| | 26. மாந்தோட்டம் | 14.566 | 1456.489 | 99.988 |
| | 27. இறையான் சேரி | 11.757 | 1169.729 | 99.485 |
| | **வெண்கோன் குடிக்கண்டம்** | | | |
| | 28. வெண்கோன் குடி | 48.101 | 4784.729 | 99.462 |
| | 29. மாகாணி குடி | 23.157 | 2315.083 | 99.969 |
| | **செம்புறைக் கண்டம்** | | | |
| | 30. சிறு செம்புறை | 6.316 | 612.166 | 96.911 |
| | **பாச்சிற் கூற்றம்** | | | |
| | 31. துறையூர் | 149.739 | 14888.509 | 99.429 |
| | 32. காரி மங்கலம் | 11.078 | 1083.052 | 97.764 |
| | **நித்தவினோதவளநாடு** | | | |
| | **வெண்ணிக் கூற்றம்** | | | |
| த 5 | 33. வெண்ணி | 17.509 | 93.171* | 5.321 |
| | 34. பூத மங்கலம் | 25.157 | 246.518* | 9.798 |
| | 35. மீதுவேலி | 3.551 | 30.268* | 8.522 |
| | 36. நகரகாரிகுறிச்சி | 2.856 | 28.487* | 9.973 |
| | 37. வடதாமரை | 6.753 | 64 843* | 9.602 |
| | 38. வெண்ணித்திறப்பான் பள்ளி | 7.870 | 77.800* | 9.885 |
| | **அருமொழிதேவ வளநாடு** | | | |
| | **தக்களூர் நாடு** | | | |
| த 1 | 39. கொடி மங்கலம் | 50.518 | 5051.958 | 100.001 |
| | 40. பல்லவபுரம் | 20.296 | 167.662* | 8.260 |

* பொன்னாக (கழஞ்சில்) தீர்வை செய்யப்பட்டது.

சிக்கலானதாகும். ஆயினும் கீழ்க்கண்டவாறு அதனைச் சுருங்க உரைக்கலாம். வரித்தீர்வைக்குட்பட்ட நிலங்களின் தன்மையும் அவற்றின் விளைச்சல் திறனும் இடத்துக்கு இடம் வேறுபட்டன. நிலவரித் தீர்வையைப் பொறுத்தமட்டில் நிலத்தின் தன்மை, விளைச்சல் ஆகிய இரண்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ளப் பட்டன. க. சோழபுரத்தின் நான்கு பகுதிகளில் காணப்படும் மாறுபாடான வரி வீதங்களுக்கு இதுதான் காரணமாகும். அதே சமயத்தில் ஒரு நாடு அல்லது நாட்டை விடச் சற்று பெரிதான

ஒரு பகுதியை எடுத்துக் கொண்டோமெனில், வேளாண் அமைப்பு முறையும், விளைச்சலும் பொதுவாக ஒன்றாகவே யுள்ளன.

**அட்டவணை 13**

**கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டில்**

**2 ஆம் பகுதி ஊர்கள்**

| தஞ்சாவூர் கல்வெட்டு ஊர்கள் | க. சோழபுரம் கல்வெட்டு வரி | நிலத்தன்மை | பரப்பு (வேலியில்) |
|---|---|---|---|
| 17 | 51 | இரு பூ விளையும் நிலம் | 29.xxx |
| | | புன்செய் நிலம் | 0.28 x |
| 20 | 59 | நீர் நிலம் | 39.671 |
| 22 | 66 | நீர் நிலம் | 42.782 |
| 26 | 72 | (ஒரு) பூ விளையும் நிலம்[29] | 14.56x |
| | | பிறவகை நிலம் (?) | ? |
| 30 | 82 | இரு பூ விளையும் நிலம் | 5.848 |
| | | ..... விளையும் நிலம் | 0.060 |
| | | பிற வகை நிலம் | ? |

**அட்டவணை 14**

**கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டில்**

**3ஆம் பகுதி ஊர்கள்**

| | க. சோழபுரம் கல்வெட்டு வரி நிலத்தன்மை | ஊர்ப் பெயர் | பரப்பு வேலியில் |
|---|---|---|---|
| 1. | வரி 101 | ஊர்ப்பெயர் அழிந்துள்ளது | |
| | ஊர் நிலப்பரப்பு (வேலியில்) | | ? |
| | இரு பூ விளையும் நிலம் | | 31.851 |
| | ஒரு பூ விளையும் நிலம் | | 12.567 |
| | தீர்வைக்குள்பட்ட மொத்த நிலப்பரப்பு | | 44.418 |
| | நெல்லாகத் தீர்வை (கலங்களில்) | | 2300.000 |
| | வரி வீதம் (வேலி ஒன்றுக்கு) | | 51.779 |
| 2. | வரி 110 | ஊர்ப்பெயர் அழிந்துள்ளது | |
| | ஊர் நிலப்பரப்பு | | ? |
| | தீர்வைக்குள்பட்ட நிலப்பரப்பு | | 136.xxx |
| | நெல் | | 7500.000 |
| | வரிவீதம் (சுமார்) | | 55.000 |

| | | |
|---|---|---|
| 3. | வரி 114 **கழனிவாய் . . .** | |
| | ஊர்நிலப்பரப்பு | 119.404 |
| | இரு பூ விளையும் நிலம் | 47.816 |
| | ஒரு பூ விளையும் நிலம் | 63.xxx |
| | தீர்வைக்குள்பட்ட நிலப்பரப்பு | 111.065 |
| | நெல் | x500.000 |
| | வரிவீதம் | ? |
| 4. | வரி 129 **அளநல்லூர்** | |
| | ஊர் நிலப்பரப்பு | ? |
| | இரு பூ விளையும் நிலம் | 60.866 |
| | ஒரு பூ விளையும் நிலம் | 110.xxx |
| | புன்செய் நிலம் | 5.331 |
| | தெங்கந்தோட்டம்(தென்னந்தோப்பு) | 0.115 |
| | தீர்வைக்குள்பட்ட மொத்த நிலப்பரப்பு | 181.308 |
| | நெல் | 9000.000 |
| | வரிவீதம் | 49.639 |
| 5. | வரி 134 **கொண்டல்** | |
| | ஊர் நிலப்பரப்பு | 53.5xx |
| | இரு பூ விளையும் நிலம் | 39.676 |
| | ஒரு பூ விளையும் நிலம் | 12.464 |
| | தீர்வைக்குள்பட்ட மொத்த நிலப்பரப்பு | 52.140 |
| | நெல் | 2500.000 |
| | வரி வீதம் | 47.947 |
| 6. | வரி 149 **ஊர்பெயர் அழிந்துள்ளது** | |
| | ஊர் நிலப்பரப்பு | 44.413 |
| | இரு பூ விளையும் நிலம் | 18.610 |
| | ஒரு பூ விளையும் நிலம் | 3.211 |
| | மஞ்சள் தோட்டம் | 1.421 |
| | ஊர் நத்தத்து கருணையும் வழுதலையும் நடலாம் தோட்டம் | 0.142 |
| | புன்செய் நிலம் | ? |
| | தீர்வைக்குள்பட்ட மொத்த நிலப்பரப்பு | 43.35x |
| | நெல் | 2040.000 |
| | வரிவீதம் | 47.058 |

**அட்டவணை 15**
**கங்கைகொண்ட சோழபுரம் கல்வெட்டில்**
**5ஆம் பகுதி ஊர்கள்**

| | க. சோழபுரம் கல்வெட்டு வரி நிலத்தன்மை / ஊர்ப் பெயர் | பரப்பு வேலியில் |
|---|---|---|
| 7. | வரி 173 **கருப்பூர்** | |
| | ஊர் நிலப்பரப்பு | 250.725 |
| | இரு பூ விளையும் நிலம் | 245.406 |
| | எள்ளும் பயறும் விச்சலாம் நிலம் | 1.80 x |
| | தீர்வைக்குள்படும் நிலப்பரப்பு | ? |
| | நெல் | 2x.585 |
| | வரி வீதம் | 82.34+30 |
| 8. | வரி 176 **வயலூர்** | |
| | ஊர் நிலப்பரப்பு | 201.962 |
| | இரு பூ விளையும் நிலம் | 161.889 |
| | கமுகு தோட்டம் நிலம் | 1.455 |
| | க...ம் மஞ்சளும் விளையும் நிலம் | 1.xxx |
| | மாந்தோட்டம் நிலம் | 0.760 |
| | சுற்றுத் தெங்கு . . . கொடி தோட்டம் (வெற்றிலைத்தோட்டம்) | 0 159 |
| | வரகு விளையும் நிலம் | |
| | எள்ளு விளை . . . | 0.846 |
| | . . . தோட்டம் நிலம் | x4.663 |
| | கருணையும் வழுதலையும் விளையும் நிலம் | 0.024 |
| | தீர்வைக்குள்பட்ட நிலம் | 0.487 |
| | நெல் | 184.810 |
| | வரி வீதம் | 169xx.239 |
| | | 91.7 |

தெற்குப்பட்ட நாடுகளில் உள்ளவராதல், ஆழ்வாநுக்குப் பத்தொந்பதாவரையும் ராஜராஜப் பெருவிலை கொண்டோ மெந்றாதல், குடிவிலை கொண்டோமெந்றாதல், ராஜராஜப் பெருவிலை கொண்டார் பக்கல் விலை கொண்டோமெந்றாதல், அநுபோ$_4$கிக்கப் பெறாதார்களாகவும்; ராஜேந்த்ர சோழப் பேராற்றுக்குத் தெற்குள்ளார், பிந்பு விலை கொள்ளவும் பெறாதார்களாகவும், குடிநீக்கித் தேவதாநம் பள்ளிச்சந்தம் நீத்தோற்பட்டி இறையிலியாந ஊர்களில், கீழடசாராந வாரணவாசியும், சிறுகலூரும், கல்லகமும், துடரியும் குறிஞ்சிப்பாடியு முள்ளிட்ட ஊர்கள் இறையிலியிடுவதற்கு முந்பு காணியுடைய காணியாளரே காணியாக கைக் கொண்டு அனுபோ$_4$கித்துக் கடமையிறுக்கவும்; ராஜேந்த்ரசோழப் பேராற்றுக்கு வடக்குள்ளார் அநுபோ$_4$கிக்குமிடத்துப் பழங் காணியாளரைத் தவிர மற்றுள்ளார் அநுபோ$_4$கி$_3$க்கப் பெறாதார்களாகவும்; பெறவேணுமெந்று பல்லவராஜந் நமக்குச் சொந்நமையில், இப்படிச் செய்யகடவதாகச் சொந்... ஊர்கள் பழங்காணியாளர் அனுபவிக்க கடவாரே அநுபவிக்க; எழுதிநாந், திருமந்திரஓலை நெறியுடைச்சோழ மூவேந்த வேளான்; எழுத்திட்டார், நீலகங்கரையர் வாணாதிராயர், நந்திபந்மர், மலையப்பிராயர், கநகராசர், தீபத்தரைசர், வில்லவராசர்.

**கல்வெட்டு : 15**

*இக.* 1926, 265. *பெரியகொருக்கை – திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி.*

*ராஜராஜன்* 3, 26 (1242)

—— வடகரை ராஜராஜ வளநாட்டுத் திருப்பிடவூர் நாட்டுக் குறுக்கை உடையாந் சொக்கன் மறைகலந்தாந் தெந்னவராயந்; இவ்வூரில் எழுந்தருவித்த உடையார் அழகிய சொக்க னாயநாற்கும், தம்பிராட்டியாற்கும், பூசைக்கும், திருப்பணிக்கும் இருபத்தொன்பதாவது கானக்கிளியூர் நாட்டு தத்தந்குறிச்சி இராராப்பெருவிலை கொண்டு, இன்னாயனாற்கு திருநாமத்துக் காணியாக குடுத்த ஊர், காலும் நீக்கி, ஊர் முக்காலும் ஆக ஊர் ஒன்றுக்கு இவ்வூர் ஒட்டு இறுக்குமிடத்து, உள்ளூர் நாயந்மார் தேவதாநமும் திருவிடையாட்டமும் ஊரமையும் நீக்கி, நின்ற நன்செய், புன்செய் நிலத்துக்கு அனைத்து ஆயமும் உட்பட; நன்செய்க்கு வேலி இருபதிந் கல நெல் இறுக்கவும்; புந்செய்க்கு வேலி பதிந்கல வரகு; இப்படியால் வந்த ஒட்டு இறுக்கும் இடத்து, பயிற் செந்று அளந்து முதலாந நிலத்துக்கு இவ்ஒட்டு இறுக்கவும் பூசைக்கும் திருப்பணிக்கும் செல்வதாகக் கல்வெட்டிக் கொள்வதே; துல்யம், இக்கடை ஈடு எழுதிநேந். வெள்ளைப்பிள்ளை எழுத்து.

**கல்வெட்டு : 16**

*இக.* 1926, 267. பெரியகொருக்கை – உடையார்பாளையம் – திருச்சிராப்பள்ளி.

*ராஜராஜன்* 3, 27 (1243)

—— வடகரை ராஜராஜ வளநாட்டு திருப்படவூர் நாட்டு குறுக்கை உடையாந் சொக்கர் மறைகலந்தாந் தென்னவராயநேந் எழுந்தருளுவித்த உடையார் அழகிய சொக்கநாயன் 28வது கும்ப₄நாயற்று பூர்வபக்ஷத்து த்ரிதியையும் வெள்ளிக்கிழமையும் பெற்ற உத்திரட்டாதி நாள், இந்நாயனார் திருக்கோயிலில் திருமடைப்பள்ளிக்குத் தெற்கு ஒரு கோல் உட்படத் திருக்கோயிலுக்கும் திருமடைவிளாகத்துக்கும் வடக்கே செல்ல இம்மண்டபத்து கல்வெட்டின கோலால் இட்ட நிலம், அரையே ஒரு மா பூசைக்கும் திருப்பணிக்கும் இட்ட கு... ப்புந்செய் நிலம் ஆவது இவ்வூர் குளத்தில் கணக்கந்செய் நிலம் அரைமாவும், கொலன்குண்டு நிலம் அரைமா அரைக்காணியும், குடிநீங்காத் தேவதாநம் தாட்புடையாந் நிலம் காணி அரைக்காணியும் தெற்றி அரைய் நிலம் ஒருமா அரைக்காணி முந்திரிகையும், வகு... வை நிலம் அரைமாவும், கீழைத்தெற்றி அரையந் நிலம் ஒரு மா அரைக்காணி முந்திரிகையும், பனங்களத்தில் நான் கொண்டுடையேநாய் எந்துதாய் வருகிற நிலத்தில் பொவரிகளிக்கு வடக்கும் கிழக்கும் நிலம் ஒன்றே காலே முந்திரிகையும், ஆக நந்செய் நிலம் ஒன்றே ஒன்பதுமாக்காணி அரைக்காணி முந்திரிகையும்; இதில் குடிநீங்காத் தேவதாந நந்செய் நிலம் மூன்றுமா அரைக்காணியும்; புன்செய் நிலம் ஆவது ஊற்குக் கிழக்கு அரசுடையாந் தொண்டி நிலம் முக்காலே ஒரு மாவும், நிட்டுரன் குழிக்குத் தெற்கு நிலம் வேலியும், இரும்பூதி நிலம் அரையே இரண்டுமாவும், கள்ளஞ்செய் நிலம் முக்காலே இரண்டுமாக் காணியும், பள்ளிகள் நிலம் காலே முந்திரிகையும், ஊற்கு மேற்கு இரட்டாம் புள்ளி செய் நிலம் ஏழரையே மூன்று காணியும், ஆகப் புந்செய் நிலம் பத்தரையே மும்மாஅரையே முந்திரிகை; ஆக நன்செய், புந்செய் நிலம் பந்நிரண்டே மூன்று மாவும்; இந்நாயநாற்கு பூசைக்குந் திருப்பணிக்கும் குடுத்தேந்; இதில் திருநாமத்துக் காணி, நஞ்செய், புஞ்செய் நிலம், நீக்க குடிநீங்காத் தேவதாந, நந்செய், நிலம், மூன்றுமா அரைக்காணி; இந்நாட்டு நான் கொண்டு உடையேநாய் எந்துதாய் வருகிற சண்மங்கலத்தில் நான் குறுக்கையில் ஏற்றிந திருச்சிற்றம்பலச் சதுர்வேதி மங்கலத்து ப₄ட்டகளுக்குக் குடுத்த ஊர், காலே அரைக்கால், நீக்கி, இந்நாயநார் அழகிய சொக்கநாயநாற்கு பூசைக்கும் திருப்பணிக்கும் குடுத்த ஊர் அரைக்கால் இந்த அரைக்காலால் வந்த ஊர் நத்தமும்,

நந்செய், புந்செய் நிலமும், பூசைக்கும், திருப்பணிக்கும் குடுத்து இந்நாயநாற்கு 28வது —— நாள் கல்வெட்டிக் குடுத்தேந் இவ்வூர், நந்செய், புன்செய்கு, அனைத்தாயம் உட்பட நன்செய் வேலிக்கு 20 கலமும்; புந்செய் வேலிக்கு ஐங்கல வரகு இறுக்கவும்; சண்மங்கலம் அனைத்தாயமும் உட்பட நந்செய் வேலிக்கு 30 கலமும், புன்செய் வேலிக்குப் 10கல வரகு இறுக்கவும்; இதில் திறப்பில் இறுக்கும் நெல் வேலிக்கு 20 கலமும், புந்செய் வேலிக்கு 5 கல வரகும் இறுக்கவும்; நிக்க நெல் வரகு இந்நாயநார் அழகிய சொக்கநாயநாற்கு பூசைக்கும், திருப்பணிக்கும் இறுப்பதாகச் சொந்நோம் நாட்டவரோம்; நாட்டவர் பணியால் பெரியநாட்டு வேளாந் எழுத்து.

**கல்வெட்டு : 17**

*இக.* 1929, 128. *லால்குடி – லால்குடி – திருச்சிராப்பள்ளி.*

*ராஜராஜன்* 2, ... (1146 – 1171)

—— கூற்றூருடையான் பெரியானான எதிரிலி சோழ மூவேந்த வேளானுக்கு ப்ரஸாத₃ஞ் செய்தருளின திருமுகப்படி; திருபுவனசக்கரவத்தி கோனேரின்மை கொண்டான் கூற்றூருடையான் மூவேந்தவேளானுக்குத் தான் பல ஊர்களிலும் காணியாக விலை கொண்ட நிலத்து ராஜராஜ வளநாட்டு கண்டராதித்தச் சருப்பேதிமங்கலத்துப் பிடாகை செம்பியன் மாதேவிநல்லூர் நிலம் 16 + – யும் ராஜராஜகூற்றூர் என்னும் பேராலும் இருள்நீக்கி உலகாண்ட சோழச் சருப்பேதிமங்கலம் கூட ஒட்டி இறுக்கிற கற்குடி காரிகுடிச் சேரியும் விண்ணமங்கலமும் உட்பட்ட நிலத்து நிலம் 46 + – யும் ராசகெம்பீரன் கூற்றூர் என்னும் பேராலும் கொற்றமங்கலத்து நிலம் 8 $\frac{1}{4}$லும் வளவன் கூற்றூர் என்னும் பேராலும் பாண்டியகுலாசனி வளநாட்டு பூபதி பத்த மங்கலமான பகையறுத்து கொண்ட சோழநல்லூர் நிலம் 54 $\frac{1}{2}$ + – யும் சாத்தமங்கலத்து நின்ற வேறுபிறிந்த அலைவாய் நிலம் 1 $\frac{1}{2}$ யும் குலோத்துங்க சோழக்கூற்றூர் என்னும் பேராலும் வரியிலிடக்கடவதாகப் பெறவேணும் என்று சேதியராயன் நமக்குச் சொன்னமையில், இப்படி செய்யக் கடவதாகச் சொன்னோம்; எழுதினான், திருமந்திர ஓலை நெறியுடைச்சோழ மூவேந்தவேளார் என்றும்; இவை சேதியராயன் எழுத்து; அமரகோன் எழுத்து; சேதிகுலராயன் எழுத்து; பிருதிகங்கரையன் எழுத்து; சிம்பியத்தரையன் எழுத்து; காங்கேயராயன் எழுத்து; என்றும் ப்ரஸாதம் செய்தருளின திருமுகப்படி——

**கல்வெட்டு : 18**

*தெக.* IV, 424. *திருவானைக்கா (ஜம்புகேஸ்வரம்) – திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி.*

*இராஜராஜதேவர்* 3, 17 (1233)

—— *பாண்டிகுலாசனி வளநாட்டு விளாநாட்டு உடையார் திருவாணைக்காவுடைய நாயனார் கோயிற் திருவெண்ணாவற் திருநிழற் கீழினிதமந்தருளிய திரிபு$_4$வனபதிக்கு மூலப்$_4$ருத்ய ராகிய ஆதிசண்டேச்வர தேவற்கு ராஜராஜ வளநாட்டு பாச்சிற்கூற்றத்துக் கீழ்பலாற்று வாளாடி உடையான் சிலம்பன் பிச்சதேவனேன் நிலவிலைப்பரமாண இசைவுதீட்டு; இந்நாட்டு மீபலாற்று செம்பியன்கூற்றூர் கூற்றூர்கிழவன் சியாருதேவன் திருவானைக்காவுடையானு மவன் தம்பி திருநட்டப்பெருமானுங், கூற்றூர்கிழவன் ஆதித் தேவன் கூத்தனுங், கூற்றூர்கிழவன் திருப்பூவணமுடையான் ஆதித்ததேவனுங், கூற்றூர்கிழவன் உடையபிள்ளை சொக்கஞானசம்பந்தனு மிவன் தம்பி சியாருதேவனுங், கூற்றூர்கிழவன் அவயம்புக்கான் திருநட்டப்பெருமானும், இவ்வனைவர் பக்கலும் நான் விலைகொண்டுடையேனான —— இந்நான்கெல்லைக்குட்பட்ட நிலங்களில் புறவூர் நிலமாய் இவ்வூர் எல்லைக்குட்பட்ட நிலம் நீக்கி இவ்வூர், நிலமாய் புறவூரில் உட்கிடையான நிலங்கள் உட்படப் பொத்தகப்படிக்கு பயிரடைப்பின்படி கார்மறுவும் ஒரு பூவும் —— இந்நிலம் 33+ ஊர் நத்தத்திலும் அளவு நீங்கலும் உடையார் செம்பியநீச்வரமுடையார் திருநந்தவனத்திடல் மூன் றும், ஊர்நந்தத்து சிவப்பிராமணர் குடிஇருப்பு மனை இரண்டும், சீகரணப்பெரும்பள்ளி பள்ளிஉடையான் மனை ஒன்றும், நீக்கி; நீக்கிநின்ற ஊர் நத்தமும், புலைச்சேரி நத்தமு மன்றுங், கன்று நிலைப்பாழு மளவு நீங்கலும், பாகமும் பாகாசிரியமும் பொதுவும் பொதுவாரியும், இந்நிலத்து மேனோக்கின மரமுங், கீழ்நோக்கின கிணறும், மற்றும் எப்பேர்ப்பட்ட உரிமைகளு மகப்பட இந்த ஆதிசண் டேச்வரதேவற்கு விற்றுக் குடுத்துக் கொள்வதான எம்மிலிசைன்த விலைப் பொருள், அன்றாடு நற்காசு —— பதினாறாயிரத்தைஞ்ஞூற்றிருபதும், ஆவணக்களியே காட்டேற்றிக் கைச்செலவறக் கொண்டு விற்று விலைப்ரமாண இசைவுத் தீட்டுக் குடுத்தேன், ஆதிசண்டேச்வர தேவற்கு; இந்த வாளாடி உடையான் சிலம்பன் பிச்சதேவனேன்; இந்த விளைநிலமும் புன்செய்யும் நிலம் முப்பத்து மூன்றே முக்காணிக் கீழரையே இரண்டுமாவுக்கும், ஊர் நத்தத்துக்கும், புலைச்சேரி நத்தத்துக்கும், அளவு நீங்கலுக்கும் பொதுவும் பொதுவாரியு —— அகப்பட இக்காசு பதினாறாயி ரத்தைஞ்ஞூற்றிருபதுமே விலையாவுதாகவும், இதுவே*

பொருள்மாவறதிப் பொருட்செலவோலை யாவதாகவும், இதுவல்லது வேறு பொருள் மாவறதிப் பொருட்செலவோலை காட்டக்கடவதல்லாததாகவும், இந்நிலத்துக்கும் இன்னிலத்தால் வந்த ப்ராத்திகளுக்கும் திருவாய்மலர்ந்தருளின போதே பிரம்மாணம் பண்ணிக் குடுக்க கடவேனாகவும், குடுத்திலேனாகில் இந்த ப்ரமாண இசைவுத்தீட்டே ப்ரமாணமாவுதாகவும், இப்படி சம்மதித்து விலைக்கற விற்றுப் பொருளறக் கொண்டு விற்று விலைப் பிரமாண இசைவு தீட்டுக் குடுத்தேன், ஆதிசண்டேச்வர தேவற்கு இந்த வாளாடி உடையான் சிலம்பன் பிச்சதேவனேந்; பணியால் இந்த நிலவிலை ப்ரமாண இசைவுத் தீட்டு, எழிதினேன், இவ்வூர் மத்$_3$யஸ்தன் மாதானமங்கலமுடையான் தேர்பொலியநின்றான் பஞ்சனெதிவாணனேன் இவை என் எழுத்து; இப்படிக்கிவை வாளாடி உடையான் சிலம்பன் பிச்சதேவனெழுத்து;——

[மற்றும் பலர் கையொப்பம் இட்டுள்ளனர்]

**கல்வெட்டு : 19**

*இக.* 1937-38, 37. *திருவானைக்கா (ஜம்புகேஸ்வரம்) – திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி.*

*ராஜராஜன்* 3, 16 + 1 (1233)

——தென்கரை உய்யக்கொண்டார் வளநாட்டு முழையூர் நாட்டு தருமபுரமுடையான் சேந்தநான ஆழ்வாண்டானே நிலவிலை ப்ரமாண இசைவு தீட்டு; ராராவளநாட்டுப் பாச்சிற் கூற்றத்து கீழ்பலாற்று வாளாடி உடையான் சிலம்பன் பிச்சதேவனும், வாளாடி உடையான் திருவேகம்பமுடையான் ஆடவல்லானும், வாளாடி உடையான் ஆதித்ததேவன் அழகியானும், வாளாடி உடையான் ஆடவல்லான் நாயனும், தேவதானக்குடையான் ஆளுடையான் நம்பி திருவாரூரானும், இவன் தம்பி தேவகள் தேவனும் அரும்பாகிழையான் ... னித்தானும், ஆக இந்த எழுவர் பக்கலும் இவ்வாளாடியில் விலைகொண்டுடையேனாய், என்னுதாய் ஆதிசண்டேச்வர தேவற்கு விற்றுக் குடுத்த நிலத்துக்கு —— நடுவுட்பட்ட நிலங்களில் புறவூர் நிலமாய் இவ்வூர் எல்லைக்குட்கிடையான நிலம் நீக்கி, இவ்வூர் நிலமாய் புறவூர்களில் உட்கிடையாய் கிடந்த நிலம் உட்படப் பொத்தகப்படிக்கும், பயிர் அடைப்பின்படி, கார் மறுவும் ஒரு பூவும் நிலம் 22 $\frac{1}{2}$ + உடையார் திருவறிஞ்சீச்வரமுடைய நாயனார் தேவதானம் அருளாள விண்ணகர் எம்பெருமான் திருவிடையாட்டம் ஜநநாதப் பெரும்பள்ளி பள்ளிச்சந்தமும் மற்றும் முதலிகள் பக்கல் பலரும் விலை கொண்ட நிலங்கள் உட்பட நிலம் 7 $\frac{3}{4}$ + நீக்கி நிலம் 14 $\frac{1}{2}$ + நிலங்கலந்தவாற்றல் விலைகொண்டுடையேனான, கார்மறுவும், ஒருபூவும் நிலம் 1 $\frac{1}{2}$ +

... புன்செய் நிலத்து உடையார் திருஅறிஞ்சீச்வரமுடைய நாயனார்க்கும், அத்தியிற் பிள்ளையாற்கும், முதலிகள் விற்றநிலம் ஒன்றே நாலுமா நீக்கி, நின்ற, புன்செய் நிலத்து விழுக்காட்டோபாதியும், இந்நிலத்தால் வந்த ஊர்நத்தமும், புலைச்சேரி நத்தத்தொபாதியும், மணவீடு நிலத்து உறையூர் ... மூநாட்டு விழுப்பரையர் விற்ற வல்லிமயக்கல் கூட குழி நிலம் 100, அத்திஉடையான் மூங்கில் உள்நத்தத்து குழி 30ம், ஆக முதலிகள் பக்கல் விலைகொண்ட குழி 1,530ம் புதுக்குடியாரு களுக்கு விற்றதென்று இவர்கள் தாங்கள் சொல்லுகிற மனை இரண்டும், ஊற்கேறச் சாதனங் காட்டினால் விடக்கடவதாக இட்டு வைத்த மனை இரண்டும், நீக்கி நின்ற நிலங்களில் ஒபாதியும், மன்றுங், கன்றுநிலை பாழும், அளவுநீங்கலும், ஆறும், ஆறிடுபடுகையும் பாகமும், பாகாசிரியமும், பொதுவும், பொதுவாரியு மிவையிற்றில் மேனோக்கின மரமும், கீழ்நோக்கின கிணறும், மற்றும் எப்பேர்ப்பட்ட உரிமைகளும், — விற்று —— விலைப்பொருள் அன்றாடு நற்காசு 6,195——

[மத்யஸ்தன் மற்றும் பலர் கையொப்பமிட்டுள்ளனர்]

**கல்வெட்டு : 20**

*இக.* 1937–38, 38. *திருவானைக்கா —— திருச்சிராப்பள்ளி– திருச்சிராப்பள்ளி.*

குலோத்துங்கன் 3, 21 + 316 (1200)

—— கோனேரின்மைகொண்டான் —— இராஜகம்பீர வளநாட்டு விளத்தூர் நாட்டு பழுவூர் கிழவன் நக்கன் அரவனுக்கு தாந் அனுபவித்து வருகுவதாகத் தொண்டைமான் நமக்குச் சொல்லி, தான் பிரஸாதக் காணியாகப் பெற்ற இன்னாட்டுப் பழுவூரான இராஜேன்திர சோழநல்லூர் நிலம் 71, $\frac{6}{20}$ + ம் வெட்டிப்பேறு இறங்கின ஏனாதிமங்கலம் நிலம் 21 $\frac{1}{4}$ + ஆக நிலம் 92 $\frac{1}{2}$ + ம் முன் னுடையாரும் பழம் பெயரும் தவிர்ந்து; தனக்கும் தன் வற்கத்தார்க்கும் ஜன்மக் காணியாக 21 பசாந் முதல், குலோத்துங்க சோழன் பழுவூர் என்னும் பேரால், ஒரூராகக் கூட்டி; வரியிலாரும், வரிக்குக் கூறு செய்வார்களும் எழுத்திட்ட உள்வரி தரச் சொன்னோம்; —— எழுதினான் திருமந்திர ஓலை மீனவன் மூவேந்தவேளான் எழுத்து ——

**கல்வெட்டு : 21**

*இக.* 1937-38, 39. *திருவானைக்கா —— திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி.*

குலோத்துங்கன் 3, 21 + 300 (1200)

—— யாண்டு 21ள் 300 உள்வரி, ஜன்மக் காணியாகப் பெற்று ஒரூராய்க் கூட்டின படிக்கு உள்வரி, இராஜகம்பீர வளநாட்டு

விளத்தூர் நாட்டு பழுவூர் கிழவன் நக்கன் அரவன் அனுபவித்து வருகிற... தொண்டைமானார் விண்ணப்பஞ் செய்து —— பிரஸாதக் காணியாக பெற்ற நிலமாய், முன்னுடையாரும் பழம்பெயரும் தவிர்ந்து, இவனுக்கும் இவன் வற்கத்தார்க்கும் ஜன்மக்காணியாய் இயாண்டு 21வது பசான் முதல் குலோத்துங்க சோழன் பழுவூரென்னும் பெயரால் ஒரூராய்க் கூடின இன் னாட்டுப் பழுவூரான இராஜேந்திர நல்லூர் நிலம் 71 + —— னால் நெல் 3,000 கலம் பழவிறையிலாத நிலத்தால் காணிக்கடன் நெல் 1,215 நெல்லினால் பத்தாறாக்கி நெல் 720 ... 462 கலமாக நிச்சயித்த நெல் 1,307 இயாண்டு 21வது பசான் முதல் ஒரூராய்க் கூடினமைக்கு இவை ... ணத்து னாயகம் குழலூருடையான் எழுத்து; ——

[வுபுரவரி ஸ்ரீகரண நாயகம் மற்றும் பலர் கையொப்ப மிட்டுள்ளனர்]

**கல்வெட்டு : 22**

*இக.* 1937-38, 40. திருவானைக்கா —— திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி.

குலோத்துங்கன் 3, 21 + 316 (1200)

—— திருமுகம் —— திருபுவனசக்ரவத்தி கோனேரின்மை கொண்டான் இராசகெம்பீர வளநாட்டு விளத்தூர் நாட்டுப் பழுவூர் கிழவன் நக்கன் அரவனுக்குத் தந்காணியாய் தான் அநுப$_4$வித்து வருகுதாக தொண்டைமான் நமக்குச் சொல்லி, நம் முன்னாக... மங்கலம் ... வரை அரைக்காணிக் கீழ்னாலுமா முக்காணியும் ஆசாங்குடியான புதுவூரான கூற்றூரில் நிலம் மூன்றே இரண்டு மாவின் கீழ் அறுமாகாணியும் வரம்பனூரான பணமங்கலம் நிலம் ஒன்றரையே மாகாணி முந்திரிகைக்கீழ் எட்டுமாவும், திருவரங்கத்து இவ்வாழ்வார் தேவதாநம் மேன் மாடக் குடியில் நிலம் அரையே இரண்டுமா முக்காணி அரைக்காணி முந்திரிகைக் கீழ் அரையே நான்மாவரை அரைக்காணியும், வடவழினாட்டுத் திருவெள்ளறையோடுங் கூடின அதட்குடி செங்குண்டையாந மேலைப் பணமங்கலத்து முன்னுடையாரும் பழம் பெயரு பிரம்மதேயமா வருகிறபடியும் வடவழினாட்டு நின்றுங் கூடுகிற நிலம் இன்னாட்டு முதலும் தவிர்ன்து, பாச்சில் கூற்றத்து கீழ்பலாற்றிலே முதலும் தேவதான இறையிலியான நிலம் பழம்படியே தேவதான இறை ... செய்வார்களும், எழுத்திட்ட உள்வரிச் சொன்னோம்; இன்னிலம் 21 பசாந் முதல் தநக்குத் தந்வற்கத்தாற்கும் ஜன்மக்காணியாக அனுபவிக்க; எழுதினான், திருமந்திர ஓலை மீனவன் மூவேந்தவேளான் எழுத்து, வில்லவராயன் எழுத்து; காலிங்கராயன்எழுத்து; யாண்டு 21நாள் 316.

**கல்வெட்டு : 23**

*இக.* 1938-39, 158, *திருப்பங்கிலி* – • *லால்குடி* – *திருச்சிராப்பள்ளி.*

*ராஜராஜன்* 3, 11 (1227)

*—— வடகரை இராஜராஜ வளநாட்டுப் பாச்சில் கூற்றத்து மீபிலாற்று ப்ரஹ்மதேசம் தொடையூர் சபைக்குச் சமைந்த கௌசிகன் திருவாலிப் பெருமாளான செந்தாமரைக் கண்ண பட்டனும், கௌசிகன் வீற்றிருந்தான் திருவாளிப்பிள்ளையான திருவரங்கமாளி பட்டனும், கௌசிகன் திருவானைக் காவுடையார் சுந்தரத் தோளுடையானாந சிராம பட்டனும், இவ்வனைவோம் சபை[4] விலை ப்ரமாண இசைவு தீட்டு ; பாண்டி மண்டலத்துப் பெருமாள் சுந்தர பாண்டிய தேவர் மண்டல முதலிகளில், மலைமண்டலத்து கா்லடிச் சங்கரன் அழகனான மழவராயற்கு விற்றுக்குடுத்த யூறுணி புஞ்செய் நிலமாவது. —— உள்பட்ட நிலத்துடையாந் நல்லான் சதிரன்னான மழைநாட்டு விழுப்பரையனுக்கு நாங்கள் விற்ற குறிச்சி நத்தமும் நீர் நிலமும் இது சூழ்ந்த புன்செய் நிலமுள்பட விற்ற நிலம், 40 வேலியும், உடையார் திருப்பைஞ்ஞீலி உடைய நாயனார்க்கும், இந்நத்தத்து வினாயகப் பிள்ளையாற்கும், கைசிகந் திருவரங்கப் பெருமாள் திருவரங்க செல்வநாந —— செல்வ நம்பி விற்ற நிலமு நீக்கி —— பன்னீரடியும் விலக்கடியும் பெற்ற கோலால் நாங்கள் விற்ற புன்செய் நிலம் 60 வேலி –விலை பொருள் அன்றாடு நற்காசு 6,000 மும் ஆவணக் களி —— விற்றுக்குடுத் ...*

**கல்வெட்டு : 24**

*இக.* 1939–40, 388. *உய்யக்கொண்டான்திருமலை திருச்சிராப்பள்ளி – திருச்சிராப்பள்ளி*

*குலோத்துங்கன்* 3 – [*பல இடங்களில் அழிந்துள்ளது*]

*—— கோனேரின்மை கொண்டான் – ராச கெம்பீர வளநாட்டு கற்குடி உடையார் விழுமிய . . . தேவகன்மிக . . . கண்காணி செய்வார்களுக்கும் ஸ்ரீ காரியஞ் செய்வார்களுக்கும்,. . . ல்லூர் . . . மதுராந்தகப் பெருந் தெருவு உட்பட்ட நிலத்தும் கங்கை கொண்ட சோழ நல்லூரரான செம்பியந் கிளிநல்லூர் நிலத்தும், தான் கொண்டு ஏற்றுகிற வியாபாரிகளுக்கு காணியுங் குடியிருப்பு நத்தமுமாக பெரும்பன்றூர் கிழவந் குலோத்துங்க சோழவிசயபாலன் பலர் பக்கலும், இன்னாட்டில் விலை கொண்ட. . . நல்லூர் திருக்குளிர்மாணி மா. .. கு உள்ளூர்கள் திறப்பும் . . . பத்தொன்பதேய் அரைமாவரைவிந் கீழ்க்காலும், கங்கைகொண்ட சோழ நல்லூரரான செம்பியந் கிளிநல்லூர் நிலம் இருபத்தஞ்சரையே அரை . . . முந்திரிகைக் கீழரையும்,*

தச்சக்குடி நிலம் நாற்பதேய் முக்காலே இரண்டு மாவிந் கீழ் எட்டுமாக் காணி முந்திரிகை . . . நிலம் அறுபத்தா . . . முக்காலே மாகாணிக் கீழரையே . . . அரைக் காணி முந்திரிகையும், முன்னுடையாரும் பழம்பேரும் தவிர்ந்து . . . முதல் கொங்கு செ. . . சோழபுரம் என்னும் பேரால் ஒரூராகக் கூட்டவும் ; இந்நிலத்து திருக்கு . . . ங்கொண்ட சோழ நல்லூர் கேரளாந்தகப் பெருந்தெரு உட்பட்ட நிலத்தும் கங்கை கொண்ட சோழ நல்லூரான செம்பியன்கிளிநல்லூர் நிலத்தும், இவர்களுக்கு குடியிருப்பு நத்தமாக பதிற்று வேலி நிலமும், அ . . . த்தராதித்தந் என்னும் பேரால் கல்லுகிற குளமும், கரையும் மாக . . . ல் நிலமும் நீங்கலாக நீக்கி, . . . நீக்குமிடத்து சுங்கந்தவித்த குலோத்துங்க சோழதேவற்கு பதினாலாவது நீங்கலான ஊர் நத்தம் நீக்கி, நீக்கி நின்ற நிலம் புன்செய் நிலத்திலே நிலம் நீக்கி நின்ற ஊர்களில் ஊர்நத்தமும் ஊருணிக . . . குளமும் உள்ளிட்டு புரவில் நீங்கச் . . . த்து இறைகட்டுக்குடலாக் கொள்ள . . . ட்டக் குடல் . . . ம் இன . . . முட்பட்ட நிலத்து நீங்கலான நீக்கின நிலம் நீக்கி நீக்கி நின்ற நிலத்துக்கு கடமை இறுக்குமிடத்து, முன்பு முதல் கொண்டு வருகிறபடி தவிர கார் மறுவும், ஒரு பூவும் கமுகும் கொடியும் உள்ளிட்டு செய்யலாம், பயிர் செய்து விளைநிலத்துக்கு இருபத்து மூவாயிரக்கல நெல்லும், புன்பயிருக்கு நா. . . லுகாலு . . . றைக்கு, ஆயிரம் காசும், இருபத்து நாலாவது முதல் தண்ட முதல் . . . பத்த . . . ல் வந்த காசும் . . . நாலால் வந்தகாசும், நெல்லும் காரிலும் நீக் . . . காசு நெல்லும் . . . லும் இறுக்கவும் ; இவ்வூருடன் கூடின செம்பியன் கிளிநல்லூர் நிலம் 25 $\frac{1}{2}$ + யும், பெரும்பன்றூர் கிழவன் குலோத்துங்க சோழ விசையபாலனுக்கு காணியாகவும் நீக்கி நின்ற நிலம் தொண்டைமான் நிச்சயித்தபடியே இவர்களுக்கு காணி ஆகவும் . . . மணமாதேவற்கு ஐவேலி நிலமும் திருச்சோமீசுர முடையாற்கு வேலி நிலமும் திருமெ . . . வாற்கு அரைநிலமும் உலகமுண்ட விண்ணகர் ஆழ்வாற்கு அரைநிலமும் தேவதான இறையிலியாக இடவும் கடவதாக பெற வேணும் என்றும் தொண்டைமான் நமக்கு சொன்னமையில், இப்படி செய்ய கடவதாக சொல்லி கணக்கிலும் இட்டுக் கொள்ளக் கடவர்களாக, வரிக்கு கூறு செய்வார்களுக்குச் சொன்னோம்; —— பிரசாதம் செய்த. . . வந்தருள கல்வெட்டிவித்தேன் கோயிற் கணக்கு உறையூருடையாநேன்.

**கல்வெட்டு : 25**

*இக*. 1943-44, 274. வாலிகண்டபுரம் – பெரம்பலூர் – திருச்சிராப்பள்ளி

குலோத்துங்கன் 1, 29 (1099)

—— வடகரை கரிகாலகன்ன வளநாட்டு வன்னாட்டு வாலிகண்புரத்து உடையார் திருவாலீச்வரமுடைய னாயனாற்கு, இன்னாடு காணி உடைய சுத்தமலன் செயங்கொண்ட சோழ வன்னாட்டுடையானேன்; இன்னாயனார் சீபாதத்திலே சென்று எனக்குப் பிள்ளை பிரஸாதித்தருள வேணும் ; நான் பொன் னாலே பட்டம் செய்து சாத்துகிறேனென்று இசைந்து போனவிடத்து, இந்த இசைவின்படி பிள்ளை பிரசாதித்தருளுதலால், நாந் சாத்தக்கடவேநாந பொந்நிந் பட்டத்துக்கு செலவாக, எனக்குக் காணியாய் வருகிற ஊர்களில் புகழமை பூண்டியை, ஊரமை உள்பட காணியாக நீர்வார்த்துக் கல்வெட்டிக் குடுத்தேந் செயங்கொண்ட சோழ வன்னாடுடையாநேந்.

**கல்வெட்டு : 26**

*இ.க.* 1943-44, 283. வாலிகண்டபுரம் – பெரம்பலூர் – திருச்சிராப்பள்ளி

குலோத்துங்கன் 1, 20 (1090)

—— வடகரை கரிகாலகன்ன வளநாட்டு வன்னாட்டு வாலிகண்டபுரத்து உடையார் திருவாலீச்வரமுடைய நாயனாற்கு இன்னாடு காணியுடைய சுத்தமல்லனான செயங்கொண்ட சோழ வன்னாடுடையானேன், கல்வெட்டிக் குடுத்த பரிசாவது; இன்னாட்டு எனக்குக் காணியான ஊர்களில் இன்நாயனாற்கு பூஜைக்கும் திருப்பணிக்கும் நான் நாயனார் ஸ்ரீ பாத₃தத்திலும், நாச்சியார் ஸ்ரீ ஹஸ்தத்திலும் நான் நீர் வார்த்துக் குடுத்த, தூங்கானையில் நிலம் ஒரு வேலியும், குன்றணியில் நிலம் ஒரு வேலியும், தெ₃ வையூரில் –ஒரு வேலியும், பகையிலியில் –ஒரு வேலியும், தண்ணையில் ஒரு வேலியும், சிறுகுடலில் ஒரு வேலியும், செங்குன்றத்தில் ஒரு வேலியும், இளம்பலூரில் ஒரு வேலியும், பாண்டையூரில் ஒரு வேலியும், அதுக்கனூர் ஒரு வேலியும், மாதேவி ஒரு வேலியும், கீரனூர் ஒரு வேலியும், அனுக்கூர் ஒரு வேலியும், சிறு விசலூர் ஒரு வேலியும், நெற்குப்பை ஒரு வேலியும், சாத்தன்பாடியில் ஒரு வேலியும், மேற் குறும்பூர் ஒரு வேலியும், விக்கிரமன்பட்டில் ஒரு வேலியும், பசுவனூர் ஒரு வேலியும், களரையூரில் ஒரு வேலியும் ஆக இன்னாயனாற்கு மருங்கு சூழ்ந்த ஊர்களில் வேலியால் வந்த நிலம் 20 வேலியால் வந்த நிலமும் —— திருநாமத்துக்காணி இறையிலியாக கல்வெட்டிக் குடுத்தேன்.

# பின்னிணைப்பு 8

## அருஞ்சொல் அகராதி

| | | |
|---|---|---|
| *அதிகாரக் கட்டமைப்பு* | : | Power Structure |
| *அரசு* | : | State |
| *அரசு அலுவலர் அமைப்பு* | : | Bureacracy |
| *அரசு வருவாய்* | : | Revenue |
| *ஆசிய உற்பத்தி முறை* | : | Asiatic mode of production |
| *இணைத் தொடர்பு* | : | Correlation |
| *இனமரபு வட்டாரம்* | : | Ethnic territory |
| *உற்பத்தி முறை* | : | Mode of production |
| *ஊர்* | : | *வெள்ளான் (வகை) ஊர்* ; Designation of ordinary or non-brahmin village |
| *ஊர் /ஊரார்* | : | The corporate body of ur composed of land lords |
| *ஊர் மன்றம்* | : | *ஊர் நிர்வாக மன்றம்* ; Administrative assembly of a village |
| *ஒப்பீட்டாய்வு* | : | Comparative study |
| *ஒருங்கிணைப்பு* | : | Integration |
| *கணபோக ஊர்* | : | Joint-type village |
| *கிராம சமூகம்* | : | Village community |
| *கீழ்த்திசை வல்லாட்சி* | : | Oriental Despotism |
| *குடி விலை* | : | *தனியார் செய்யும் (நில) விற்பனை;* Sale by individual proprietor |
| *குறுநிலவட்டம்* | : | Micro-region |
| *குற்றெல்லை ஆய்வு* | : | Micro-level research |
| *கூடுதல் உற்பத்தி* | : | Surplus |
| *கூறாக்க நிலை அரசு* | : | Segmentary State |
| *சபை* | : | *பிராமண ஊர்களின் ஊர் மன்றம்;* Assembly of Brahmin villages |
| *சமயக்குரவர் ஆதிக்கத்தில் உள்ள பாசன அரசு* | : | Theocratic Irrigation State |
| *சமூக உடைமை* | : | Communal ownership |
| *சமூகப் பெருக்கம்* | : | Social reproduction |
| *சமூக முன்னோடி* | : | Social Elites |

| | | |
|---|---|---|
| தனியார் உடைமை | : | Private land ownership |
| தீர்வை | : | Assessment |
| தொடக்க நிலை அரசு | : | Archaic State |
| நகரம் | : | வணிக ஊர்; Commercial village/town |
| நாட்டார் | : | நாடு என்ற நில அலகில் உள்ள நிலக்கிழமை கொண்ட சமூக நிர்வாக அமைப்பு |
| நிலக்கிழமை | : | Tenure |
| நிலக்கிழார் /உடையார் | : | Land holder/land owner |
| நிலமானிய முறை | : | Feudalism |
| நெறிசாராப் போக்கு | : | Arbitrary method |
| படிநிலை ஆக்கம் | : | Stratification |
| பட்டம் | : | Title |
| பண்ணைக் குடிமை | : | Serfdom |
| பதவி நிலை | : | Status |
| பரவல் | : | Distribution |
| பற்று | : | Land holding |
| பிரமதேயம் | : | பிராமண ஊர் |
| புள்ளியியல் முறை | : | Statistical method/quantitative method |
| பெருவிலை | : | அரசு ஏலத்தில் செய்யும் விற்பனை (குற்றவாளியின் நிலவுடைமைகளை அரசு எடுத்து விற்றல்) |
| ரயத்துவாரி ஊர் | : | Severalty-type village |
| வகுப்பு /வகுப்பார் | : | (சாதி), Caste |
| வகையுரு | : | Type |
| வட்டாரம் | : | Locality |
| வெள்ளான் (வகை) ஊர் | : | பிராமணர் ஊர் தவிர்ந்த பிற இயல்பான தொன்று தொட்டு வரும் ஊர்; Non-brahmin village |

# நோக்கு நூற் பட்டியல்

## I. கல்வெட்டு மூலங்கள்


**(அ) தமிழ் நூல்கள்**

*கன்னியாகுமரிக் கல்வெட்டுகள்,* (தொ.) நடன காசிநாதன்; இரா. நாகசாமி, 5 தொகுதிகள், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை (த.அ.தொ.து.), சென்னை, 1972, 1979.

*குடந்தைக் கல்வெட்டுகள்,* (தொ.) நா. மார்க்சீய காந்தி, த.அ.தொ.து., சென்னை, 1980.

*சாசனச் செய்யுள் மஞ்சரி,* எம்.எஸ். வெங்கடசாமி சென்னை, 1959, 157 பக்.

*சாசனத் தமிழ்க் கவிசரிதம்,* மு. ராகவையங்கார், மானா மதுரை, 1961. 225 பக்.

*செங்கம் நடுகற்கள்,* (தொ.) இரா. நாகசாமி, த.அ.தொ.து., சென்னை, 1972.

*சென்னை மாநகர்க் கல்வெட்டுகள்,* (தொ.) இரா. நாகசாமி, த.அ.தொ.து. சென்னை, 1970, 249 பக்.

*தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள்,* (தொ.) இரா. நாகசாமி, த.அ.தொ.து., சென்னை, 1969, 277 பக்.

*தருமபுரிக் கல்வெட்டுகள்,* (தொ.) இரா. நாகசாமி, த.அ.தொ.து., சென்னை, 1975, 148 பக்.

*திருத்துறைப்பூண்டி கல்வெட்டுகள்,* (தொ.) இரா. நாகசாமி, த.அ.தொ.து., சென்னை, 1978, 234 பக்.

*நன்னிலம் கல்வெட்டுகள்,* (தொ.) அ. பத்மாவதி, 3 தொகுதிகள், த.அ.தொ.து., சென்னை, 1978-80.

*பல்லவர் செப்பேடுகள் முப்பது,* தமிழ் வரலாற்றுக் கழகம், சென்னை, 1966, XXV, XXVI, 402, 10 பக்.

*பாண்டியர் செப்பேடுகள் பத்து,* தமிழ் வரலாற்றுக் கழகம், சென்னை, 1967, XXI, XXXII, 206, 66 பக்.

**(ஆ) ஆங்கில நூல்கள்**

*Annual Report on Indian Epigraphy,* for the years 1945-46, — Delhi.

*Annual Report on (South Indian) Epigraphy,* for the years 1887-1944/45, Madras.

*Archaeological Survey of Southern India.* Vol. II – *List of Inscriptions, and Sketch of the Dynasties of Southern India,* Robert Sewell, Madras, 1884, vii. 207 pp.

— Vol. IV – *Tamil and Sanskrit Inscriptions,* Jas. Burgess with trans. by S.M. Natesa Sastri, Madras, 1886. vi. 137 pp.

*Catalogue of Copper-plate Grants in the Govt. Museum Madras,* by R. Srinivasa Raghava Ayyangar, Madras, 1918. vi, 89 pp.

*Collection of the Inscriptions on Copper-plates and Stones in the Nellore District,* ed. Alan Butterworth and V. Venugopaul Chetty, 3 parts, Madras, 1905. Part I, x, 500 pp.; Part II, 501-1008 pp.; Part III, 1009-1520 pp.

*Copper-plate inscriptions belonging to the Sri Sankaracharya of the Kamakoti-pitha,* ed. T.A. Gopinatha Roa, Madras, 1916. 137 pp.

*Damilica* (Journal of the Tamilnadu State Department of Archaeology), Madras 1973.

*Early South Indian Palaeography,* T.V. Mahalingam, University of Madras, Madras, 1967. xii. 341 pp.

*Elements of South Indian Palaeography, from the Fourth to the Seventeenth Century* A.D., A.C. Burnell, 2nd & enl. ed., London, 1878. xii, 147 pp.

*Epigraphia Indica,* Calcutta/Delhi, 1892 –.

*Epigraphical Evidences for Tamil Studies,* A. Velupillai, International Institute of Tamil Studies, Madras, 1980. 188 pp.

*Historical Inscriptions of Southern India collected till 1932 and Outlines of Political History,* Robert Sewell, ed. S. Krishnaswami Ayyangar, University of Madras, Madras, 1932. vi, 451 pp.

*Indian Antiquary,* Bombay, 1872 - 1923.

*Indian Charters on Copper Plates, British Library,* ed. Albertine Gaur, London, 1975, xv, 41 pp.

*Indian Epigraphical Glossary,* D.C. Sircar, Delhi, 1966. xiv, 560 pp.

*Indian Epigraphy,* D.C. Sircar, Delhi, 1965. xxi, 475 pp. 36 pls.

*Indian Epigraphy and South Indian Scripts* (Bulletin of the Madras Govt. Museum, Vol. III, No. 4), C. Sivaramamurthi, Madras, 1952. vii. xiii, xii, 280 pp.

*Inscriptions in the Pudukkottai State, translated into English,* tr. K.R. Srinivasa Aiyar, Pudukkottai ; Part I, 1941. 124 pp. ; Part II, 1946. 125 - 245 pp.

*Inscriptions (Texts) of the Pudukkottai State arranged according to Dynasties*, anon., Pudukkottai, 1929. iv, ii, 653 pp.

*L' Epigraphie de Vijayanagar du debut à 1377*, by Vasundhara Filliozat, Publication de L' Ecole Francais d' Extreme-Orient, Vol.91, Paris, 1973.

*Lexicon of Travancore Inscriptions*, ed. R. Vasudeva Poduval, Trivandurm, 1947. 127 pp.

*List of Inscriptions copied by the Office of the Superintendent for Epigraphy, Madras*, C.R. Krishnamacharlu, Delhi, 1941. 136 pp.

*Seminar on Herostones*, ed. R. Nagaswamy, Madras, 1974. 110 pp.

*Seminar on Inscriptions — 1966, Speeches and Papers*, ed. R. Nagaswami, Madras, 1968. xv, 230 pp.

*South Indian Inscriptions* (Archaeological Survey of India)

— Vol. I – *Tamil and Sanskrit, from Stone and Copper-plate Edicts at Mamallapuram, Kanchipuram, in the North Arcot District, and other parts of the Madras Presidency, chiefly collected in 1886-87*, ed. & tr. E. Hultzsch, Madras, 1890.

— Vol. II – *Tamil Inscriptions of Rajaraja, Rajendra Chola and others in the Rajarajeswara Temple at Tanjavur*. Part I : ed. & tr. E. Hultzsch, Madras 1891. 119p. 5 pls; Part II : ed. & tr. E. Hultzsch, Madras 1892. pp. 121-248; Part III : ed. & tr. E. Hultzsch, Madras 1895. 249-393; Part IV : ed. & tr. V. Venkayya, Madras 1913. pp. 395-499; Part V : *Pallava Copper-Plate Grants from Velurpalayam and Tandantottam*, ed. & tr. H. Krishna Sastri, Madras, 1919. pp 501-86, xiii, 41 pp.

— Vol. III – *Miscellaneous Inscriptions from Tamil Country*, Part I : ed. & tr. E. Hultzsch, Madras, 1899. 123 pp. 5 pls.; Part II : ed. & tr. E. Hultzsch, Madras, 1903. pp. 125-219.; Part III : ed. & tr. H. Krishna Sastri, Madras, 1920. pp. 221-439. 13 pls.; Part IV : ed. & tr. H. Krishna Sastri, Madras, 1929, pp. 441-480, 43 pp. XVI 22 pp.

— Vol. IV – *Miscellaneous Inscriptions from the Tamil, Telugu and Kannada Countries and Ceylon*, ed. H. Krishna Sastri, Madras 1923, vi, 496 pp. 11 pls.

— Vol. V – *Miscellaneous Inscriptions from the Tamil, Malayalam, Telugu and Kannada Countries*, ed. H. Krishna Sastri, Madras, 1925. vi, 520 pp. 3 pls.

— Vol. VI – *Miscellaneous Inscriptions from the Tamil, Malayalam, Telugu and Kannada Countries*, ed. K.V. Subrahmanya Aiyer, Madras, 1928. vi, 495 pp. 5 pls.

— Vol. VII - *Miscellaneous Inscriptions from the Tamil, Malayalam, Telugu and Kannada Countries,* ed. K.V. Subrahmanya Aiyer, Madras, 1932, vi, 524 pp.

— Vol. VIII - *Miscellaneous Inscriptions from the Tamil, Malayalam, Telugu, and Kannada Countries,* ed. K.V. Subrahmanya Aiyer, Madras, 1937. v, 401 pp.

— Vol. XII - *The Pallavas,* ed. V. Venkatasubba Ayyar, Madras, 1943, xv, 204 pp. 8 pls.

— Vol. XIII - *The Cholas,* ed. G.V. Srinivasa Rao, Madras, 1952, ix, xvii.

— Vol. XIV - *The Pandyas,* ed. A.S. Ramanatha Ayyar, Delhi, 1962. x, xxxvii, 167 pp. 4 pls.

— Vol. XVII - *Inscriptions collected during the year 1903-04,* ed. K.G. Krishnan, Delhi, 1964, xiv, liv, 370 pp. 1 pl.

— Vol. XIX - *Inscriptions of Parakesarivarman,* ed. G.V. Srinivasa Rao, Delhi, 1970. xx, xix, 240 pp. 3 pls.

— Vol. XXII - *Inscriptions collected during the year 1905-06,* ed. G.V. Srinivaasa Rao, Part I, Delhi, 1983. x, 252 pp.

— Vol. XXIII - *Inscriptions collected during the year 1906-07,* ed. G.V. Srinivasa Rao, Delhi, 1979, xvii, xlvi, 436 pp.

— Vol. XXIV - *Srirangam Inscriptions,* ed. H.K. Narasimhaswami, New Delhi, 1982, XXII, 583, XXVI.

— Vol. XXVI - *Inscriptions collected during the year 1908 - 09,* ed. P.R. Srinivasan, New Delhi, 1990.

*South Indian Temple Inscriptions,* (Madras Govt. Oriental Series), ed. T. N. Subramaniam, Govt. Oriental Manuscripts Library, Madras. Vol. I : 1953. xxx, 541 pp.; Vol. II : 1954. xxxiv, pp. 542-1062.; Vol. III : Pt. I: 1955. clxxviii, pp. 1063-1294. Pt. II: 1957, xxviii, cxii, 252, 390, 1295-1610 pp.

*Tamil-Brahmi Inscriptions,* Iravatham Mahadevan, Madras, 1970, 15 pp.

*Tirumalai-Tirupati Devasthanam Epigraphical Series, Report on the Inscriptions of the Devasthanam Collections with Illustraations,* S. Subramanya Sastry, Madras, 1930, xxiv, 366 pp.

— Vol. I - *Early Inscriptions,* tr. and ed. S. Subrahmanya Sastry, Madras, 1931, viii, 273 pp.

*Topographical list of the Inscriptions of the Madras Presidency, Collected till 1915 with Notes and References,* by V. Rangacharya, 3 Vols., Madras, 1917, Vol. 1, vi. 710 pp.; Vol. II, pp. 711 - 1442 ; Vol. III, ii, pp. 1442 - 2070.

*Transactions of the Archaeological Society of South India,* Madraas, 1955.

*Travancore Archaeological Series,* Vol. I - IX, 1910 - 41

## II. துணை நூல்கள்

Alayev, L.B., *Juzhnaja Indija Socialjno-ekonomicheskaja Istorija XIV-XVIII Vekov,* Moskva, 1964.

Anderson, Perry, *Lineages of the Absolutist State,* London, 1974.

Appadorai, A., *Economic Conditions in Southern India (1000-1500 A.D.),* 2 vols., Madras, 1936.

Baden-Powell, B.H., *The Land Systems of British India,* 3 vols. Oxford, 1892.

— *The Indian Village Community,* London, 1896, Reprint, New Haven, 1957.

— *The Origin and Growth of Village Communities in India,* London, 1899.

Beaglehole. T.H., *Thomas Munro & the Development of Administrative Policy in Madras 1792-1818,* Cambridge, 1966.

Brown, C.P., (ed.), *Three Treaties on Mirasi Right,* Madras, 1852.

Champakalakshmi, R.,'Growth of urban centres in South India: Kudamukku-Palaiyarai, the twin-city of the Colas', *Studies in History,* vol. 1, no.1, 1979.

—, 'Peasant State and Society in Medieval South India: A Review Article', *Indian Economic and Social History Review,* vol. 18, nos. 3/4, 1982.

Dange, S.A., *India from Primitive Communism to Slavery,* Bombay, 1947.

Dharma Kumar, *Land and Caste in South India, Agricultural Labour in Madras Presidency in the Nineteenth Century,* Cambridge, 1966.

Dumont, Louis, 'The "Village Community" from Munro to Maine', in Dumont, *Religion, Politics and History in India,* Paris, 1970.

Ferminger, W.K., (ed.), *The Fifth Report from the select committee of the House of commons on the Affairs of the East India Company,* 28th July, 1812, London, 18 vols; Reprint, ed. A.M. Kelley, New York, 1926.

Frykenberg, R.E., 'The Silent Settlement in South India, 1793-1853: An Analysis of the Role of Inam in the Rise of the Indian

Imperial Sytem', R.E. Frykenberg (ed.) *Land Tenure and Peasants in South Asia,* New Delhi, 1977.

Gough, Kathleen, 'Mode of Production in Southern India , *Economic and Political Weekly,* Annual Number, February 1980.

—, *Rural Society in South East India,* Cambridge, 1981.

Gros. F., and Nagaswamy, R. *Uttaramerur: Legendes, Histoire, Monuments,* Pondicherry, 1970.

Grover, B.R., 'Nature of Land-Right in Mughal India', *Indian Economic and Social History Review,* vol. 1, no.1, 1963.

Gunawardana, R.A.L.H., 'The Analysis of pre-colonial Social Formations in Asia in the Writings of Karl Marx', *Indian Historical Review,* II - 2, 1976.

Habib, Irfan, *The Agrarian System of Mughal India,* 1565-1707, London, 1963.

—, 'Problems of Marxist Historical Analysis', *Enquiry,* New Series, vol. III no.2, 1969.

Hall, Kenneth R., *Trade and Statecraft in the Age of the Colas,* Delhi, 1980.

Hindess, B. and Hirst, P.Q., *Pre-Capitalist Mode of Production,* London, 1975.

Hudleston, W., (ed.), *Papers on Mirasi Right,* Madras, 1862.

Indrapala, K., 'Some Medieval Mercantile Communities of South India & Ceylon', *Journal of Tamil Studies,* vol. II, no. 2, 1970.

—, 'South Indian Mercantile Communities in Ceylon, circa 950-1250', *Ceylon Journal of Historical and Social Studies,* New Series,vol. I, no.2, 1971.

Jha, D.N., 'Early Indian Feudalism: Historiographical Critique' (Presidential Address to Section I at the Fortieth Session of the Indian History Congress, 1979).

—, *Studies in Early Indian Economic History,* Delhi, 1980.

Kadhirvelu, S., 'Sources for the History of Tamilnadu', *Studies on Agrarian Societies in South Asia,* No.5, Tokyo, 1980.

Karashima, Noboru, 'Land Donation to Hindu Temples in Medieval South India', *Journal of Asian and African Studies,* (in Japanese), No.2, Tokyo, 1969.

—, and Subbarayalu, Y., 'Valangai/Idangai, Kaniyalar and Irajagarattar: Social Conflict in Tamilnadu in the Fifteenth Century', *Socio-cultural Change in Villages in Tiruchirapalli*

*District, Tamilnadu, India,* Part I, ed. N.Karashima, Institute for the Study of Languages and Cultures in Asia and Africa, Tokyo, 1983.

Karashima. N., *South Indian History and Socity : Studies from Inscriptions, A.D. 850 - 1800,* Oxford University Press, Delhi, 1984.

—, *Towards a New formation : South Indian Society under Vijayanagar Rule,* Oxford University Press, Delhi, 1992.

Karashima, N., Subbarayalu, Y & Matsui, Toru; *A Concordance of the Names in the Cola inscriptions,* Sarvodaya Ilakkiya Pannai, Madurai, 1978.

Kosambi, D.D., *An Introduction to the Study of Indian History,* Bombay, 1956.

Krader, Lawrence, *The Asiatic Mode of Production,* Assen, 1975.

Krishna Sastri, H., 'Velvikudi Grant of Nedunjadaiyan: The Third Year of Reign', *Epigraphia Indica,* XVII, 1924.

Krishnan, K.G., *Studies in South Indian History and Epigraphy,* Madras, 1981.

Krishnaswamy, S.Y., 'Major Irrigation Systems of Ancient Tamilnadu', *Proceedings of the First International Conference-Seminar of Tamil Studies,* vol. 1, Kuala Lumpur, 1968.

Krishnaswamy Aiyangar, S.,*Evolution of Hindu Administrative Institutions in South India,* Madras, 1931.

Ladejinsky, W., *A Study of Tenurial Conditions in Package Districts,* New Delhi, 1965.

Mahalingam, T.V., *Administration and Social Life under Vijayanagar,* Madras, 1940; 2nd ed. Madras, 1970.

— 'Village Communities in South India', *Transactions of the Archaeological Society of South India,* Vol. 1, Madras, 1955.

— *South Indian Polity,* Madras, 1955.

— (ed.), *Mackenzie Manuscripts,* 2 vols.; Madras, 1972, 1976.

Minakshi. C., *Administration and Social Life under the Pallavas,* Madras, 1938.

Mukherjee, Nilmani, *The Ryotwari System in Madras 1792-1828,* Calcutta, 1962.

Mukherjee, N., and Frykenberg, R.E., 'The Ryotwari System and Social Organization in the Madras Presidency' in Frykenberg, ed. *Land Control and Social Structure in Indian History,* Madison, 1969.

Mukhia, Harbans, 'Was There Feudalism in Indian History?' *The Journal of Peasant Studies,* vol.8, No.3 1981.

Nagaswamy, R., *Gangaikondacholapuram,* Tamilnadu State Department of Archaeology, Madras, 1970.

Narayanan, M.G.S., *Reinterpretations in South Indian History,* Trivandrum, 1977.

Nilakanta Sastri, K.A., *The Pandyan Kingdom,* London, 1929;

—*Studies in Cola History and Administration,* Madras, 1932.

—*The Colas,* 2 vols. Madras, 1935 and 1937; 2nd, ed. Madras, 1955.

— *History of South India from Prehistoric Times to the Fall of Vijayanagar,* Oxford, 1955.

Pillay, K.K.,*The Suchindram Temple,* Madras, 1953:

Raman, K.V., *The Early History of the Madras Region,* Madras. 1959.

Rekishigaku Kenkyukai, ed. *Gendai Rekishigaku no Seika to Kadai* (Achievements and Tasks of Recent Historical Studies in Japan). No.2, Aoki Shoten, Tokyo, 1974.

Sampath, M.D.,*Chittoor through the Ages,* Delhi, 1979.

Shanmugam, P., *The Revenue System of the Cholas (850-1279)* New Era Publications, Madras, 1987.

Sharma, R.S., *Indian Feudalism,* c.300-1200, 2nd ed., Delhi, 1980.

Shibahara, Takuji, *Shoyu to Seisan-yoshiki no Rekishi-riron* (Historical Theory of Proprietorship and Production System), Aoki Shoten, Tokyo, 1972.

Sivakumar, S.S., 'Transformation of the Agrarian Economy in Tondaimandalam: 1760-1900', *Social Scientist,* No.70, 1978.

Sivakumar, S.S., and Chitra Kumar, 'Class and Jati at Asthapuram and Kanthapuram', *Economic and Political Weekly,* Annual Number, February 1979.

Spencer, George W., 'Temple Money-lending and Livestock Redistribution in Early Tanjore', *The Indian Economic and Social History Review,* vol.5, No.3, 1968.

—, 'Religious Networks and Royal Influence in Eleventh Century South India', *Journal of the Economic and Social History of the Orient,* XIII-1, 1969.

—, 'Royal Initiative under Rajaraja I', *Indian Economic and Social History Review,* vol.7, no.3, 1970.

— and Hall, Kenneth R., 'Toward an Analysis of Dynastic Hinterlands; The Imperial Cholas of 11th Century South India', *Asian Profile,* II-1, 1974.

Srinivas, M.N. and Shah, A.M., 'The Myth of the Self-sufficiency of the Indian Village', *Economic Weekly*, No.12, 1960.

Srinivasan, C.R., *Kanchipuram through the Ages*, Delhi 1979.

Srinivasan,S., *Studyof the History of Tirukkoyilur down to A.D. 1600*, Unpublished Ph.D. thesis, Karnatak University, 1980.

Stein, Burton, 'Medieval Coromandel Trade, In John Parker (ed.), *Merchants and Scholars*, Minneapolis, 1965.

—, 'Intergration of the Agrarian System of South India', in R.E. Frykenberg (ed.) *Land Control and Social Structure in Indian History*, Madison, 1969.

—, 'The State and the Agrarian Order in Medieval South India: A Historiographical Critique', Burton Stein (ed.), *Essays on South India*, Hawaii, 1975.

—, 'Circulation and the Historical Geography of Tamil Country', *Journal of Asian Studies*, XXXVII-2, 1977.

—, 'The Segmentary State in South Indian History', Richard G.Fox (ed.), *Realm and Region in Traditional India*, Delhi, 1977.

—, *Peasant State and Society in Medieval South India*, Delhi, 1980.

Stokes, H.J. 'The Custom of Kareiyid or Periodical Redistribution of Land in Tanjore', *Indian Antiquary*, Vol.3. 1984.

Subbarayalu, Y., *Political Geography of the Chola Country*, Madras, 1973.

—, *'The State in Medieval South India, 600-1350 A.D.* unpublished Ph.D. thesis, Madurai University, 1976.

—, 'The Peasantry of Tiruchirapalli District from the 13th to 17th Centuries', *Studies in Socio-Cultural Change in Rural Villages in Tiruchirapalli Distirct, Tamilnadu, India*, No.1 Tokyo, 1980.

Subrahmanya Aiyer, K.V., 'Largest Provincial Organization in Ancient India', *Quarterly Journal of the Mythic Society*, Vol.45 and 46, 1954 and 1955.

— and Vaidyanathan, K.S., 'The Kodumbalur Chiefs and the Revival of the Colas', *Quarterly Journal of the Mythic Society*, Vol. 43, 1953.

Thapar, Romila, *Past and Prejudice*, New Delhi, 1975.

—, 'State Formation in Early India', *International Social Science Journal*, XXXII, No.4, Paris, 1980.

—, *From Lineage to State*, Oxford University Press, New Delhi, 1984.

Tirumalai, R., *Studies in the History of Ancient Townships of Pudukkottai*, Madras, 1981.

Tokei, Ferenc, *Essays on the Asiatic Mode of Production*, Budapest, 1979.

Vanamamalai, N., 'State and Religion in the Chola Empire: Taxation for Thanjavur Temple's Music and Dance', *Social Scientist*, No.27, 1974.

——, 'Consolidation of Feudalism and Antifeudal Struggles during Chola Imperial Rule', *Proceedings of the Second International Conference-Seminar of Tamil Studies*, Madras, 1971.

Venkatarama Ayyar, K.R., 'Medieval Trade, Craft, and Merchant Guilds in South India', *Journal of Indian History*, XXV, 1947.

Venkataramanayya, N., *Studies in the History of the Third Dynasty of Vijayanagara*, 2 vols., Madras, 1935.

Venkatasami Row, T., A *Manual of the District of Tanjore in Madras Presidency*, Madras, 1883.

Wilson. H.H., *A Glossary of Judicial and Revenue Terms*, London, 1855, Reprint, Calcutta, 1940; Delhi 1968.

Wiser, W.H., *The Hindu Jajmani System*, Lucknow, 1936.

# பொருளகராதி

# ஆசிரியர் பற்றி



பேராசிரியர் நொபொரு கராஷிமா (பிறப்பு 1933) அவர்கள் இப்பொழுது தோக்கியோ பல்கலைக் கழகத்தில் தகைமைப் பேராசிரியராகவும் (Professor Emeritus), தயிஷோ பல்கலைக் கழகத்தில் (1994 முதல்) இந்தியவியல் பேராசிரியராகவும் உள்ளார். 1967-74 இல் தோக்கியோ அயல்மொழிகள் பல்கலைக் கழகத்தில் உள்ள ஆசிய ஆஃப்பிரிக்க மொழி, பண்பாடுகள் ஆய்வு நிறுவனத்தில் இந்திய வரலாற்று விரிவுரையாளர் மற்றும் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி விட்டு 1974-1993 இல் தோக்கியோ பல்கலைக் கழகத்தில் தென்னாசிய வரலாற்றுப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். ஆய்வின் பொருட்டு இந்தியாவுக்கு பலமுறை வருகை புரிந்துள்ளார். தோக்கியோ பல்கலைக் கழகத்தில் தென்னிந்திய வரலாற்றாய்வுக்கு ஒரு சிறப்பிடத்தை உருவாக்கிய பெருமை இவருக்குண்டு. சோழர்காலக் கல்வெட்டுக்களையும் விஜயநகர காலக் கல்வெட்டுக்களையும் சிறப்பாய்வுப் புலமாகக் கொண்டு தென்னகத்தில் நிலவுடைமை, சமூகம்

மற்றும் அரசமைப்பு ஆகியன பற்றி பல ஆய்வுகள் செய்துள்ளார். தென்னகம், தென்கிழக்காசியா, சீனா ஆகியவற்றுடன் கொண்ட வணிகப் பண்பாட்டு உறவுகளை ஆராய ஒரு இந்திய – ஜப்பானிய ஆய்வுக் குழுவை உருவாக்கி வழிநடத்தி வருகிறார். பல மாநாடுகளில் பங்கேற்றும், தலைமை தாங்கியும் உள்ளார். இந்தியக் கல்வெட்டியல் கழகத்திலும், உலகத் தமிழ் ஆய்வுக் கழகத்திலும் தொடக்க முதல் ஈடுபாடுடைய இவர் 1995, எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் தலைவராகத் தேர்வு செய்யப்பட்டுள்ளார். தாய்மொழியான ஜப்பானிய மொழியிலும், ஆங்கிலத்திலும் பல கட்டுரைகளும நூல்களும் எழுதியுள்ளார். பல நூல்களுக்கு கூட்டாகவும் தனியாகவும் பதிப்பாசிரியருமாவார்.

*சிறப்பாகக் குறிப்பிட வேண்டிய ஆசிரியரின் நூல்கள் :*

## I ஜப்பானிய மொழியில்

1. *இந்திய வரலாற்றில் கிராம சமூகங்கள் பற்றிய ஆய்வுகள்*, 1976 (பதிப்பாசிரியர்).
2. *இந்தியவை அறிமுகப்படுத்தல்*, 1976 (பதிப்பாசிரியர்).
3. *சிந்துவெளி நாகரிகம்*, 1980 (இணை ஆசிரியர்).
4. *இந்திய உலக வரலாற்றுருவம்*, 1985 (பதிப்பாசிரியர்).
5. *தென்னாசியா கலைக்களஞ்சியம்*, 1992 (பொதுப் பதிப் பாசிரியர்).
6. *திராவிட உலகம்*, 1994 (பதிப்பாசிரியர்).

## II ஆங்கிலத்தில்

1. *Socio-Cultural Changes in Villages in Tiruchirappalli District, Tamilnadu, India,* part I, *Pre-Modern Period, ILLCA, Tokyo, 1983 (Editor).*
2. *South Indian History and Society : Studies from Inscriptions, A.D. 850-1800,* OUP, Delhi, 1984.
3. *Indus Valley to Mekong Delta : Explorations in Epigraphy,* Madras, 1985 (Editor)
4. *Vijayanagar Rule in Tamil Country as Revealed through a Statistical Study of Revenue Terms in Inscriptions,* 2 parts, Tokyo, 1988, 1989 (Co-Author)
5. *Towards a New Formation: South Indian Society Under Vijayanagar Rule* OUP, Delhi, 1992.